E-mail : omsakthi-editorial@sakthisugars.com
omsakthieditorial@gmail.com

# ஓம் சக்தி

ஜனவரி 2018
விலை ரூ.15

நிறுவனர் :
நா. மகாலிங்கம்



CELEBRATING 33 YEARS
OF COMMITMENT TO EXCELLENCE IN
# HIGHER EDUCATION




KUMARAGURU
college of technology
character is life

ESTD. 1984



## KCT R&D
## INNOVATION thru RESEARCH & DEVELOPMENT

Anna University has recognized 10 Research Centers in several disciplines in the institution. Currently 25 patents are registered by the faculty and the students in KCT's Intellectual Property Rights (IPR) Cell.

**KC.IRI**
Providing research support to R&D organizations and SME/ MSME industries in the region.

**KCT TIFAC-CORE**
Technical consultancy for Textile/Apparel sector in development and testing.

**Ré**
Student run initiative for Research and Exploration.

**Garage**
Student involved Product Development - Research Center in Automotive sector.

**iQube**
A techno-incubator where ideas are transformed into reality.

KUMARAGURU CENTRE FOR INDUSTRIAL RESEARCH & INNOVATION KC.IRI







KCT TIFAC-CORE





10 R&D Centers + 13 UG/14 PG Programs + 16 Departments + 23 Acre Playground + 32 Student clubs
250+ International Papers yearly + 63 MoUs + 156 Patent Projects + 55 Species of Birds + 2703 Trees
FORGE incubates 20+ companies, and accelerates 100+ innovations
135+ Laboratories + 150 Acre Campus + 396 Faculty + 358 staff + 6000+ Students
12,000 Meals per day + 3000+ Hostel inmates
23,000 Alumni around the world
1 lakh+ Books in central library + 14.52 lakh sq.ft buildings
KCT TECH PARK with 7 MNCs and 1800 people
3 centres of Human Excellence + 1 Meditation hall

character is life
kct.ac.in

 /KCT.edu  /KCT_84  /KCTedu

 info@kct.ac.in  0422 2661100

# சுரங்கம்

**ம**காத்மா காந்தி, சிறுவர்களுக்கான கல்வியை மிகுந்த சிரமப்பட்டு உருவாக்கியவர். அவர் காலத்தில் வாழ்ந்த கல்விமான் டாக்டர் ஜாகீர் உசேன் அவர்களை, இந்தியக் கல்விமுறை ஒன்றை உருவாக்கித் தருமாறு காந்திஜி கேட்டுக் கொண்டார். அப்படி உருவானதுதான் "ஆதாரக் கல்வித்திட்டம்." உழைப்பும், படிப்பும் இணைந்த திட்டம் அது.

இதைப்பற்றி அருட்செல்வர் 22 ஆண்டுகளுக்கு முன்பு (1996) 'ஓம் சக்தி'யில் எழுதிய கட்டுரை இன்றைக்கும் பயனுள்ள அறிவுரையை நமக்குத் தருகிறது. மாண்டிசோரி கல்வி முறை ஐரோப்பிய அம்சங்களைக் கொண்டது. வாசகர்களுக்கு இம்மாத 'சுரங்கம்' பகுதியில் அது வெளியாகிறது.

– இ. ஆர்.

# மாண்டிசோரியும் மகாத்மாவும்

**க**ல்வி என்பதுதான் மனித வாழ்க்கைக்கு அடிப்படை. அதன்மீது தான் வாழ்க்கை என்ற நமது கட்டடமே எழுப்பப்படுகிறது.

கல்வியைப் பற்றி ஏராளமான ஆராய்ச்சிகள் எல்லா நாடுகளிலும் எல்லாக் காலங்களிலும் நடந்து கொண்டேதான் இருக்கின்றன. கல்வி ஆராய்ச்சியாளர்களில் இரண்டு மேதைகள் குறிப்பிடத்தக்கவர்கள். ஒருவர் மாண்டிசோரி. இன்னொருவர் மகாத்மா காந்தி.

டாக்டர் மேரியா மாண்டிசோரி என்ற அம்மையார் 1900–இல் உருவாக்கிய கல்வி முறைதான் மாண்டிசோரி கல்வி முறை. குழந்தையின் சுய சிந்தனையை வளர்க்கும் பாங்கில் அக்கல்விமுறை அமைந்தது.

பள்ளிக்கூடம் என்று சொன்னால், அங்கே படிக்கின்ற மாணவர்கள், எப்படி மனப்பாடம் செய்வது என்று கற்றுத் தருவதுதான் பள்ளிக்கூடத்தின் பணி என்று இப்போது ஆகிவிட்டது. மனப்பாடம் என்பது வேறு, சிந்தனை வளர்ச்சி என்பது வேறு. உண்மையில் குழந்தைக் கல்வியின் அடிப்படை, சிந்தனையைக் கூர்மையாக்குவது அல்ல.

அதற்குப் பதிலாக விரல்களுக்குச் சில வித்தைகளைக் கற்றுக் கொடுக்க வேண்டும். மாண்டிசோரி இதைத்தான் அறிமுகப்படுத்தினார்.

விளையாட்டின் மூலமாகவே அறிவை விருத்தி செய்வது மாண்டிசோரி கல்வியின் பயிற்சி முறை. இதனை Playway Method என்பார்கள். விளையாடுவதன் மூலம் அறிவுத்திறன் விருத்தியாகிறதோ, இல்லையோ, உடல் ஆரோக்கியம் நிச்சயம் அபிவிருத்தி அடையும்.

ஆரோக்கியமான ஒரு குழந்தை சுறுசுறுப்பான குழந்தையாகவே இருக்கும். சோம்பேறிக் குழந்தையாக இருக்காது. அறிவின் சிகரங்களை மிகச் சுலபமாக



**டாக்டர் நா. மகாலிங்கம்**



ஒரே ஒரு குறைபாடு, இது வசதி படைத்தவர் களுக்கு வகுக்கப்பட்ட கல்வி முறை.

இதற்கு உரிய ஆடம்பரச் சீருடைகள், அதற்கு ஆகும் செலவு, புத்தகங்கள், பூட்ஸ் கள், டைகள், பேக்குகள், வாக னவசதி, கல்விக்கட் டணம் இவற்றையெல்லாம் கவனித் துப் பார்த்தால் நடுத்தர, பாமர மக்கள் தங்கள் பிள் ளைகளை இக்கல்வி முறைக்கு அனுப்பி னால் கடனாளியாக நேரிடும். அவ் வளவு செலவு.

அடைய இந்தச் சுறுசுறுப்பு போதும். ஆகவேதான் மாண்டிசோரி, குழந்தை களை முதலில் விளையாடப் பழக்கி னார்.

விளையாட்டின் மூலம் குழந்தை களுக்கு விட்டுக்கொடுக்கிற மனப் பான்மை விருத்தி அடைகிறது. கூடி விளையாடுகின்ற சுபாவம் ஏற்படுகிறது. கூச்சப்படாமல் தைரியத்தோடு வளர் கின்ற பக்குவத்தையும் பெறமுடியும். அச்சமில்லாத அணுகுமுறைகளை ஒரு குழந்தை கற்றுக் கொள்கிற சூழ் நிலையை விளையாட்டின் மூலம் நிச் சயம் உண்டாக்க முடியும்.

அதை விட்டுவிட்டு, மனப்பாடம் செய்ய வைப்பதும், மனப்பாடம் செய்யத் தவறினால் மண்டி போடுகின்ற தண்டனைகளை வழங்குவதும், குழந்தைகளை உற்சாகம் இழக்கச் செய்துவிடும். அறிவு வளர்ச்சியின்மீது ஓர் அதிருப்தியை இது ஏற்படுத்திவிடும்.

மாண்டிசோரியின் இந்தக் கொள் கையை எதிரொலிக்கும் வகையில் 100 ஆண்டுகளுக்கு முன்பே மகாகவி பாரதி,

“ஓடி விளையாடு பாப்பா – நீ
ஓய்ந்திருக்கலாகாது பாப்பா
கூடி விளையாடு பாப்பா – ஒரு
குழந்தையை வையாதே பாப்பா”

என்று பாடினார்.

குழந்தை வேறு, பாப்பா வேறு அல்ல. இரு குழந்தைகளும் இணைந்து விளையாடவே இப்படிக் கூறினார்.

மாண்டிசோரி கல்விமுறை தமிழகத் தில் சென்ற 50 ஆண்டுகளாகப் பரவி வருகிறது. இந்தக் கல்வி முறையிலுள்ள

அங்கே ஆங்கிலமொழிதான் போதனா மொழியாக அமைந்துள்ளது. இந்தியப் பண்பாட்டுக்கு எந்த வழி யிலும் சம்பந்தமில்லாத நடை, உடை, பாவனைகளைத்தான் குழந்தைகளுக்கு அங்கே கற்றுத் தருகிறார்கள்.

செலவு செய்து, நமது குழந்தைகளை நாமே இழக்க வேண்டும். இதற்கு இன் னும் நாம் சம்மதித்துக் கொண்டிருக் கிறோம்.

“செலவு தந்தைக்கோர் ஆயிரம் சென்றது
தீது எனக்குப் பல்லாயிரம் சேர்ந்தன
நலம் ஓர் எள்துணையும் கண்டிலேன் – இதை
நாற்பதாயிரம் கோயிலில் சொல்லுவேன்”

என்று ஆங்கிலவழிக் கல்வியை அன்றே பாரதியார் எதிர்த்தார்.

மாண்டிசோரிக் கல்விமுறைக்கு ஒரு மாற்றாகத்தான் மகாத்மா காந்திஜி ஒரு புதிய கல்விமுறையைக் குழந்தைகளுக் காக உருவாக்கினார்.

அந்தக் கல்விமுறையில், அந்தக் குழந்தை வீட்டில் அணிந்துகொள்கிற உடையே பள்ளிக்கும் அணிந்து போக லாம். அதுமட்டுமல்ல, குழந்தைகளின் திறமையை எப்படி வளர்க்க வேண்டும் என்று காந்திஜி திட்டமிட்டார் என் றால், களி மண்ணில் பொம்மை செய்யச் சொன்னார். தக்களியில் நூல் நூற்கச் செய்தார். கீரைகளைப் பயிர் செய்யும் விவசாயத்தைப் பழகச் சொன் னார். இதன் மூலம் செலவு மிக்க அந் நிய நாட்டுக் கல்வியை இந்தியாவுக்கு ஏற்ற எளிய கல்வியாக மகாத்மா



ஆக்கினார்.

காந்திஜி குழந்தைகளுக்கு 8–ஆம் வகுப்புவரை கல்வி யைத் தாய்மொழியில்தான் கற்றுத்தர வேண்டும் என்று வலியுறுத்தி வந்தார். வினோபா அடிகளும் 8–ஆம் வகுப்பிற்குப் பிறகுதான் மாண வர்களுக்கு மற்ற மொழிகள் கற்றுத்தரப்பட வேண்டும் என்று குறிப்பிட்டுக் காரணத் தையும் விளக்கினார். அவருக்கு 18 மொழிகள் தெரியும்.

8–ஆம் வகுப்புவரை ஒரு மாணவன் தாய்மொழியை நன்கு கற்றுக்கொண் டால், அம்மாணவனுக்கு அம்மொழி யின் இலக்கண அமைப்பு மற்ற மொழி களைக் கற்றுக்கொள்ள உதவிகரமாக இருக்கும் என்கிறார்.

நமக்கு மும்மொழிக் கல்விமுறை தான் தேவை. அதன் மூலம்தான் நமது சுய அறிவைத் தாய்மொழியிலும், பிற மாநிலத் தொடர்புகளை ஓர் இந்திய மொழியிலும், உலகத் தகவல்களை ஓர் அந்நிய மொழியிலும் திரட்ட முடியும்.

இவ்வகையில், மகாத்மா காந்தி மிகச்சிறந்த ஒரு கல்வி விஞ்ஞானி. அவரைச் சுதந்திரப் போராட்ட வீரர் என்று மட்டுமே சுருக்கமாகச் சொல் கிறோம்.

உண்மையில், அவர் சமுதாயத்தின் சகல துறைகளைப் பற்றியும் சலிப்பின்றி ஆராய்ந்தவர். சரியான தீர்வுகளையும் கண்டவர். புதிய திசைகளைக் காட்டிய தீர்க்கதரிசி.

எதிர்கால இந்தியாவைப் பற்றி நாம் இப்போது கற்பனை செய்வது போலத் தான் இந்தியாவின் சுதந்திரத்திற்காகப் போர்க்கொடி ஏந்திக் கொண்டிருந்த காலத்திலேயே, காந்தியடிகள் அன்றைக்கு இன்றுள்ள இந்த இந்தியா எப்படி இருக்க வேண்டும் என்று கனவு காணவில்லை – கற்பனை செய்ய வில்லை – திட்டம் தீட்டிக்கொண்டிருந் தார்.

சுதந்திரத்திற்கு முன்கூட்டியே புதிய இந்தியாவின் கட்டுமானங்களைப் பற்றித் திட்டவட்டமான முடிவுகளைச் செய்து வந்தார் காந்தியடிகள்.

வார்தாவுக்கு அருகிலுள்ள சேவா கிராமத்தில் இந்திய நாட்டில் சுதந்திர தாகமுள்ள அறிஞர்களை எல்லாம் ஒன்று திரட்டி, நாட்டு முன்னேற்றத் திற்கான ஒரு கூட்டுச் சிந்தனையை உருவாக்க முயற்சி எடுத்தார்.

மதிப்பிற்குரிய அரியநாயகம், திரு வாளர் ஜே.சி. குமரப்பா, கிருபளானி முதலிய அறிஞர்களிடம் கிராமக் கைத் தொழில்களைப் பற்றித் திட்டமிட ஒப் படைத்தார்.

டாக்டர் ஜாகீர் உசேன் அவர் களிடம் சுதந்திர இந்திய நாட்டின் கல்வி முறை எப்படிப்பட்டதாக அமைய வேண்டும் என்பதைப் பற்றிய சிந்தனை களை உருவாக்கக் கேட்டுக்கொண்டார்.

எந்த அளவுக்கு உண்பது – எந்த உணவை உண்பது முதலிய விஷயங் களைப் பற்றி பூஜ்யர் வினோபாவே அவர்களைச் சிந்திக்கும்படி உற்சாகப் படுத்திவிட்டார்.

இயற்கை மருத்துவம் பற்றி டாக்டர் பல்சாலி என்ற மருத்துவ அறிஞரைத் திட்டம் ஒன்றை வகுக்கும்படிக் கேட்டுக் கொண்டார்.

சுதந்திர தாகமுள்ள அந்த இந்திய அறிஞர்கள் அருமையான முடிவுகளைச் செய்து 14 அம்சத் திட்டமாக காந்தியடி களின் தலைமையில் உருவாக்கி னார்கள்.

காங்கிரஸ் பேரியக்கம் அந்த 14 அம்சத் திட்டத்தை வரவேற்று, அதனை ஒரு தேசியத் திட்டமாகவே வரித்துக் கொண்டது. தேசத்தின் பட்டிதொட்டி களில் எல்லாம் இந்த 14 அம்சத்



பணம் பண்ணுகின்ற நிறுவனங்களாக உருவாகி இருக்கின்றனவே தவிர, அறிவு வளர்ச்சிக்கு நிலையங்களாக அவை அமையவில்லை.

உண்மையில் நமது தமிழ் வழி ஆரம்பப் பள்ளிகள், உயர்நிலைப்பள்ளிகள், மேல்நிலைப் பள்ளிகள் ஆகியவை அபிவிருத்தி அடைய வேண்டுமானால், அதற்கு முட்டுக்கட்டைகளாக இருப்பது 'நர்சரி ஸகூல்கள்'தான்.

திட்டத்தைப் பற்றியே காங்கிரஸ் சேனையின் தளபதிகளும், தொண்டர்களும் அன்று பேசி வந்தனர்.

*1935*–இல் சுமார் *60* ஆண்டுகளுக்கு முன்பு உத்தமர் காந்தியடிகள் தலைமையில் அறிமுகப்படுத்தப்பட்ட அந்த மகோன்னதமான *14* அம்சத் திட்டத்தை நாம் மறந்தே போய்விட்டோம்.

அவிநாசிலிங்கம் ஐயா அவர்கள் கல்வி அமைச்சராக இருந்த காலத்தில்தான் 'இங்கிலீஷ் மீடியம்' வகுப்பில் சேர்ந்து படிப்பது என்பது மிகவும் கடினமாக்கப்பட்டது. கல்வி இயக்குநரிடம் அனுமதி வாங்கித்தான் English Medium வகுப்புகளில் சேர்க்கும் நிலை அன்றைக்கு இருந்தது.

தமிழ்நாட்டில் *1962*–இல் திரு. காமராஜர் முதலமைச்சராக இருந்தபோதும், அதன்பிறகு முதலமைச்சராகப் பதவியேற்ற திரு. எம். பக்தவத்சலம் அவர்கள் காலத்திலும்தான் 'நர்சரி ஸ்கூல்கள்' தமிழ்நாட்டில் அறிமுகப்படுத்தப்பட்டன.

உயர்திரு. எம்.ஜி.ஆர். அவர்கள் முதல்வராக இருந்த காலத்தில் அவருக்குத் தெரிந்தோ, தெரியாமலோ இந்த நர்சரி ஸ்கூல்களுக்குத் தமிழக அரசின் ஆதரவு சற்று தாராளமாகக் கிடைக்கத் தொடங்கிவிட்டது.

முதன்முறையாக இலவசம் என்பது தமிழ்நாட்டில் இந்தக் கல்வித்துறையில் தான் தொடங்கியது. இலவசம், இனாம் என்பவற்றை காந்திஜி மிகக் கடுமையாக விமர்சித்தவர். உழைப்பைத்தான் அவர் உன்னதம் என்று கருதினார்.

'நர்சரி ஸ்கூல்கள்' இன்றைய தினம் நகரங்களிலும், நாட்டுப்புறங்களிலும்

மாநிலத்தில் உள்ள நர்சரி பள்ளிகள் அனைத்தையும் மூடிவிட வேண்டும். வள்ளுவர் சொன்னபடி, "நோய் நாடினால்" போதாது. "நோய் முதல் நாட வேண்டும்." நோய்க்கான மூல காரணம் எது? "நர்சரி ஸ்கூல்கள்"தான். ஆகவே தான் அவை மூடப்பட வேண்டும் என்று *20* ஆண்டுகளாகச் சொல்லி வருகிறேன்.

ஒரு தலைமுறையினர் இந்த விஞ்ஞான நூற்றாண்டோடு இவர்கள் சேர்ந்து வளராமல், வெகுதூரம் பின்தங்கி விடுகிறார்களே என்று கவலைப்படுகிறேன்.

ஒரு தேச மக்களை – அதுவும் சுதந்திரமடைந்த ஒரு தேச மக்களை சுயசிந்தனை அற்றவர்களாகச் செய்வதைப் போன்ற பாவம் வேறு எதுவும் இல்லை.

இந்தப் பாவம் பகிரங்கமாகப் பல ஆண்டுகளாக இங்கே செய்யப்படுகிறது. ஆகவே, 'இங்கிலீஷ் மீடியத்தில்' உள்ள நமது 'நர்சரி ஸ்கூல்கள்' அனைத்தும் தமிழ்நாட்டில் மூடப்பட வேண்டும். விளையாட்டுப் பள்ளிகள்தான் – அதுவும் தாய்மொழி மூலமாகப் பயிற்றுவிக்கப்பட வேண்டும்.

ஆரம்பப் பாடசாலைகளிலும், உயர்நிலை, மேல்நிலைப் பள்ளிகளிலும் தாய்மொழி மூலமாகவே கல்வி போதனை அமைய வேண்டும். கைத்தொழில் பாடங்களும், ஷிப்டு முறையும் இவற்றில் கட்டாயம் இடம்பெற வேண்டும்.

இவ்வாறெல்லாம் நடவடிக்கை எடுக்கப்படுமானால், நமது குழந்தைகளின் சுயசிந்தனை வளர்ச்சி, காந்திஜி காட்டிய பாதையில் சுதந்திரமான சூழலில் அமோகமாக அமையும் என்பதில் எவ்வித ஐயப்பாடும் இல்லை. ●

# பேராசான் ப.சு. ஐயாவின் நூற்றாண்டு விழா!

## மலர் வெளியீடு...




10.9.2017-இல் நடந்த மலர் வெளியீட்டு விழாவில் (இடமிருந்து) திருவாளர்கள் வி.பி. தண்டாயுதம், சண்முகசுந்தரம், பேரா. இருசு ஐயா, மேனாள் துணைவேந்தர் இ. சுந்தரமூர்த்தி, சுப்பிரமணியம், பொறியாளர் கா. முத்துசாமி, கற்பகம் பல்கலைக்கழகத் துணைவேந்தர் இரா. வசந்தகுமார், டாக்டர் பி.கே. கிருஷ்ணராஜ் வாணவராயர் ஆகியோர்.



பேராசான் ப.சு. ஐயாவின் நூற்றாண்டு விழாவைக் குத்துவிளக்கேற்றித் தொடங்கி வைக்கும் திருமதி கருணாம்பாள் வாணவராயர்.

# புத்தம் புது பூமி வேண்டும்!

வெ. ஜெயலட்சுமி



புத்தம் புது பூமி வேண்டும்! ஆம்
புகையில் புதையாத புத்தம் புது பூமி வேண்டும்!
பூமியெங்கும் பூஞ்சாரல் பொழிய வேண்டும்
பூஞ்சாரல் பொழிய புதிய மரக்கன்றுகள் நட வேண்டும்!

புத்துணர்ச்சியுடன் சுவாசிக்க பூங்காவனம் வேண்டும்
பூக்கள் எல்லாம் புன்னகை சிந்த வேண்டும்!
பூமித்தாய் குளிர்ந்திட புண்ணிய நதிகள் ஓட வேண்டும்
புண்ணிய நதிகள் யாவும் புராணக்கதைப் பேச வேண்டும்!

புழுதிபடராத புதிய பாதையில் பயணிக்க வேண்டும்
புதிய பாதை எங்கும் புல்லினங்கள் வளர வேண்டும்!
புல்லினங்கள் அசைந்திட பூந்தென்றல் வீச வேண்டும்
பூந்தென்றல் வீசி புவி வெப்பம் தணிய வேண்டும்!

புவி வெப்பம் தணிந்து புது வசந்தம் மலர வேண்டும்
புது வசந்தம் விரிந்து புது வருடம் பிறக்க வேண்டும்!
புது வருடம் பிறந்து புனிதம் காக்க வேண்டும்
புனிதம் காத்து மனிதம் மலர புத்தரும் தோன்றிட வேண்டும்!



கட்டுரை

பொறியாளர் ஏ.சி. காமராஜ்



தண்ணீர்த் தேவை என்பது நாளுக்கு நாள் அதிகரித்து கொண்டே வருகிறதே தவிர, குறைவதற்கு வாய்ப்பில்லை. பெருகி வரும் மக்கள் தொகை, தொழிற்சாலைகள் உருவாக்கம், பொருட்களின் உற்பத்தி அதிகரிப்பு, விவசாயம் முதலியவற்றின் அதிகரிப்பால் தண்ணீர்த் தேவை கூடுதலாகிறது.

மக்கள் குடிநீருக்காக அலையும் அவலநிலை நீடிக்கிறது. குடிநீருக்காகக் குடங்களைத் தூக்கிக் கொண்டு பெண்கள் பல மைல் தூரம் செல்ல வேண்டியுள்ளது. தண்ணீரை விலை கொடுத்து வாங்க வேண்டிய அவல நிலையும் ஏற்பட்டுள்ளது. விவசாயத்திற்கும் போதிய தண்ணீர் இல்லாமல் விவசாயிகள் தற்கொலை செய்து கொள்கிறார்கள். சென்ற 22 ஆண்டுகளில் 12 லட்சம் விவசாயிகள் உயிரை மாய்த்துக்கொண்டுள்ளனர்.

நியூயார்க் பல்கலைக்கழகம் 2011–ஆம் ஆண்டு நடத்திய ஆய்வறிக்கையின்படி இந்தியாவில் ஒவ்வொரு 30 நிமிடத்திற்கு ஒரு விவசாயி தற்கொலை செய்துகொள்கிறார். காரணம் தண்ணீர் இல்லை. விளைச்சல் இல்லை. கடன் தொல்லை.

இந்தியாவில் நிலத்தடி நீர் ஒவ்வோராண்டும் குறைந்து கொண்டே வருகிறது. மதுரை முதலிய நகரங்களில் முன்பு 10 மீட்டர் ஆழத்தில் கிடைத்த தண்ணீர் இன்று 300 மீட்டர் ஆழத்திலும் கிடைக்கவில்லை. இந்நிலையை மாற்றாவிட்டால், பத்து ஆண்டுகளில் 1000 மீட்டர் ஆழத்தில்கூடத் தண்ணீர் கிடைக்காது.

நம் நாட்டில் மழைக் காலங்களில் பல மாநிலங்களில் மிகுந்த வெள்ளம் ஏற்பட்டுப் பெருத்த உயிர்ச் சேதத்தையும், பொருட் சேதத்தையும் ஏற்படுத்துகிறது. மழை நீரை நாம் முறையாகச் சேமித்துப் பயன்படுத்தாத காரணத்தினால் நாட்டு வளம், காட்டு வளம் குறைகிறது. அத்துடன் சுற்றுச்சூழல் மாசுபடுகிறது. அதே சமயம், சில இடங்களில் மிகுந்த வறட்சி காணப்படுகிறது.

இத்தகைய வறட்சியால் பூமியில் நீரின் அளவு குறைந்து பயிர் செய்ய முடியாத நிலை உருவாகியுள்ளது. ஆறுகள், குளங்கள், ஓடைகள் மற்றும் கிணறுகள் வறண்டு போகின்றன. இந்தியாவில் உள்ள அனைத்து மக்களுக்கும், அனைத்துத் தொழில்களுக்கும், தேவையான அளவு நீர் மட்டுமல்ல, அதைவிடப் பல மடங்கு அதிகமாகவே நம்மிடம் நீர்வளம் உள்ளது. இருந்த போதிலும் இந்தியாவில் வருடா வருடம் மிக அதிகச் சேதத்தை விளைவிக்கக் கூடிய மிகக் கொடூரமான வெள்ளப்பெருக்குகளும், மிகக் கடுமையான வறட்சியும், நடந்த வண்ணம்தான் இருக்கின்றன.

மக்களின் வாழ்வாதாரங்களில் ஒன்றான

# அருட்செல்வரின் கனவுத் திட்டம் “நவீன நீர்வழிச்சாலை” 2






தேசிய நீர்வள மேம்பாட்டு ஏஜென்சியின் நதிநீர் இணைப்புத் திட்டம்

குடிநீருக்குக்கூட மிகப்பெரிய பற்றாக்குறை நிலவி வருகிறது. அச்சூழ்நிலையில் பெருகி வரும் மக்கள் தொகைக்கேற்ப, விவசாயத்தைப் பெருக்கி, உணவு உற்பத்தியை அதிகரிக்க வேண்டிய சூழ்நிலைக்கு நாம் தள்ளப்பட்டிருக்கிறோம். இதற்கேற்பத் தண்ணீர் தேவையும் அதிகரிக்கிறது.

மேலும் குடிப்பதற்கும், தொழிற்சாலைகளுக்கும் போதுமான தண்ணீர் வசதி செய்து கொடுக்க முடியாமல் அரசு திணறுகிறது. அதிக ஆழத்திலிருந்து நாம் நீரை எடுக்கும்போது பூமியின் ஆழத்திலுள்ள தாதுப் பொருட்களின் ரசாயனக் கலவை நீரில் கலந்து கிடைக்கிறது. இவ்வகை நீரினை நாம் உபயோகப்படுத்துவதினால் பல வகை நோய்கள் உருவாகின்றன.

நம்முடைய நீர்வளம் அனைத்து அரேபிய நாடுகளிலுமுள்ள எண்ணெய் வளத்தைவிட அதிகம் என்கிறார்கள். ஆனால் அதை நாம் வீணடித்துக் கொண்டிருக்கின்றோம்.

இன்று நாட்டின் மிகப் பெரிய பிரச்சனையாக உருவாகி வரும் தண்ணீர்ப் பிரச்சனைக்கு நிரந்தரத் தீர்வு காணும் வகையில் பல அறிஞர்கள் திட்டங்களை வகுத்திருக்கிறார்கள். ஆனால், இது வரை எந்தத் திட்டமும் செயல்படுத்தப் படவில்லை. ஏன் என்று பார்ப்போம்.

**சர். ஆர்தர் காட்டன் :** ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்திலே பொறியாளர். சர். ஆர்தர் காட்டன் அவர்கள் நீர்வழிச்சாலை மூலமாக நதிகளை இணைப்பதற்கு வித்திட்டார். சர் ஆர்தர் காட்டன் இந்தியாவில் நீர்வளமானது தேவைக்கு மேல் பத்து மடங்கு அதிகமாக இருப்பதாகக் கூறினார். ஆனால் ஆங்கிலேய அரசு இவரது திட்டத்திற்கு ஒப்புதல் அளிக்கவில்லை.

**கே.எல்.ராவ் :** நாட்டு விடுதலைக்குப் பின், நதிகளை இணைப்பதன் மூலமாக நீர்வளத்தைப் பெருக்கி, நாட்டைப் பல்வேறு வகைகளில் மேம் படுத்தலாம் என்று எண்ணிய பொறியாளர் திரு.கே.எல். ராவ் அவர்கள், கங்கை



லண்டன் சென்றிருந்தபோது தனது துணைவியார் திருமதி. தமிழ்மணியுடன் ஏ.சி. காமராஜ்

காவிரி இணைப்புத்திட்டம் என ஒரு திட்டத்தை உருவாக்கினார். அவரது திட்டத்தை அமல்படுத்த வேண்டும் என்ற நோக்கத்தில் அன்றைய பாரதப் பிரதமர் திரு.ஜவஹர்லால் நேரு அவர்கள் இவரை அமைச்சராக்கினார். இவரது திட்டத்தில் விந்திய மலையைக் கடப்பதற்கு மிகப்பெரிய அளவில் நீரேற்றம் (பம்பிங்) செய்ய வேண்டியிருந்தது. அதற்கு இந்தியாவில் உற்பத்தியாகும் மின்சாரத் தில் பெருமளவு தேவைப்பட்டதால் இந்தத் திட்டமும் அன்றைய அரசால் கைவிடப்பட்டது.

**கேப்டன் தஸ்தர் :** கேப்டன் தஸ்தர் அவர்கள் நதிகளை 'மாலைக் கால்வாய்' மூலம் இணைக் கும் திட்டத்தைத் தயாரித்து அரசுக்கு அளித்தார். இந்தத் திட்டத்தின்படி இந்தியாவிலுள்ள அனைத்து ஆறுகளையும் இணைக்க முடியும் என்று அறிவித்தார். ஆனால் பின், இவரது திட்டம் பொருளாதார ரீதியாகச் செயல்படுத்த இயலாது என்று அரசு முடிவு செய்து, திட்டத்தைக் கைவிட்டுவிட்டது.

**தேசிய நீர்வள மேம்பாட்டு ஏஜென்சி உருவாக்கமும், நதிகள் இணைப்புத் திட்ட மும் :** மாண்புமிகு முன்னாள் பிரதமர் திருமதி. இந்திரா காந்தி அவர்கள் நதிகள் இணைப்பிற்கு நீர்வளத்துறை அமைச்சகத் தின் முன்னாள் செயலாளர் திரு.சி.சி. படேல் அவர்களிடம் உடனடியாக ஒரு திட்டத்தைத் தயாரித்துக் கொடுக்குமாறு கேட்டதற்கிணங்க, திரு.சி.சி.படேல் ஒரு திட்டத்தைத் தயாரித்தார். இத்திட்டத்தைத் தான் நாடு முழுவதும் நதிகள் இணைப்புத் திட்டமாக அரசு அறிவித்தது.

இத்திட்டத்தைச் செயல்படுத்த முன்னாள் பிரதமர் திருமதி. இந்திரா காந்தி அவர்கள் 1982–ஆம் ஆண்டு தேசிய நீர்வள மேம்பாட்டு ஏஜென்சி (NWDA) என்ற அமைப்பை உருவாக்கினார். இவ்வமைப்பு நாடு முழுவதற்கும் 30 இணைப்பிற்கான ஆய்வினை மேற்கொண்டது. ஒரு சில இணைப்புகளுக்குத் தவிர வேறு எந்த இணைப்பிற்கும் ஆய்வு முடிக்கப் படவில்லை. ஆனால் இந்தத் திட்டத்தைப் பல மாநிலங்கள் எதிர்க்கின்றன. தங்கள் மாநிலத்தின் தண்ணீர் மற்ற மாநிலங்களுக்குப் போய்விடுமோ என்ற அச்சத்தின் காரணமாகப் பல மாநிலங்கள் இத்திட்டத்தை ஏற்க மறுக்கின்றன. தங்கள் மாநிலங்களின் எதிர்காலத் தேவைக்கு இந்த உபரி நீர் தேவைப்படும் என நினைக்கின்றன. மேலும் தண்ணீரைப் பகிர்ந்து கொள்வதில் மாநிலங்களிடையே பிரச்சனைகள் எழும் என்ற ஐயமும் இருக்கின்றது.

மேலும் இத்திட்டத்தில் தண்ணீரை பம்ப்பிங் செய்து கொண்டு வரவேண்டும். பம்ப்பிங் செய் வதற்கு ஏராளமான மின்சாரம் தேவைப்படுவதுடன் செலவும் ஒவ்வோராண்டும் பல ஆயிரம் கோடி களாக இருக்கும். இந்தத் திட்டத்தினால் அதிக அளவில் மின் உற்பத்தி செய்ய இயலாது என்பது தொழில்நுட்ப ரீதியாகக் கண்டுபிடிக்கப்பட் டுள்ளது. இத்திட்டத்தின் மூலம் வெள்ளத்தைக் கட்டுப்படுத்துவதும் மிக மிகக் குறைவு.

இத்திட்டத்தைத் தங்கள் மாநிலங்களில் நிறைவேற்றுவதைப் பல மாநிலங்கள் எதிர்க் கின்றன. குறிப்பாக ஆந்திரா, கேரளா, கர்நாடகா முதலிய மாநிலங்கள் நதிகள் இணைப்புத் திட்டத்திற்கு எதிர்ப்புத் தெரிவிக்கின்றன. எனவே பல்வேறு குறைபாடுகளையும் பிரச்சனைகளையும் கொண்டுள்ள நதிகள் இணைப்புத் திட்டத்தைச் செயல்படுத்தச் சாத்தியக்கூறுகள் மிகக் குறைவு.



முன்னாள் பிரதமர் திரு. மொரார்ஜி தேசாயுடன்
திரு. ஏ.சி. காமராஜ்

இச்சூழ்நிலையில் நதிகளைப் பிணைக்கக் கூடியதும், மாநிலங்கள் ஏற்றுக் கொள்ளக் கூடியதும், பொருளாதாரச் சாத்தியங்கள்

நிறைந்ததுமாகிய ஒரு திட்டத்தை உருவாக்கிட வேண்டும் என்ற எனது ஆழ்ந்த சிந்தனையில் விளைந்த சரியான மாற்றுத் திட்டம்தான் ''கங்கா குமரி தேசிய நீர்வழிச்சாலைத் திட்டம்'' என்றழைக்கப்படும் ''நவீன நீர்வழிச்சாலை.''

இத்திட்டத்தினைச் செயல்படுத்த என்னுடன் நூற்றுக்கும் மேற்பட்ட பொறியாளர்கள் இணைந்து செயல்பட்டு வருகின்றனர். இதுவே அருட்செல்வரின் கனவுத் திட்டம்.

கங்கா – குமரி தேசிய நீர்வழிச்சாலை என்பது அடிப்படையில் நதிநீரைப் பிணைக்கும் திட்டமாகும். இந்தத் திட்டத்தின் சிறப்பு அம்சம் என்னவென்றால், இத்திட்டத்தின் மூலமாக உயிர் சேதத்தையும், பொருட்சேதத்தையும் ஏற்படுத்தி உபயோகப்படாமல் கடலில் சென்று கலக்கும் வெள்ளநீரை மட்டுமே எடுத்துக்கொண்டு அதனைத் தேக்கி வைத்துக்கொண்டு பின்னர் அதனைத் தேவையான இடங்களுக்குத் தேவையான நேரத்திற்குக் கொடுப்பதே மைய நோக்கமாகும். இதன் மூலம் வெள்ளச் சேதத்தையும், வறட்சியையும் வெகுவாகக் கட்டுப்படுத்த முடியும்.

எந்தவொரு திட்டத்தின் உருவாக்கத்திற்கும் நிச்சயமாக ஒரு பின்னணி இருக்கும். அதுபோல இத்திட்டம் உருவாகக் காரணம் என்ன என்பது பற்றித் தெரிந்துகொள்ளச் சற்றுப் பின்னோக்கிப் பார்ப்போம்.

**நா**ன் ஒரு விவசாயக் குடும்பத்தைச் சார்ந்தவன். என்னுடைய பொறியாளர் படிப்பை முடித்தவுடன் வீரவநல்லூரில் இளநிலைப் பொறியாளராகப் பணியில் சேர்ந்தேன். பின் நேரிடையாகப் பொதுப்பணித் துறையில் உதவி நிர்வாகப் பொறியாளரானேன். அதன்பின் ஸ்ரீவைகுண்டத்தில் கட்டடம் மற்றும் நீர்ப்பாசனத்துறைகளின் பொறுப்பினை ஏற்றுக்கொண்டேன். அங்கு நீர்பாசனத்திற்குப் போதுமான தண்ணீர் இல்லை. வற்றாத ஜீவநதியான தாமிரபரணி ஆறு இருந்தும் அங்கும் தண்ணீர்ப் பிரச்சினை. அதனால் அங்குள்ள விவசாயிகள் மிகவும் கஷ்டத்துக்குள்ளாகினர். 'வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்' என்ற வள்ளலாரின் கூற்றின் படியே பயிர்கள் வாடுவதைப் பலமுறை நேரில் கண்டு மனம் வெதும்பினேன்.

தங்களுடைய பாசன நிலங்களுக்குத் தண்ணீர் கேட்டுச் சாரைசாரையாக விவசாயிகள் வந்து என்னைச் சந்தித்து கொண்டே இருப்பார்கள். நாள் முழுவதும் இரவு பகல் பாராது அவர்கள் குறையைக் கேட்டுத் தீர்த்து வைக்க ஏராளமான முயற்சிகள் எடுத்துக்கொண்டேன். தண்ணீர்ப் பற்றாக்குறை காரணமாகப் பல இடங்களில் பயிர்களுக்குச் சுமார் 40 நாட்களுக்கு மேலாகத் தண்ணீர் கொடுக்க முடியாது. இதனால் பயிர்கள் வாடின. (ஆனால் மடியவில்லை). பிறகு தண்ணீர் கொடுத்து அந்தப் பயிர்களைக் (நெற்பயிர்களை) காப்பாற்றினேன்.

விவசாயிகளுக்குத் தண்ணீர்ப் பிரச்சனைகள் வரும்போதெல்லாம் இவற்றிற்கு நிரந்தரத் தீர்வுதான் என்ன? என்பது பற்றி ஆழ்ந்து சிந்திக்கலானேன். அப்போது நதிநீர் இணைப்பு ஒன்றுதான் எனக்குத் தெரியும். அதுவே இதற்குத் தீர்வாக அமையும் என்று எண்ணினேன். ஏனெனில் ஒரு புறம் ஏராளமான வெள்ளம், வெள்ளச் சேதம், மறுபுறம் வறட்சி. நதிகளை இணைத்தால் இந்தப் பிரச்சனை தீரும். ஆகவே நதிகளை இணைக்க வேண்டும் எனக் குரல் கொடுத்தேன். இதற்காக மற்ற நாடுகளில் நீர் வளத்தை எப்படி உபயோகிக்கிறார்கள் என அறியவும் விரும்பினேன்.

இந்தச் சூழ்நிலையில், இங்கிலாந்து மக்களின் வாழ்க்கைத்தரம், இயற்கை வளங்கள், தொழில்நுட்பங்கள் முதலியவற்றை அறிந்து கொள்ளவும், மேற்படிப்பைப் பயிலவும் லண்டன் செல்லும் வாய்ப்புக் (காமென்வெல்த் ஸ்காலர்ஷிப்) கிடைத்தது. ஆனால், பொதுப்பணித் துறையில் நான் சென்றுவிட்டால் இங்கு பணிகள் மிகவும் பாதிப்படையும் என்று எண்ணி எனக்கு அனுமதி அளிக்க மறுத்துவிட்டனர்.

ஆகவே, நான் பொதுப்பணித்துறையில் விடுப்புக் கேட்டு இங்கிலாந்து செல்ல முடிவு செய்தேன். அதுவும் நீண்ட போராட்டத்திற்குப் பின் அனுமதி பெற்று இங்கிலாந்து சென்றேன். பல்வேறு விஷயங்களைக் கற்றறிந்தேன். அங்கு எனக்குக் கிடைத்த நல்ல பணியைக்கூட விட்டு விட்டு நம் நாட்டு மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்தும் உயரிய நோக்கம் ஒன்றையே என்னுடைய லட்சியமாகக் கொண்டு, தாயகம் திரும்பி இந்தியாவின் தண்ணீர்ப் பிரச்சனையை எவ்வாறு தீர்க்கலாம் என்பது பற்றித் தீவிரமாகச் சிந்திக்கலானேன். இந்த நோக்கத்திற்காக எனது, பொதுப்பணித்துறைப் பணியையே ராஜினாமா

செய்துவிட்டுப் பொது வாழ்வில் என்னை முழுவது மாக ஈடுபடுத்திக் கொண்டேன்.

நதிகளை இணைப்பதன் மூலம் தண்ணீர்ப் பிரச்சனையைத் தீர்க்க முடியும் என்பதைக் கண்ட றிந்து, நதிகள் இணைப்புத்திட்டமான திரு. கே. எல்.ராவ் திட்டம், கேப்டன் தஸ்தர் திட்டம் போன்ற திட்டங்களுக்கு மிகுந்த ஆதரவு அளித்தேன்.

**மொரார்ஜி தேசாய் அவர்களின் பங்கு:** முன்னாள் பாரதப் பிரதமர் மாண்புமிகு திரு. மொரார்ஜி தேசாய் அவர்களின் மந்திரி சபையில் மின்சாரத்துறை அமைச்சராகப் பொறுப்பேற்றிருந்த மாண்புமிகு அமைச்சர் திரு. இராமச்சந்திரன் அவர்கள், காரைக்குடி சிக்ரி நிறுவனத்தின் நிகழ்ச்சியில் கலந்துகொள்ள வந்தபோது, என் னையும் உடன் காரில் வரும்படி அழைக்கவே, அவ ருடன் சுமார் ஒரு மணி நேரத்திற்கும் மேலாகப் பயணம் செய்யும் நேரத்தினைப் பயன்படுத்திக் கொண்டேன். கேப்டன் தஸ்தர் அவர்களின் திட்டத்தைப் பற்றி விளக்கினேன்.

அன்றைய சூழ்நிலையில் கங்கை நதியைச் சுத்தப்படுத்தவும், நீர் ஆதாரத்தைப் பெருக்கவும் அரசு சுமார் ரூ.2000 கோடிக்குத் திட்டம் தீட்டி யிருந்தது. கேப்டன் தஸ்தர் திட்டத்தை மாண்புமிகு அமைச்சர் திரு. இராமச்சந்திரன் அவர்களிடம் விளக்கிக் கூறியவுடன், இத் திட்டத்தைப் பிரதமர் திரு.மொரார்ஜி தேசாய் அவர்களிடம் கலந்து ஆலோசிப்பதாக உறுதி யளித்தார். அவர் டெல்லி சென்றவுடன் பிரதமர் அவர்களிடம், இது பற்றி எடுத்துரைத்துள்ளார்.

இந்தச் சம்பவம் நடந்த ஒரு வார காலத் திற்குள் இதன் பயனைச் சரியாகத் திட்டமிட்டு, பிரதமர் திரு.மொரார்ஜி தேசாய் அவர்களால் ரூ.15,000/– கோடி செலவில் நதிகள் இணைப்புச் செய்யப்படும் என்று அறிவிப்பு பத்திரிகைகளில் தலைப்புச் செய்தியாக வெளிவந்தது. ஆனாலும் பல்வேறு காரணங்களால் இத்திட்டங்கள் கைவிடப்பட்டன. மேலும் மத்திய அரசின் ஆய் வில் இருக்கும் நதிகள் இணைப்புத் திட்டத்தில் உள்ள பிரச்சனைகள், குறைபாடுகளைக் கண்ட றிந்து அத்தகைய திட்டங்கள் நிறைவேற சாத்திய மில்லை என்பதை உணர்ந்தபடியால் சாத்திய மான, அரசிற்கும் பொருளாதாரச் சுமையில்லாத, மாநிலங்கள் ஏற்றுக்கொள்ளக்கூடிய திட்டம் ஒன்றை வடிவமைக்க விரும்பி அதைச் செய்து


பொதுப்பணித் துறையில் பணியாற்றிய போது...

முடித்தேன். அந்த வடிவமைப்பே "கங்கா – குமரி தேசிய நீர்வழிச்சாலைத் திட்டம்."

திரு. வாஜ்பாய் அவர்கள் பாரதப்பிரதமராக இருந்த போது, நதிகள் இணைப்புத் திட்டத்தில் இருந்த குறைகளைக் கண்டறிந்து அதிலுள்ள குறைகளைக் களையும் பொருட்டு நதிகள் இணைப்பு சிறப்புச் செயலாக்கக் குழு (Task Force - ILR) ஒன்றை ஏற்படுத்தி அதற்கு திரு. சுரேஷ் பிரபு அவர்களைத் தலைவராக நியமித்தார்.

வறட்சிக்கு நிவாரணம் நதிநீர் இணைப்பு ஒன்றே என்று அறிந்த சுரேஷ் பிரபு அவர்கள், அதிலுள்ள பல்வேறு குறைபாடுகளை அறிந்து நாடுமுழுவதும் நதிகள் இணைப்பிற்கு மாற்றுத்திட்டங்களை வரவேற்றார். நாடு முழுவ திலும் இருந்து ஏராளமான திட்டங்கள் வந்தன. மூன்று நாட்கள் சுரேஷ் பிரபு தலைமையிலான குழு அரசு சாராத IIT (Indian Institute of Technology) பேராசிரியர்கள் மற்றும் வல்லுநர் கள் மூலம் அனைத்துத் திட்டங்களையும் ஆராய்ந் தது. அதில் தேசிய நீர்வழிச்சாலைத் திட்டமும் ஒன்று. வல்லுநர்கள் முன்னிலையில் சுமார் 4 மணி நேரம் தேசிய நீர்வழிச்சாலைத் திட்டம் ஆய்வு செய்யப்பட்டது.

இறுதியாக, நதிகள் இணைப்புச் செய லாக்கக் குழுத் தலைவர் திரு. சுரேஷ் பிரபு அவர்கள் ‘‘கங்கா – குமரி தேசிய நீர்வழிச்சாலைத் திட்டமே நதிகள் இணைப்புத் திட்டத்திற்கு மிகச்சிறந்த மாற்றுத் திட்டம்’’ என அறிவித்தார்.

இத்திட்டம் பற்றிய முழு விபரம் அடுத்த இதழில் ......

**(தொடரும்)**

கட்டுரை


மோகன்தாஸ் கரம்சந்த்

உலகத்தின் பூஜையறை என்று உலகோரால் கொண்டாடப் படும் பாரத பூமி ஊழிதோறும், காலந்தோறும் சில ஆன்ம ஆற்றல் படைத்த மனிதர்களை உருவாக்கிக் கொண்டேதான் இருந்து வரு

முன்னும் 19–ஆம் நூற்றாண்டில் தோன்றியவர்தான் உலக அரங்கில் ‘மகாத்மா’ எனக் கொண்டாடப்படும் காந்தியடிகள்.

இந்திய தேசத்தின் விடுதலை என்பது ஒருநாள் போராட்டம் அன்று. அது 400 ஆண்டுகாலப் போராட்

# காந்தியடிகளின் பார்வையில் தமிழும் தமிழரும் தமிழகமும்

முனைவர் அ. வெண்ணிலா இராஜேஷ்

கின்றது. வனத்தில் விலங்குகளை வேட்டையாடிக் கொன்று பிழைத்துக் கொண்டிருந்த மனிதக் கூட்டம் ஒரு பண்பட்ட (அறவழிச் சமூகமாக) சமுதாயமாக மாற்றமடைய வெகுநாட்களும் முயற்சிகளும் தேவைப்பட்டன.

மனத்தின் உண்மையான நிலையை அறியாத மானுடர்கள் கொலை பாதகத்தைப் (ஒன்றைக் கொன்று வாழும் செயலை) போர் என்கிற பெயரால் செய்தார்கள், செய்து கொண்டும் வருகிறார்கள். போர் இல்லாது போனால் தேசமில்லாமல் போகும் என்று நம்பிக்கை கொண்டிருக்கிறவர்கள் மத்தியில் அடுத்தவரைத் துன்புறுத்தாமல் (ஹிம்சிக்காமல்) ஒரு நாட்டைக் காப்பாற்ற இயலாதா? என்ற நம்பிக்கையில் அறத்தை, சத்தியத்தை, அஹிம்சையைக் கையிலெடுத்துக் கொண்டு மானுடத்தை மாற்ற முயன்றவர்கள்தான் மேற்சொன்ன ஆன்ம ஆற்றல்படைத்த யுக புருஷர்கள்.

தொல்காப்பியர், கணியன் பூங்குன்றனார், வள்ளுவர், புத்தர், மகாவீரர், ஏசுபிரான், கலிலியோ, நபிகள் முதலிய எண்ணற்ற உயர்தனி மனிதர்கள் வரிசையில் இராமலிங்க வள்ளலாருக்குப் பின்னும், அப்துல் கலாம் அவர்களுக்கு


மகாத்மா

டம். இந்திய தேசத்தின் விடுதலைக்குக் காந்தியடிகளை விடவும் அதிகம் போராடியவர்கள் பலர் இருந்தனர். காந்தியடிகளின் வருகைக்கு முன்புவரை யுத்தம் என்றால், அது இரத்தம் சிந்தித்தான் பெற முடியும் என்பதைத் தாண்டி அறத்தொடு கூடிய மௌனமும், ஆயுதத்தை ஏந்துவதைவிட அதை எதிர்க்கும் துணிச்சலும் ஒரு செயலின் வெற்றிக்குப் போதுமானது எனக் காட்டிய உத்தமர் இவர்.

அவருடைய சுய சரிதையைப் படித்த பல மேல் நாட்டவர்களின் கருத்து யாதெனின், ‘சத்தியம்’, ‘உண்மை’ என்கிற இந்த இரண்டையும் சிந்தையுள் புகுத்தித் தன் தவறுகளை வெளிப்படையாக எழுத ஒரு மாபெரும் துணிவு தேவை என்பதாகும்.

சாதாரண மோகன்தாஸ் கரம்சந்த் காந்தியாக இருந்த இவரை உலக உத்தமராக


எஸ். நாகப்பன்


நாராயணசாமி


பக்கிரி முதலியார்


பி.கே. நாயுடு

மாற்றியதில் பெரும்பங்கு தமிழுக்கும் தமிழருக்கும் உண்டு.

**காந்தியும் தமிழர்களும் :** 'முற்பிறவியின் காரணமாக எனக்கும் தமிழர்களுக்கும் இணைப்பு ஏற்பட்டது' என்று தினசரிக் குறிப்பு ஒன்றில் காந்தியடிகளே தன் கைப்படப் பதிவு செய்துள்ளார். காந்தியடிகள் தமிழர்களோடு நெருங்கிப் பழகும் வாய்ப்பை இந்தியாவில் பெறவில்லை. அவர் தென் ஆப்பிரிக்காவில்தான் பெற்றார்.


தில்லையாடி வள்ளியம்மை

கரும்பு வெட்டும் கூலிக்காக 17–ஆம் நூற்றாண்டு வாக்கில் தென் ஆப்பிரிக்காவுக்கு நாடு கடத்தப்பட்ட இந்தியர்கள் பின்னர் அங்கேயே ஒப்பந்தத் தொழிலாளி என்கிற பெயரால் அடிமைகளாகக் குடியேறினர். அவர்களுள் பெரும்பாலானவர்கள் தமிழர்கள். காந்தி லண்டனில் பாரிஸ்டர் பட்டமும், வழக்குரைஞர் படிப்பையும் முடித்த பின்னர் பயிற்சிக்காக அவர் தென் ஆப்பிரிக்கா வர நேர்கின்றது. அப்பொழுது தான் ஒப்பந்தத் தொழிலாளியான தமிழர் பாலசுந்தரம் காந்தியடிகளுக்கு முதன் முதலாக அறிமுகமாகிறார். உடம்பில் காயங்களோடும் காந்தி முன் நிற்கிறார். அதுதான் அறிமுகமும்.

நீதிமன்றத்தில் புகார் செய்து பாலசுந்தரத்தை முதலாளியிடமிருந்து விடுவித்தார்.

காந்தியின் இச்செயல் அவரை ஏழைகளிடத்திலேயே கொண்டு சென்றது. இது அத்தனைக்கும் வித்திட்டவர் தமிழர் பாலசுந்தரமே. அவர் போல மேலும் சிலர்.

பதினெட்டு வயதே நிரம்பிய ஒரு வாலிபர். சிறைச்சாலையில் அதிகாரிகள் சித்திரவதை செய்தனர். கைகள் மரத்துப்போகும் கடுங் குளிரில் விடியற்காலை நேரத்தில் அவர் கல்லுடைத்தார். அதன் விளைவாக அவர் கடுமையான காய்ச்சலுக்கு ஆளாகி மரணமுற்றார். காந்தியடிகள், நாகப்பன் பற்றிக் கூறுகையில் "அவரிடம் தைரியம், பொறுமை, தேசபக்தி, மரண பரியந்தம் கைவிடாத உறுதி இருந்தன. படித்தவர்கள் பலர் சத்தியாக்கிரகத்தில் சேர்ந்திருந்தும் அது வெற்றியுடன் நடந்ததற்கு நாகப்பனைப் போன்ற வீரர்களே காரணம்" என்று குறிப்பிட்டுள்ளார்.

தில்லையாடி வள்ளியம்மை பதினாறு வயது நிரம்பிய இளம்பெண். தஞ்சை மாவட்டத்திலிருந்து வந்து குடியேறிய முனுசாமி முதலியார் என்பவரின் மகள். தென்ஆப்பிரிக்காவில் பிறந்து உயர்படிப்புப் படித்தவள். அவளும் சிறை வாழ்க்கையில் நலிவுற்று விடுதலைபெற்ற இரண்டாம் நாள் உயிர்விட்டார். **'மறுபிறப்பில் நீ எனக்குத் தாயாக வேண்டும்'** என்று காந்தியடிகள் அவரைக் குறிப்பிட்டுள்ளார்.

தில்லையாடி வள்ளியம்மை என்னும் ஒரு தமிழச்சி காந்திக்குத் திருக்குறளை அறிமுகம் செய்துவைத்தவள். காந்தியும் அவரது தோழர் போலக் என்பவரும் வள்ளியம்மையைச் சிறையிலிருந்து விடுவித்த போது 'தாய்நாட்டுக்காக உயிரைக் கொடுக்க விரும்பாதவர் யார்?' எனக் கூறி உயிர் துறந்து அழியாப்புகழ் பெற்றாள். அவளுடைய தியாகத்தைக் காந்தி 'இந்தியன் ஒப்பீனியன்' என்ற இதழில் எழுதும்போது, தமது அண்ணன் மரணத்தைக் காட்டிலும் வள்ளியம்மையின் மரணம் தம்மை அதிகம் பாதித்ததாகக் குறிப்பிடுகிறார்.

நாகப்பனைப் போலத் தனது இன்னுயிரைப் பலி கொடுத்த நாராயணசாமியைத் தென்னாப்பிரிக்க அரசு இந்தியாவுக்கு நாடு கடத்திற்று. அவன் ஆப்பிக்காவில் பிறந்தவன். இந்தியாவைக்

காணாதவன். இந்தியா அடிமை நாடானதால், அவனுக்காக இந்திய அரசு பரிந்து பேசவில்லை. கப்பல் பிராயணத்தில் அடிமையாக நோயுற்றுப் போகும்போது அவன் துணிகளும் பணமும் களவாடப்பட்டுவிட்டன. குளிரில் நடுங்கிய வண்ணம் பட்டினியாகவே உயிர் துறந்தான். நாராயணசாமி குறித்து இந்தியன் ஒப்பீனியனில் காந்தி எழுதும்போது, 'எந்தப் பெரிய சத்தியாக்கிரகிக்கும் சூட்ட முடியாத புகழ்மாலை நாராயணசாமிக்குப் பொருந்தும். நாகப்பனையும் நாரயணசாமியையும் பெற்றடுத்த தாய்மார்களுக்கு ஜே' என்று தமிழர்களை ஈன்ற தாய்மார்களை மனப்பூர்வமாகப் போற்றினார்.

காந்தியடிகளின் எளிமையான வாழ்விற்கு முன்னாடியாக வாழ்ந்து காட்டிய தமிழர் ஜோசப் ராயப்பன். அவர் ஓர் ஒப்பந்தத் தொழிலாளியின் மகனாவார். பாரிஸ்டர் பட்டம் பெற்றவர். தன் வேலைகளைத் தானே செய்யும் பழக்கமுடையவர். காந்திக்கும் இப்பழக்கத்தைக் கற்றுத் தந்தவர்.

இவர்களைப் போல, இரத்தினம் பத்தர், லாசரஸ், வின்சென்ட், வி.ஏ. செட்டியார், முனுசாமி, மாணிக்கம் பிள்ளை, தம்பி நாயுடு, பி.கே. நாயுடு, ஜாக் முதலியோரும் தமிழகத்தில் பெரியார், ஜீவா, இராஜாஜி, அய்யாமுத்து, சுப்பிரணிய ஐயர், அவினாசிலிங்கம் செட்டியார் முதலியோரும் காந்தியின் உள்ளத்தில் நீங்கா இடம்பிடித்த தமிழர் ஆவர்.

1909-ஆம் ஆண்டு தென்ஆப்பிரிக்காவில் ஜோகன்னஸ்பர்க் நகரத்திற்கு அருகில் காந்திஜியின் டால்ஸ்டாய்ப் பண்ணையில் தமிழர்களே அதிகமாக இருந்தனர். இங்குக் குடியேறிய தமிழர் குழந்தைகளுக்குத் தமிழ் கற்பிக்க ஆசிரியர் இல்லாமல் போனதால், காந்தியே தமிழைக் கற்கவும் செய்தார்; கற்பிக்கவும் செய்தார்.


அவிநாசிலிங்கம் ஐயா


தந்தை பெரியார்


ஜீவா

1927-ஆம் ஆண்டு தூத்துக்குடி வந்திருந்த சமயம், காந்தியடிகள் பேசும்போது, "திருக்குறளில் காணப்படும் அபூர்வமான பொக்கிஷத்தை அதன் மூலத்திலேயே படித்தறியும் விருப்பத்துடன் 20 ஆண்டுகளுக்கு முன்னர் முயன்றும் தமிழ்மொழியைக் கற்றுத்தேர ஆண்டவன் எனக்கு நேரம் அளிக்கவில்லை" என்பதற்காக வருந்தினார்.

தமிழில் அவர் பாராட்டிய மற்றொரு நூல் கம்பராமாயணம். அதைப் பற்றி ராஜாஜிக்கு எழுதிய கடிதம் ஒன்றில், "கம்பராமாயணம் வால்மீகி ராமாயணத்தின் மோசமான மொழிபெயர்ப்பாக இராது என்று நம்புகிறேன். போப்பின் தமிழ் நூலில் கம்பராமாயணத்தைப் பற்றி நான் நிறையப் படித்திருக்கிறேன்" என்றும் கூறியுள்ளார்.

காந்தியடிகளுக்கு ஔவையாரிடம் ஒருதனிப் பக்தி உண்டு. அவரைப் பற்றிக் குறிப்பிடும் போதெல்லாம் Mother Avvai என்றுதான் கூறினார்.

அதுபோல தமிழ் மொழியினை நன்கு உணர்ந் திருந்த அவர், தமிழில் உள்ள பழமொழிகள் மீது தனி அபிமானத்தை வைத்திருந்தார். தமிழில் அவருக்குப் பிடித்த பழமொழி ஒன்றுக்காகத் தன் சுயசரிதையில் தனியாக ஓர் அத்தியாயமே எழுதியுள்ளார். அப்பழமொழியைப் பற்றி காந்தியடிகள் கூறியது பின்வருமாறு :–




“நான் படித்த தமிழ்ப் பாடங்களில் குறைந்தது ஒன்றிரண்டு பழமொழியாவது என் உள்ளத்தில் பசுமையாக இன்னும் இருக்கின்றன. அவற்றுள் ஒன்று, ‘திக்கற்றவருக்குத் தெய்வமே துணை’ என்பதாகும். சத்தியாக்கிரகத்தின் மகத்தான தத்துவமே அந்த நம்பிக்கையில் எழுந்ததாகும்” என்ற உருக்கத்தோடு அவர் கூறுவதுண்டு.

தமிழில் உள்ள பக்தி இலக்கியங்களில் காந்தியடிகளின் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட நூல் மாணிக்கவாசகரின் திருவாசகம். **‘முக்திநெறி அறியாத மூர்க்கரோடு முயல்வேனை’** என்று தொடங்கும் பாடலை ஆசிரமத்தில் நடைபெறும் பிரார்த்தனையில் நாள்தோறும் பாடக் கேட்டு அவர் பேரானந்தம் அடைவதுண்டு.

ஔவையார்

தென் ஆப்பிரிக்கப் பள்ளிகளில் மிகுதியாகத் தமிழ்க் குழந்தைகள் படிக்கும் இடத்தில் தமிழைக் கற்றுக் கொடுக்கத் தவறிய அரசாங்கத்தைக் கண்டித்துப் போராடிய காந்தியடிகள், லண்டன் பல்கலைக் கழகத்தில் மெட்ரிகுலேசனுக்கும் மற்ற கலைக் கல்வித் தேர்வுகளுக்கும் தமிழை விருப்பப் பாடமாக்குமாறு அப்பல்கலைக்கழகத்திற்குக் காந்தியடிகள் விண்ணபித்தார். இக்கடிதத்தோடு தனது ‘இந்தியன் ஒப்பீனியன்’ இதழில் ஓர் அழகான கட்டுரையும் எழுதினார். “திராவிட மொழிகளில் மிகப்பெரிய மொழி தமிழ். இம்மொழி மாபெரும் இலக்கிய நயம் கொண்டது. ஐரோப்பிய நாடுகளுக்கு லத்தீன் மொழி எப்படியோ, அப்படி இந்தியாவுக்குத் தமிழ்மொழி ஆதிமொழி என்று கருதப்படுகிறது. எந்த வகையில் பார்த்தாலும் லண்டன் பல்கலைக் கழகத்தில் விருப்பப் பாடமாக ஏற்கத் தகுந்தது தமிழ்” என்று இவர் அக்கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

தன் வாழ்நாளில் காந்தி மதுரைக்கு ஐந்துமுறை வந்திருக்கிறார். அதில் 21.09. 1921–இல் வந்திருந்தபோது மதுரை வைத்தியநாதர் இல்லத்தில் தங்குகிறார். விவசாய நிலங்களில் மட்டுமல்ல, எல்லா இடங்களுக்குமே அணிவதற்கு மேலாடைகூட இல்லாமல் இவ் விவசாயிகள் செல்வதை அவர் கண்கூடாகக் கண்டார்.

இதை நினைத்தவாறு இரவு முழுவதும் தூங்காமல் இருந்த காந்தியடிகள், மறுநாள் காலை (22 .09.1921) தன் இயல்பான டர்பன் (தலைப்பாகை), பெரிய தோதி (வேட்டி), சட்டை, அதன் மேல் அணிந்திருந்த கோட் (Coat) அணியப் பெற்ற குஜராத்தி உடையிலிருந்து முற்றிலும் மாறுபட்டு, அன்று தமிழகத்தில் அவர் கண்ட ஏழைகளின் ஆடையைப் பூண்டார்.

அவர் பலமுறை கடுங் குளிரில் லண்டன் வட்ட மேசை மாநாட்டுக்குப் போகும் போதுகூட, பல வெள்ளைக்காரர்களும் அவரைக் கண்டு ஏளனமாகச் சிரித்தபோதும், குளிரால் நடுக்குற்று உடல்நலக் குறைவு ஏற்பட்டபோதும் அவர் தன் ஆடைக் கொள்கையிலிருந்து ஒருபோதும் விலகவில்லை.

காந்தியடிகளின் வாழ்வில் அவரை மகாத்மாவாகச் செதுக்கிய பெருமையில் தமிழுக்கும், தமிழருக்கும், தமிழகத்திற்கும் பெரும் பங்கு உண்டு என்பதை எதிர்காலத்தவர் நன்கு உணர்தல் வேண்டும். ●

கட்டுரை

# பாரதிதாசன் கவிதைப் பெருவெளி

18

**சிற்பி பாலசுப்பிரமணியம்**


பாரதிதாசன்

## மானுடப் பெருங்கவி

"அவனுக்குப் பிறகு தமிழ்க் கவிஞர் எவரும் மானுடத்தின் உயர்வினை அவ்வளவாகப் பாடவில்லை'' – இது அ.ச. ஞானசம்பந்தன் எழுதியுள்ள ஒரு குறிப்பு. குலோத்துங்கன் என்கிற வா.செ. குழந்தைசாமியின் நூல் ஒன்றிற்கு அவர் எழுதிய முன்னுரையில் காணப்படும் வரி இது. இங்கே அவன் என்பது 'மானுடம் வென்றதம்மா' என்று பரவசப்படும் கம்பனைக் குறிப்பிடுகிறது. குலோத்துங்கன்தான் கம்பனுக்குப் பிறகு மானுடப் பதாகை ஏந்துவதாக அ.ச.ஞா. எழுதுகிறார்; அழுத்தமாக நம்புகிறார்.

ஆனால், இந்தக் கருத்தியல் சரியானதல்ல.

எந்தக் கம்பனை மானுடப் பெருமிதம் கூறிய கவிஞனாக அடையாளம் காட்டுகிறாரோ, அந்தக் கவிஞனைக் 'கம்பன் என்றொரு மானுடன் வாழ்ந்ததும்' என்று காட்டியவன் பாரதி. அவனே,

"மண்ணுலகத்து மானுடன் தன்னைக்
கட்டிய தளையெலாம் சிதறுக"

என்று கடல் முழக்காகக் கர்ச்சனை புரிந்தவன்.

பாரதிதான் கம்பனுக்குப் பிறகு மானுடம் பாடிய மகாகவி. இதனை அ.ச.ஞா. கருத்தில் கொள்ளவில்லை.

பாரதியின் மானுட முழக்கத்தைத் தழுவியும் சுயமாக நேசித்தும் பாரதிதாசன் எழுதியுள்ள கவிதைகள் பலப்பல. மனிதனின் வெற்றி, மனிதனின் தோல்வி, அவனுடைய வலிமை, அவனுடைய எளிமை, மானுடம் என்ற மகத்தான பெருமிதம் எல்லாம் பாரதிதாசனுக்குள் விதைக்குள் விருட்சமெனக் குடிகொண்டிருப்பது அக்கவிஞனின் பெருமிதப் பார்வைக்கு அடையாளம்.


பாரதியார்

இளம் சிறார்களுக்கு எழுதிய ஆத்திசூடியை 'அனைவரும் நிகர்' என்று தொடங்கும் பாரதிதாசன் அதனை 'வையம் வாழ வாழ்' என்று முடிப்பதிலும் அவருடைய மானுடக் காதல் கொடியசைத்து நிற்கிறது.



'மானிட சக்தி' என்றொரு மகத்தான கவிதை படைத்தார் பாரதிதாசன். அக்கவிதையில்

எழுத்துக்கள் ஒவ்வொன்றும் பழுத்துக் கனிந் தவை.

"மானிடத் தன்மையை நம்பி – அதன்

வன்மையினாற் புவி வாழ்வுகொள் தம்பி"

என அழைப்பு விடுகிறார். மனித சக்தியைக் காட்டிலும் ஆற்றல் பொருந்தியது எதுவுமில்லை என்பது கவிஞரின் கணிப்பு.

"மானிடம் என்றொரு வாளும் – அதை

வசத்தில் அடைந்திட்ட உன்னிரு தோளும்

வானும் வசப்பட வைக்கும் – இதில்

வைத்திடும் நம்பிக்கை வாழ்வைப் பெருக்கும்"

என்பது அவருடைய கம்பீரமான அறிவிப்பு. 'ஆத்ம ஜயம்' என்ற கவிதையில் பாரதி பேசுகிறானே,

"அட

மண்ணில் தெரியுது வானம் – அது நம்

வசப்பட லாகாதோ?"

என்று. அந்த வினாவுக்கு விடைபோல் பாரதி தாசன் வரிகள் அமைகின்றன.

மேலும் கூறுவார் பாரதிதாசன். கானிடை வாழ்ந்ததும் பின்பு கடலை வசப்படுத்தியதும் மானுடமே. அதனால்,

"வான் திசை எங்கணும் நீ பார் – வாழ்வின்

வல்லமை 'மானிடத் தன்மை' என்றே தேர்"

மானுடம் என்ற நன்னம்பிக்கை முனையே உலகத்தை ஒன்றாக்கிப் பார்க்கும் துணிவைக் கவிஞருக்கு நல்குகின்றது. 'உலகப்பன்' என்ற அரிய புதுச்சொல் பாரதிதாசனிடம் அரும்பி மலர் கிறது. இதன் தொடர்ச்சியாக 'உலகம் உன்னுடை யது' என்ற அற்புதக் கவிதை பொங்குமாங்கடல் போல் அலைவீசி எழுகிறது. பாரதிதாசனின் கவிதை தொட்ட சிகரங்களில் ஒன்று 'உலகம் உன்னுடையது.'

தாழ்ந்து தாழ்ந்து தாழ்ந்து போகிற மனிதனைப் 'பள்ளந் தனில் விழும் பிள்ளைப் பூச்சியே' என்றும் 'பொட்டுப் பூச்சியே, புன்மைத் தேரையே', 'கன் னங் கருத்த இருட்டின் கறையே', 'தொங்கும் நரம் பின் தூளே' என்றும் இழிப்பும் ஏளனமுமாக அழைத்துச் சொல்வதாகக் கவிதை அமைகிறது. விழுந்து கிடக்கும் மானுடனைத் தட்டியெழுப்பிக் கவிஞர் அவனுக்குள் கருத்து மின்சாரம் பாய்ச்சு கிறார்.

"மனிதரில் நீயுமோர் மனிதன்; மண்ணன்று

இமைதிற, எழுந்து நன்றாய் எண்ணுவாய்

தோளை உயர்த்து; சுடர் முகம் தூக்கு

மீசையை முறுக்கி மேலே ஏற்று

விழித்த விழியால் மேதினிக்கு ஒளிசெய்

நகைப்பை முழக்கு நடத்து லோகத்தை..."

ஆவேசத் தமிழால் ஆணைகள் இடுகிறார் பாரதிதாசன். அச்சமும் பேடிமையும் அடிமைச் சிறுமதியும் உச்சத்தில் கொண்டிருந்தவர்களைக் கண்டு நொந்து, 'எழு, விழி, எட்டுத் திசைகளிலும் பார்' என்று வீறு கொண்டெழ வைக்கிறார் பாரதி தாசன்.

''உனக்குச் சிறகுகள் தோன்றுக. பற... பற... பற... மேலே... மேலே... மேலே...'' என்று பரலி சு. நெல்லையப்பருக்குப் பாரதி எழுதியது நினை வுக்கு வருகிறது. கடைப்பட்ட மானுடத்தைக் கரை யேற்றத் துணிந்த பாரதிதாசன், 'வானை இடிக்கும் மலைமேல் ஏறு' என்று கட்டளை பிறப்பிக்கிறார்.

"ஏறு விடாமல் ஏறு மேன்மேல்

ஏறி நின்று பாரடா எங்கும்

எங்கும் பாரடா இப்புவி மக்களை

பாரடா உனது மானிடப் பரப்பை

பாரடா உன்னுடன் பிறந்த பட்டாளம்..."

தனக்குள் ஒடுங்கிப் போன மானுடனுக்கு 'உன்குலம்' என்று மனித குலத்தையே அறிமுகம் செய்கிறார்.

"அறிவை விரிவு செய் அகண்ட மாக்கு

விசாலப் பார்வையால் விழுங்கு மக்களை

அணைந்து கொள் உன்னைச் சங்கம மாக்கு

மானிட சமுத்திரம் நானென்று கூவு..."

வீடு, வீட்டின் மதில்கள் – நாடு, நாட்டின் எல்லைகள் – மொழி, அதன் வாழ்விடம், இனம், அதன் உறவு வீச்சு, மதம் – அதன் இறுகிய பிடிப்பு அனைத்தையும் 'வெள்ள அன்பால்' தாவிக் கடக் கும் புதுயுக மனிதனைப் படைக்க விருப்பம் கொள் கிறார் பாரதிதாசன்.

எது எது மனிதனைப் பிரிக்குமோ, மனிதனை ஒதுக்கி அகற்றுமோ, அவற்றை அகற்றிவிட வேண்டுமெனப் பரபரப்புறுகிறார் கவிஞர். ஒரு லட்சிய உலகை உருவாக்க விழைகிறார். அதன் பிரகடனமாக வெளிப்பட்ட பாடல்தான் 'புதிய உலகு செய்வோம்.' இது சம நீதியின் உலகம். ஏற்றத் தாழ்வுகளை எள்ளி நகையாடுகிற உலகம்.

"புதியதோர் உலகம் செய்வோம் – கெட்ட

போரிடும் உலகத்தை வேரொடு சாய்ப்போம்."

அந்த உலகில் உடைமை பொதுவாக இருக்கும். 'இது எனது' என்ற மூடக் கொள்கை இராது. 'ஒரு பொருள் தனி' என்னும் மனிதனுக்கு இடமில்லை.

"பொது உடைமைக் கொள்கை
திசையெட்டும் சேர்ப்போம்
புனித மோடு அதை எங்கள்
உயிரென்று காப்போம்
இதய மெல்லாம் அன்பு
நதியினில் நனைப்போம்
'இது எனது' என்னுமோர்
கொடுமையைத் தவிர்ப்போம்"

என்பது பாரதிதாசனின் பிர கடனம்.

இந்த லட்சிய உலகுக்கு இன் னொரு பெயரையும் அடையாளத் தையும் காண விழைகிறது கவிஞர் உள்ளம்.

"சாதிமத பேதங்கள் மூட
வழக்கங்கள்
தாங்கி நடைபெற்று வரும் சண்டை உல கிதனை
விதையினில் துரும்பு போல் அலைக்கழிப்போம் –
பின்னர்
ஒழித்திடுவோம் – புதியதோர் உலகம் செய்வோம்"

அந்த உலகுக்குச் 'சுயமரியாதை உலகு' எனப் பேர் வைப்போம் என்றும் பாரதிதாசன் எக்காளம் முழக்குகிறார்.

இது சாத்தியமா என்ற வினாவுக்கு இடம் வைக்காமல், 'சமூகமே ஏறு நீ எம் கொள்கைக்கே' என்று வழிகாட்டவும் செய்கிறார்.

சமதரும உலகம் என்ற பெருங்கனவு இன்றும் கனவாகவே இருக்கின்றது. கட்டுகளற்ற உலகம் என்ற லட்சியம் சமநீதி உலகாக மலராமல் பொரு ளாதார ரீதியாகச் சுரண்டலுக்கு வித்திடும் உலக மயமாதலாக உருமாறிச் சீர்குலைந்து போயிருக் கிறது.

விழுமியங்களின் உருக்குலைவில் புதிய கருத் தியல்களைச் சமைக்க வேண்டிய கட்டாயம் நேர்ந் திருக்கிறது. இன்னும் சொன்னால் அதி விரைவான மாறுதல்களும் புதிது புதிதான புதிர்களும் மனித சமூகத்தை ஆட் கொண்டு வருகின்றன. அறிவியலின் விசுவரூபத் தில் அடுத்து என்ன நேரு மென்று திகைப்பும் திசை தெரியா மலைப்பும் விளைந் திருக்கின்றன.


வால்ட் விட்மன்

இத்தகைய சூழலில் 'மானுடம்' என்ற கோட்பாட்டின் மதிப் பென்ன என்ற வினா எழுதல் இயல்பே ஆகும்.


அ.ச. ஞானசம்பந்தன்

வரலாற்று ரீதியிலான ஒரு பதிவாக நாம் ஒன்றைச் சொல்லலாம். அது விபரீதங் களும், விளைவுகளும் முரண் பட்டு நிற்கும்போதும் முற்றிலு மாக மனிதம் அழிந்து போய் விடாது என்ற அகல் விளக்குப் போன்ற நம்பிக்கை மிஞ்சியிருக் கிறது.

பாரதிதாசனைப் பொறுத்தவரை மானிட ஆற்றலின் மலர்ச்சியில், மாட்சியில் அவர் தன்னை முழு மையாக ஈடுபடுத்திக் கொண் டார் என்பதே பேருண்மை.

பேராசிரியர் கா. செல்லப்பனின் ஆய்வுக் கருத்து ஒன்றை இங்கே நினைவு கூர்தல் தகும்.

"ஒரு வகையில் பார்த்தால் மானுட இயக்கத் தின் முழு முகிழ்ப்பையும் பாரதிதாசனிடம்தான் பார்க்க முடிகிறது. ........ அவர் சாதாரண மானுடத் திலேயே எல்லா முழுமையும் பார்க்கிறார்."

இந்த முகிழ்ப்பே குலோத்துங்கன் என்கிற வா.செ. குழந்தைசாமியிடம் பூரணமான பேரெழுச்சி வடிவம் கொள்கிறது.

'சிந்தையும் தோளும் சேர்ந்தது மானுடம்' என்ற சித்தாந்தமாக அது அவரிடம் உருக்கொள்கிறது.

முன்னொரு காலத்தில் அமெரிக்கக்கவி வால்ட் விட்மன் மனிதனின் அகண்ட பரிமாணத் தைச் சொன்ன வரிகள் நினைவுக்குள் வரு கின்றன.

"I am large
I contain multitudes"
( நான் பிரம்மாண்டமானவன்;
எனக்குள் அகிலாண்டங்கள் ! )

●

கட்டுரை

# திருக்குறளும் திவ்யபிரபந்தமும்

திருக்குறளின் முதல் அதிகாரம் கடவுள் வாழ்த்து.

கடவுள் என்ற வார்த்தைக்குச் சிறப்பான பொருளே அன்புதான். கடந்து உள்ளிருப்பவர் கடவுள். கடந்து உள்ளிருப்பது அன்பு.

கடவுளால் ஆகாதது இல்லை. அன்பினாலும் ஆகாதது இல்லை. கடவுள் எதையும் எதிர்பார்ப்பது இல்லை. அன்பும் எதையும் எதிர்பார்ப்பது இல்லை. அறிவுக்கு அப்பாற்பட்டவர் கடவுள். எனவேதான்



திருவள்ளுவர்

அறிவினால் மட்டும் கடவுளை அடைய முடிய வில்லை.

அன்பும் அறிவுக்கு அப்பாற்பட்டதுதான். சில நேரங்களில் அறிவைத் தள்ளிவிட்டு அன்பு வேலை செய்யும்.

அறிவினால் மட்டும் கடவுளை அடைய முடியாது என்பதற்குப் பல முனிவர்களும், ஞானி களும் தாங்கள் பெற்ற அறிவினைக் கொண்டு கடவுளை அடைய முடியவில்லை என்று கூறும் இதிகாசப்புராணக் கதைகளை மேற்கோளாகக் கொள்ளலாம்.

கடவுளை அடைவதுதான் வாழ்க்கையின் குறிக்கோள். அன்புடைத்தன்மையைப் பூர்ணமாக அடைவதே வாழ்க்கையின் குறிக்கோள். கடவு ளின் பொருள் தவறாகப் புரிந்து கொள்ளப் படுகிறது. அன்பின் உண்மையான பொருளும் தவறாகப் புரிந்து கொள்ளப்படுகிறது.

இப்படிப் பல கோணங்களில் சிந்தித்தே ‘‘கடவுளை அடை = அன்பை அடை’’ – ‘அன்பு தான் கடவுள்’ என்ற பொருளில், திருக்குறளின் முதல் அதிகாரத்தை வைத்தனர் என்று எனக்குத் தோன்றுகிறது.

திருவாய்மொழியின் முதல் பாசுரமான

‘உயர்வற உயர்நலம்’ என்கிற பதத்திற்குப் பொருள் அன்புதான் என்று நிச்சயமாகக் கொள்ளலாம்.

அன்பு = உயர்வற உயர்நலம் உடையவன் = (கடவுள்). அன்பின் முதல் எழுத்து "அ". கடவுளின் முதல் எழுத்து "அ". ‘‘அகார வாச்சியன்’’ என்று கடவுளை வேத உபநிடதத் தத்துவங்கள் விளக்கு கின்றன.

‘‘அஹம் அக்ஷராணாம் அகார:’’ (கீதை 10:33) எழுத்துக்களில் நான் ‘‘அ’’ எழுத்தாக இருக் கிறேன் என்கிறான் கண்ணன்.

ஒரு நுட்பத்தை இங்கே சொல்கிறேன். பொது வாக நாம் பல்வேறு விஷயங்களைக் கற்கிறோம். கற்பது என்றால் அறிவு பெறுவது! எத்தகைய அறிவு? நாம் படிக்கின்றோமே – பல செய்தி களைத் தெரிந்து கொண்டு "எனக்கு அது தெரி யும். இது தெரியும் என்கிறோமே" அந்த அறிவா? இல்லை.

இங்கே வள்ளுவர் அறிவின் பயன்பாட்டைச் சொல்கிறார். அறிவினான் ஆகுவதுண்டா? என்றே ஆரம்பிக்கிறார்.

‘‘பிறிதின் நோய் தன் நோய்போல் போற்றாக் கடை. (மற்றவரின் துன்பத்தைத் தன் துன்பம் போல் கருதாதபோது அறிவினால் என்ன பயன்?).

அறிவு அன்பாக மாறும்போது தான் இந்த வேலையைச் செய்யும்!

## எஸ். கோகுலாச்சாரி



"அவனவன் வயிற்று வலியும் தலைவலியும் அவனவனுக்குத்தான் தெரியும்" என்பது கிராமத்துப் பழமொழி! இயல்பான விஷயம். தன் வலி உணர்தலும் அறிவுதான்.

ஆனால் அடுத்தவன் வயிற்று வலியைத் தான் உணர முடிந்தால் அது அன்பு! அப்படி உணர முடிந்தால், அவர்கள்தான் ஞானிகள், மகாத்மாக்கள். அப்படிப்பட்ட மகாத்மாக்களை நான் விரும்புகிறேன் என்கிறான் பகவான் கீதையில்.

அதனால் நஞ்ஜீயரிடம் ஒருவர் "வைணவன் யார்?" என்று கேள்வி கேட்டபோது அவர் அழுத்தமாகச் சொன்னார்.

"பிறர் துன்பம் கண்டு நெஞ்சில் கை வைத்துத் தன் துன்பம் போல் பதறுபவன் வைணவன்" என்றார். இதில் பிறர் என்ற வார்த்தை முக்கியம்.

பிறிதின் நோய் என்ற குறள்நெறி இந்த வார்த்தையில் பிரதிபலிப்பதைக் காணலாம். இது பாரபட்சமில்லாத – எதையும் எதிர்பார்க்காத – தன்னைக் கொடுக்கும் குணத்தைக் குறிப்பது. பிற உயிர்களுக்காகத் தன்னை இழப்பது மேகம். எனவே கடவுள் வாழ்த்துக்குப்பின் வான்சிறப்பை வைத்தார்.

அடுத்த அதிகாரம் நீத்தார் பெருமை. இதிலே கூட அன்பின் சிறப்பைத்தான் விரிவாகவும் முடிவாகவும் பேசினார். அந்த அதிகாரத்தின் கடைசி குறள் இது.



"அந்தணர் என்போர் அறவோர் மற் றெவ்வுயிர்க்கும்

செந்தண்மை பூண்டு ஒழுகலான்." (குறள் 30)

மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை என்பது அன்புதானே? அன்பின் கனிதானே அருள்.

அறவோர் அன்புள்ளோராக இருக்க வேண்டும். சரி, அந்த அறம் எப்படி இருக்க வேண்டும்? அடுத்த அதிகாரத்தில் சொல்கிறார்.

"மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன்

ஆகுல நீர பிற" (குறள் 34)

மனத்தூய்மைதான் தலையாய அறம் என்கிறார். மனதில் தூய்மை இல்லாதவர்களால் அன்பு செலுத்தவே முடியாது. காரணம், அழுக்காறு, அவா சேர்ந்து அன்பைச் சுரக்காமல் செய்துவிடும்.

இதை ஆண்டாள் நாச்சியார் "தூயோமாய் வந்து நாம்தூ மலர் தூவி தொழுது வாயினால் பாடி மனதினால் சிந்திக்க போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும் செப்பு" என்கிறாள்.

இதை அடுத்த அதிகாரத்தில் இன்னமும் மேம்படுத்திப் பேசுகிறார்.

அறத்தாற்றின் இல்வாழ்க்கை என்று அற வழியில் வாழ்வதே இல்வாழ்க்கை என்று சொல்லி, அதற்கு அடிப்படையாக இருப்பது அன்பு! என்கிறார்.

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை

பண்பும் பயனும் அது!"

அறனும் அன்பும் என்றுகூட எழுதியிருக்கலாம். அன்பில்லா அறத்தால் பயன் இல்லை! ஆனால் அறம் என்கிற செயல் இல்லாவிட்டாலும் கூட அன்பிருப்பின் அதுவே அறமாகிய பயனைத் தரும். அன்பும் அறனும் என்று தனித்தனியாக பிரித்துப் பொருள் கொள்வதைப்போலவே அன்பாகிய அறம் என்று பொருள் கொள்வது சாலச் சிறந்தது.

எனவே, திருக்குறள் முழுமையும் ஆராய்ந்து பார்க்கும்போது, அன்பு நெறியையே அவர் அதிகமாக வலியுறுத்துகிறார்.

"அன்பில் தழைத்திடும் வையம்", "அன்புடையார் எல்லாம் உடையார்", "அன்பில் வழியது உயிர்நிலை", "அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்", "அறத்திற்கே அன்பு சார்பு", "யாக்கையின் அகத்துறுப்பு அன்பு"




இவ்வளவையும் சொல்லிவிட்டு, உலகத்திலுள்ள மக்களை இரண்டே பிரிவாகப் பிரிக்கிறார். 1. அன்பில்லாதவர்கள். 2. அன்புடையவர்கள்.

சரி. இவர்களை அடையாளம் காண்பது எப்படி என்கிற கேள்வி எழும்!

அன்பில்லாதவர்கள் சுயநலக்காரர்கள். தான், தன் குடும்பம், தன் மனைவி, தன் சுகம், தன் பொருள் என்று கருதி உயிர்கொடுத்து உழைப்பவர்கள். அல்லது உழைத்து உயிர் கொடுப்பவர்கள்!

தமக்குரியர் அன்பிலார் என்பதால் இவர்கள் அன்புநெறி கடைபிடிக்காதவர்கள் என்றே திருவள்ளுவர் காட்டுகிறார். (அன்பிலார் எல்லாம் தமக்குரியர்).

என்னிடமும் ஒரு நண்பர் சொன்னார். "என் வாழ்க்கையை முழுக்க அன்பு பாராட்டியே வாழ்ந்தேன். எனக்காக நான் எந்த சுகத்தையும் அனுபவிக்கவில்லை. எல்லாப் பொருட்களையும் பிறருக்காகவே சேர்த்துச் சேர்த்து ஓடாய்த் தேய்ந்தேன்" என்றார்.

"ரொம்ப சரி! பிறருக்காக என்கிறீர்களே அது யார்? யார்?"

"என் மனைவி, பிள்ளைகள்தான்!"

மனைவியின் மீதும் மக்களின் மீதும் (மக்கள் = பிள்ளைகள்) எத்தனை அன்பு இவருக்கு என்று தோன்றும். இது சுயநலம். தமக்குரியர் மாட்டு மட்டுமான செயல். உண்மையில், சகல உயிர்களிடத்து அன்புள்ளவர்களோ – தாங்கள் வாழ்க்கை, பொருள், அறிவு எல்லாவற்றையும் பிறருக்காகச் செலவழிப்பவர்கள். பொதுநலம் கருதும் புண்ணியர்கள்.


வள்ளலார்

ஆண்டாள், திருப்பாவையிலே, வாமன அவதாரத்தை வெகுவாகப் புகழ்வாள். அந்த அவதாரத்தைச் சொல்லும் போது, 'உத்தமன்' என்ற பதத்தைப் போடுவாள்.

இதற்கு உரையாசிரியர் விளக்கம் தரும்போது மிக அற்புதமாகத் தருவார்.

மனிதர்களில் மூன்று வகை உண்டு. அதமன். மத்திமன் உத்தமன். பிறரை அழித்து தான்வாழ எதையும் செய்யத் தயங்காதவர்கள் "அதமர்கள்." தானும் வாழப் பிறரும் வாழ இருக்கும் குணமுடையோர் "மத்திமர்கள்." பிறருக்காகத் தன் பெருமை, வாழ்வு எல்லாவற்றையும் தியாகம் செய்பவர்கள் "உத்தமர்கள்."

இந்திரனுக்காகத் தானே குறளுருவாய்த் தாங்கிச் சென்று – பிச்சை கேட்கவும் தயங்காதவனாக எடுத்த வடிவம் என்பதால், பகவானை 'உத்தமன்' என்று ஆண்டாள் போற்றினாள்.

அன்பே சிவம் என்றார்கள் ஆன்றோர்கள். வள்ளலாரும் இதைத்தான் சொல்கின்றார். அவர் பிரார்த்தனை என்ன தெரியுமா?

"அப்பா! நான் வேண்டுவது கேட்டு அருள் புரிய வேண்டும்."

"சரி, உனக்கு என்ன வேண்டும்?" என்கிறார் கடவுள்.

"ஆருயிர்கட்கெல்லாம் நான் அன்புசெயல் வேண்டும்."

பிறர்க்குரியதான அன்பைத்தான், திருக்கோட்டியூரில் தான் நரகம் போனாலும் பரவாயில்லை என்று காட்டி, சரித்திரத்தில் இடம் பிடித்தார் இராமாநுஜர்.

வள்ளுவத்தின் மையப்புள்ளியும் ஆழ்வார்களின் பாசுர மையப் புள்ளியும் இந்த அன்புதான், இந்த அன்புநெறிதான் இன்றைய தேவை! இந்த அன்பு நெறி காட்டும் தலைவர்கள்தான் இன்றைய தேவை! ●

பா.மா. வெங்கடாசலபதி

'இந்தியாவின் தண்ணீர் மனிதர்' என்று போற்றப்படும் ராஜஸ்தானைச் சேர்ந்த டாக்டர் ராஜேந்திரசிங், சென்ற 22.9.2017 வெள்ளிக் கிழமையன்று ஈரோட்டிற்கு வருகை தந்தார்.

ஈரோடு திண்டல் வேளாண் பொறியியல் மற்றும் தொழில்நுட்பக் கல்லூரித் தலைவர் எஸ்.எஸ். கந்தசாமி தலைமையில் "தமிழக ஆறுகளின் வளம் மீட்பு யுக்திகளும், செயலாக் கமும்" என்னும் தலைப்பில் டாக்டர் ராஜேந்திரசிங் பேசினார்.

அவர் தனது உரையில், "கடந்த காலங்களில் இயற்கையுடன் சேர்ந்து மக்களைக் கருத்தில் கொண்டு நீர்நிலை, அணை, குளம் ஆகிய



# இந்தியாவின் தண்ணீர் மனிதர்!

தேக்கங்களை உருவாக்கினார்கள். தற்போது தொழில், தொழில்நுட்பச் சிந்தனையுடன் வடிவமைக்கின்றனர்.

ராஜஸ்தானை ஒப்பிடுகையில், தமிழகத்தில் நல்ல மண், இயற்கை வளம், நீராதாரம் அதிகம். அவற்றை அரசும், சமூகமும் பாதுகாக்கத் தவறு கின்றன. தண்ணீருக்கு நாம்தான் உரிமை யாளர்கள். அதைப் பாதுகாப்பதும், மாசுபடாமல் தடுப்பதும் நமது விவசாயிகள், பொதுமக்களின் உரிமை. அதைச் செய்யத் தவறி விட்டோம். அரசு இலவசங்கள், சலுகைகளை வழங்கி, தண்ணீர், மண், மரம், இயற்கையை விற்கிறது.

இன்றைய இளைஞர்களும் நமது நிலம், நீர், விவசாயத்தை மறந்து, படிப்பு, நாகரிகம் எனப் புலம் பெயர்கின்றனர். நமது பாரம்பரியம், வளம், நீர் நிலங்களைக் காக்கும் வகையிலான கல்வி யைப் பல்கலைக்கழகங்களும், கல்லூரிகளும் வழங்க வேண்டும்.

காவிரிப் பிரச்சனை தொடர்பாக, நீதிமன்றத் தில் வழக்கு இருந்தாலும் தமிழகமும், கர்நாடக மும் தற்போதுள்ள நீரை வைத்துப் பயிர் தேர்வு, சாகுபடி முறையை மாற்ற வேண்டும். குறைந்த நீரில் – இருக்கும் நீரில் சாகுபடியை நிறைவு செய்யத் திட்டமிட வேண்டும்.

தீர்ப்பு வரும்வரை காத்திருக்காமல், ஒருபுறம் நீராதாரங்களைக் காக்கவும், புதிய நீராதாரங் களையும், இயற்கை வளங்களையும் உருவாக்க வேண்டும். சிக்கன நீர்ப் பயன்பாட்டுத் திட்டங் களை வெளியிட வேண்டும்.

மண், நீர், இயற்கை வளங்களை விற்பதைத் தடுக்க வேண்டும். இதைச் செயல்படுத்தத் தவறி னால், மிக விரைவில் தமிழகமும், இந்தியாவும் தண்ணீருக்கான பல்வேறு நெருக்கடிகள், பாதிப்பு கள், பேரிடர்களைச் சந்திக்க நேரிடும்" என்று கூறினார்.

இந்நிகழ்ச்சியில் விவசாய சங்க நிர்வாகிகள், விவசாயிகள், கல்லூரி மாணவ, மாணவியர் உள் பட 600–க்கும் மேற்பட்டோர் கலந்து கொண்டனர்.

●

கட்டுரை

# திருவையாறு ‘ஸ்ரீ தியாகப் பிரம்மம்’

மு. சண்முகம்

கர்நாடக இசையில் ஸ்ரீராகம் – ஆதி தாளத்துடன் பாடப்பெறும் ‘எந்தரோ மகானுபாவுலு’ என்று தொடங்கும் பஞ்சரத்னக் கீர்த்தனை மிகப் பிரசித்தம். அக்கீர்த்தனையைக் கேட்டு உருகாத இசையன்பர்கள் இருக்க முடியாது. அதனைப் பாடியவர் சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான ஸத்குரு ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள்.

அவர் தமது இஷ்ட தெய்வமாகிய இராம பிரானைப் பற்றிப் பாடினாரென்றால், முத்துசாமி தீட்சிதர் முருகப் பெருமானையும் சியாமா சாஸ்திரிகள் பங்காரு காமாட்சியம்மனையும் போற்றிப் பாடியிருக்கிறார்கள். இதில் ஒரு விஷேசம், இம்மும்மூர்த்திகளுமே திருவாரூரில் பிறந்த அவதார புருஷர்கள்.


தியாகராஜ சுவாமிகள்

இவர்களில் 1767–ஆம் ஆண்டில் பிறந்த ஸ்ரீ தியாகராஜர் திருவையாறு திருமஞ்சன வீதியில் தமது இறுதிக் காலம் வரை வாழ்ந்து தம் தாய்மொழியாகிய தெலுங்கில் உலகம் போற்றும் கீர்த்தனைகளை இயற்றியுள்ளார்.

முத்துசாமி தீட்சிதர் திருத்தணி முருகப் பெருமானைக் குறித்து சமஸ்கிருதத்தில் பாடியிருக்கிறார். சியாமா சாஸ்திரிகள் தஞ்சாவூரில் தங்கி பங்காரு காமாட்சியம்மனின் அருளில் தோய்ந்து பல பாடல்கள் இயற்றியதுவும் சமஸ்கிருத மொழியில் தான்.

இவர்களில், எண்ணிக்கையில் அதிகமாகவும் யாவரையும் ஈர்க்கத் தக்கதுமான கீர்த்தனைகளைச் சங்கீத உலகிற்கு அளித்த பெருமை தியாகராஜருக்கு உண்டு.

அவருடைய கீர்த்தனைகள் இந்தியத்

துணைக் கண்டத்தில் மட்டுமல்லாது மேலைநாடுகளிலும், அவரை முன்னோடியாகக் கொண்டு முறையாகச் சங்கீதம் பயின்ற சங்கீத விற்பன்னர்களால் பாடப்பட்டு வருகின்றன. ஆங்காங்கே போட்டி போட்டுக் கொண்டு இசை விழாக்களும் நடத்தப்பட்டு வருகின்றன.

ஸ்ரீ தியாகப் பிரமமம் வாழ்ந்து சமாதி நிலை எய்திய திருவையாறு வரலாற்றுப் புகழ்வாய்ந்தது. சைவ சமயக் குரவர் அப்பரடிகளுக்குச் சிவபெருமான் காட்சி தந்தருளியபோது "கண்டேன் அவர் திருப்பாதம்; கண்டறியாதன கண்டேன்" என்று ஆனந்த மிகுதியால் அவர் பாடிய இடமாம் திருக்குளமும் அறம்வளர்த்த நாயகி உடனுறை ஐயாரப்பர் திருக்கோயிலும் இத்தலத்தில்தான் உள்ளன. தென் கயிலாயமென்றும் இதனைக் கூறுவர்.

மெல்லிய பூங்காற்று உடலினை வருடிட உள்ளத்தினைப் புளகாங்கிதமடையச் செய்யும் அழகிய காவிரிக் கரை; பசுமை வளங்கொழிக்கும் தோப்புகள், துரவுகள், தெண்ணீர் வயல்கள்; வெண்ணுரை விதிர்த்துச் சுழித்தோடும் ஆற்றுநீர்; கண்ணைக் கவரும் வண்ணங்களால், செவிக்கினிய ஓசைகளால் பரவசமூட்டும் பட்சி ஜாலங்கள். ஆம்! திருவையாறின் இத்தகு அற்புதச் சூழலில் காவிரிக் கரையினையொட்டியுள்ள திருமஞ்சன வீதியில்தான் ஸ்ரீ தியாகப் பிரம்மம் இசைபட வாழ்ந்து 1847–ஆம் ஆண்டில் சித்தியடைந்துள்ளார்.

இவ்வீதிக்குச் சற்று அருகிலேயே காவிரிக் கரையில் அம்மகானின் சமாதி அமைந்துள்ளது. அவர் அமரத்துவமடைந்த புஷ்ய பகுள பஞ்சமி தினத்தில் ஆண்டுதோறும் அச்சமாதியின் முன்னர் அமைக்கப்படும் பிரம்மாண்ட அரங்கில் நடைபெறும் 'தியாகப் பிரம்ம மகோத்சவம்' சென்ற 170 ஆண்டுகளாகத் தொடர்ந்து வெகு விமரிசையாக நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

உலகெங்கிலுமுள்ள கர்நாடக இசை விற்பன்னர்கள் நெடுந்தொலைவு கடந்து வந்து இசையுலகப் பிதாமகருக்கு அஞ்சலி செலுத்த வேண்டி இவ்விழாவிற்கு ஆண்டுதோறும் கூடுவதனை வழக்கமாகக் கொண்டிருக்கிறார்கள். அம்மகான் சித்தியடைந்த நாளன்று காலை 9 முதல் 10 மணி வரை நடைபெறும் பஞ்சரத்னக் கீர்த்தனை நிகழ்ச்சியில் எல்லோரும் ஒருசேர அமர்ந்து பாடுவதனைத் தங்கள் வாழ்நாளில் பெறும் பாக்கியமாகக் கருதி மகிழ்கிறார்கள்.

**ஸ்ரீ தியாகப் பிரம்மத்தின் கீர்த்தனங்கள் பற்றி** : ஸத்குரு ஸ்ரீ தியாகராஜர் வேதம், புராணம், சரித்திரம், சோதிடம், கணிதம், மந்திர சாஸ்திரம், இலக்கியம் ஆகியவற்றில் தேர்ந்த சகலகலா வல்லவர். நாதப் பிரம்மத்தில் இராம பிரம்மத்தைக் கண்டவர். 'ராமா நீவே கானு நன்னு ரக்ஷிஞ்சே வா ரெவரே' (இராமா! உன்னைத் தவிர என்னைக் காப்பவர் யார்?) என்று இராம பாதத்தில் சரணடைந்து இயற்றிய பல அரிய கீர்த்தனங்களால் அற்புதமான செய்திகளை மக்களுக்கு விட்டுச் சென்றிருக்கிறார். தெய்வ பக்தி இல்லாத சங்கீதத்தால் பயனில்லை, அது சன்மார்க்கத்தில் கொண்டு விடாது என்பதனை, 'ஸங்கீத ஜ்ஞா நமு பக்திவினா ஸந்மார்க்கமு கலதே' என்ற கீர்த்தனையில் கூறியிருக்கிறார். இறைவனோடு ஒன்றிப் பொருளுணர்ந்து பாடப்படும் கீர்த்தனங்களால் மட்டுமே ஆனந்தம் மேலிடும் என்பதில் அசையாத நம்பிக்கையுடையவர். பொருள் தெரியாமல் செய்யும் துதி பயனளிக்காது என்பது அவரது வேத வாக்கியம்.

ஸ்ரீ தியாகராஜரின் திறமையைக் கண்ட அப்போதைய தஞ்சாவூர் அரசர் அவரைத் தம் அரண்மனைக்கு வருமாறு அழைத்தும், அங்குச் சென்று பாடி சன்மானம் பெற விரும்பாதவராய் 'நிதி சாலா ஸுகமோ' என்று தொடங்கும் கல்யாணி இராக கீர்த்தனையைப் பாடினார். பொருட் செல்வத்தைவிட இராம பஜனையே சுகம் என்று முடி



வெடித்து, 'ராம நாமமே தாரகம்' என்பதில் உறுதியாக இருந்தவர் அம்மகான்.

அவர்தம் கீர்த்தனைகளில் பகவானைத் துதிப்பது தவிர பலவித உபதேசங்களை 'ஓ மனஸா' எனத் தம் மனதிற்குச் சொல்வது போன்று உலக மக்களுக்கும் கூறுகிறார். 'ஸொக ஸுகா மிருதங்க தாளமு' என்று தொடங்கும் கீர்த்தனையில் பகவானை எப்படிப் பாட வேண்டும் என்றே விவரிக்கிறார். 'பக்துநி சாரித்ரமு பேகட' என்ற கீர்த்தனத்தில் உண்மையான இராம பக்தியுடையவன் சிவ விஷ்ணு பேதம் பாராமல் இருப்பான் என்று தனது உறுதியான நிலைப்பாட்டினைக் கூறுகிறார்.

சைவ – வைணவ ஒருமைப் பாட்டினை நிலைநிறுத்த சஹானா ராகம் – ஆதி தாளத்தில் அவர் பாடிய 'ஈவ ஸுதா நீ வண்டி தைவமு' என்ற கோவூர் சுந்தரேசரைப் பற்றிய கீர்த்தனையே சான்றாகும்.

இறைவன் எங்கும் நிறைந்திருப்பவன் என்பதை உணர்ந்தவனுக்கு ஆசிரம பேதமே தேவையில்லை என்று 'அந்நிநீ வுநுசு எஞ்சிநவா நிகி ஆசிரமு பேதமு லேல' என்ற கீர்த்தனையில் எடுத்துக் கூறுகிறார். 'க்ரஹ பலமேமி' என்ற கீர்த்தனையில் இராமபிரானின் அருள் கிட்டியவனுக்குக் கிரக பலத்தால் பயனேதுமில்லை என்னும் முடிவு தெரிகிறது. இப்படி அம்மகானது கீர்த்தனைகள் பலவற்றையும் பொருளுணர்ந்து படிக்கப் படிக்க, அவற்றினை திருவையாறு ஆராதனை விழாவில் மேடையருகே அமர்ந்து, வித்துவான்கள் பாடக் கேட்கக் கேட்க அரிதாம் இம் மானிடப் பிறவி எடுத்ததன் அருமையை நாம் உணர முடிகிறது.

**திருவையாறு ஆராதனை விழாவினைப் பற்றி** : டிசம்பர் சீசனில் ஸ்ரீ தியாகப் பிரம்மத்தின் பஞ்சரத்னக் கீர்த்தனைகளைப் பல்வேறு சங்கீத சபாக்களில் கேட்டு மகிழ்கிறோம். ஆண்டுதோறும் புஷ்ய பகுள பஞ்சமி தினத்தன்று திருவையாறிலிருந்து நேரடியாக ஒளிபரப்பப்படும் கர்நாடக சங்கீத நிகழ்ச்சிகளை, வீட்டிலுள்ள தொலைக்காட்சிப் பெட்டி முன்னர் அமர்ந்து கண்டும் கேட்டும் இன்புற்றுக் கொண்டிருக்கிறோம்.

எனினும் திருவையாறு ஆற்றுப் படுகையில், ஸ்ரீ தியாகராஜ சுவாமிகளின் சமாதிக் கோவில் முன்னருள்ள விழாப் பந்தலில் அமர்ந்து கொண்டு அங்கு நடைபெறும் ஆராதனைகளோடு நூற்றுக்கணக்கான இசைக் கலைஞர்கள் பங்கேற்கும் பஞ்சரத்னக் கீர்த்தனைகளின் இசை நிகழ்ச்சியினை நேரில் கண்டும் கேட்டும் மகிழ்கின்ற ஆனந்த அனுபவம் சொல்லி மாளாது!

2018 ஜனவரி 2–ஆம் தேதி தொடங்கி 6–ஆம் தேதி வரை திருவையாறில் ஸ்ரீ தியாகராஜ சுவாமிகளின் ஆராதனை விழா சிறப்பாக நடைபெறுவது சிந்தையை உருவ வைக்கும் நிகழ்வாகும். ●

சிறுகதை

# கனகா



"போகலாமா... நல்லா அப்பாவெப் புடுச்சிட்டியா..." மோட்டார் சைக்கிளைக் கிளப்புவதற்கு முன்பு மறுபடியும் கேட்டான் சீதாராமன். தன் அடிவயிற்றை இரண்டு கைகளாலும் வளைத்துப் பிடித்திருந்தாள் மகள் யாழ்ப்ரியா. ம்ம் என்று பின்சீட்டில் உட்கார்ந்திருந்த மகளைத் திரும்பாமலேயே வலது கையால் நன்றாக உட்கார்ந்திருக்கிறாளா என்று தொட்டுத் தடவிப் பார்த்தவன், திருப்தியடைந்தவனாய் மோட்டார் சைக்கிளைக் கிளப்பினான்.

"ஏப்பா இப்பவே என்னைக் கூட்டிட்டுப் போறே... எங்க மிஸ் வகுப்பு நடக்கும்போது யாரையும் உட மாட்டாங்க. யார் வந்து சொல்லிக் கூப்பிட்டாலும் உட மாட்டாங்க. நீங்க போலீசுங்கறதாலெ உட்டுட்டாங்க. உங்களெக் கண்டு பயந்துட்டாங்க" என்று தன் அப்பாவிடம் பேசிக்கொண்டே வந்தாள் பின்னால் உட்கார்ந்திருந்தவாறே...

யாழ்ப்ரியாவின் பள்ளியின் அருகில்தான் சீதாராமனின் வீடு இருந்தது. பள்ளியிலிருந்து 250 அடி தூரத்தில் பிரதானத் தார்ச்சாலை. அதைத் தாண்டி நேராகத் தார் போடாத மண்சாலை. அரை பர்லாங் தொலைவில் புதிதாய் முளைத்த நகர். அங்கொன்றும் இங்கொன்றுமாய் வீடுகள். சீதாராமன் வீட்டிற்குப் பக்கவாட்டில் இரண்டொரு வீடுகள் இருந்தன. எதிர் சைட் காலியாக இருந்தது. வெயில் காந்திக் கொண்டிருந்தது.

நகரின் மையப்பகுதியில் சீதாராமனின் வீடு. வீட்டிற்கு வந்ததும் வண்டியை நிறுத்தினான். பின்னால் உட்கார்ந்திருந்த யாழ்ப்பிரியாவை மெதுவாக இறங்கச் சொல்லி வண்டியில் உட்கார்ந்தவாறே பின்புறம் திரும்பி ஒரு கை பிடித்தான். இறங்கியதும் ஸ்டாண்ட் போட்டு நிறுத்தி விட்டுக் காம்பவுண்டு கேட்டைத் திறந்தான். யாழ்ப்ரியாவின் ஸ்கூல் பேக் அவனது தோளில்.

காம்பவுண்ட் சுவர் உள்ளே சிறியதாய் வாசல். வலது புறத்தில் மாடிப்படி... மொட்டை மாடி... வீட்டைத் திறந்தால் பெரிய ஹால்... வலதுபுறம் சமையலறை... ஒட்டிய படுக்கை அறை, சாமி அறை என்று கச்சிதமாக இருந்தது. காம்பவுண்ட் சுவரின் இரு பக்கங்களிலும் செடி கொடிகள் வளரும் வண்ணம் தோட்டத்தை உருவாக்க வேண்டும்.

தோட்டம் போடுவதற்கு என்னென்ன வேண்டும், சீதாராமனுக்கு எந்த அனுபவமும் இல்லை. சிந்தனையும் இல்லை. ஆனால், கனகாவிற்கு இருந்த விருப்பமே தலை தூக்கி நின்றது. தன் பெரியம்மா மகன் மணிகண்டன் பாரஸ்டராக இருக்கிறான். அவன்தான் எப்போது பார்த்தாலும் நாற்றங்கால், விதைகள், மரங்கள், பிளாண்டேஷன் என்று இடைவிடாமல் பேசிக் கொண்டிருப்பவன்.

'ஏண்டா மணி... இந்த அக்காவைப் பார்க்க ஏதோ ஒரு நாள் வர்றெ, நீ எங்கிருக்கிறாய் என்று கூடத் தெரியலெ... நல்லாயிருக்கிறாயா...?' போனில் முதலில் வராமல், இரண்டாவது முறையாகப் பேசும்போதுதான் போனில் வந்தான். விபரம் சொன்னாள்.

தேவையான செம்மண், மணல், எரு எல்லாம் சேகரித்து வைத்தாகி விட்டது. மணிகண்டனால் நியமிக்கப்பட்ட ஆள்தான் எல்லாம் செய்து கொண்டிருந்தான். மனோரஞ்சிதம், வாடாமல்லி, அடுக்குமல்லி, முல்லை, கனகாம்பரம், மாதுளம், சோற்றுக்கற்றாழை, ரோஜா, செண்பகம், மருதாணி என்று வகைவகையாய்ச் செடிகள், கொய்யா, கறிவேப்பிலை, சப்போட்டா, பப்பாளி என்று பார்க்கும்தோறும் அழகின் உச்சம்! செழிப்பின் அடையாளம்!

காலையில் எழுந்ததும் முதல் வேலையாகக் கனகா வாசல் தெளிக்கும்போதே அந்தச் செடிகளுக்குத் தண்ணீர் பாய்ச்சி விட்டுத்தான் மறுவேலை பார்ப்பாள். மூன்று ஆண்டுகளுக்கு முன் சீதாராமன் தன் வீட்டு மனையில் ஆழ்துளைக் கிணறு தோண்ட, அதிர்ஷ்ட வசமாய் இருநூறு அடி ஆழத்திலேயே தண்ணீர் குபுகுபுவென்று கொப்பளித்தது. கையோடு வீடும் கட்டி

முடித்துக் குடிபெயர்ந்தும் விட்டான்.

கனகா எப்போதும் சுறுசுறுப்பாக இருப்பவள். தண்ணீர் வசதிதான் தோட்டம் போடுவதற்கான உந்து சக்தி.

சீதாராமனையும், யாழ்ப்பிரியாவையும் அனுப்பும்வரை அவர்களுக்கான பணியையே செய்து கொண்டிருப்பவள், அவர்கள் போனதும் வீட்டு முன்னால் இருக்கும் தோட்டத்தில் ஏதாவது ஒரு வேலையைச் செய்து கொண்டிருப்பாள். சிறுசிறு கற்கள் கிடந்தால் பொறுக்கி எறிவாள். இலை, தழை காய்ந்து சருகு ஆகும் நிலை தென்பட்டால் துடித்துப் போவாள். வளரும் செடிகளைப் பார்க்குந்தோறும் ஏற்படும் பரவசம், மனதிற்குள்ளேயே நீர் கொடுத்த பூமித்தாய்க்கு நன்றி சொல்வாள்.

“அப்பா, மூணு நாளா தண்ணி ஊத்தாம செடிகளெல்லாம் காஞ்சு போய்க் கிடக்குது,. அம்மா ஊருக்குப் போகும்போது செடிகளுக்குத் தண்ணி ஊத்தறதெ மறந்திடாதீங்கன்னு சொல்லித்தானேயிருந்தா. உங்களெத்தானே சத் தம் போடுவா” என்று சொன்னதோடு நிறுத்தாமல், தான் அணிந்திருந்த சீருடையைக் கழற்றிவிட்டு வேறு உடை போட்டுவிடச் சொன்னாள் யாழ் ப்ரியா.

“அம்மா எப்பப்பா வருவா?” என்று கேட்ட வாறே சீதாராமனின் கண்களையே உற்றுப் பார்த்தவள், “என்னப்பா கண்ணு செவந்திருக்கு” என்று கேட்டவள், சீதாராமனின் பதிலைக்கூட எதிர்பாராமல், தொட்டியில் நிரம்பியிருந்த தண்ணீரைச் சிறிய சொம்பால் மோந்து மோந்து வந்து செடிகளுக்கு ஊற்றத் தொடங்கினாள்.

அப்பாவை அம்மா திட்டிவிடக் கூடாதாம். ஒன்றாம் வகுப்பு முடியப்போகிறது. இதுவரை ஊற்றிய தண்ணீர் போதாது என்று உற்று உற்றுப் பார்த்தவள், மறுபடியும் தண்ணீர் ஊற்ற ஆரம்பித்தாள். அம்மா வந்து பார்த்தான்னா சந்தோஷப்படுவா... கன்னத்தில் முத்தம் குடுப்பா.

கனகாவின் அக்கா பார்வதியின் கணவர் மருத்துவமனையில் நான்கைந்து மாதமாகச் சிகிச்சை பெற்று வந்தவர் மூன்று நாட்களுக்கு முன் சிகிச்சை பலனளிக்காமல் இறந்துவிட்டார். தன்னோடு பிறந்தவர்களில் பார்வதிதான் எல் லோருக்கும் மூத்தவள். அவள் கணவர்தான் இறந்து போயிருக்கிறார். காலையிலேயே இறப்புச் செய்தி வந்திருந்ததால் சீதாராமனும் கனகாவும் கிளம்பினார்கள். சீருடையோடு பள்ளிக்குப் புறப்படத் தயாராக இருந்தாள் யாழ்ப்ரியா.

“யாழை எதற்கு இழவு வீட்டிற்குக் கூட்டிப் போகணும்? அவள் ஸ்கூலுக்குப் போகட்டும்... நான் என் தங்கச்சியை இங்கு வரச்சொல்லி விடுகிறேன். அவ வந்துடுவா...”

“ஆமாம், அதுதான் சரி... நீங்க யாழ் ஸ்கூல் முடியறதுக்குள் திரும்பி வந்து விடுவீர்களாம்... மச்சான் செத்துப் போயிட்டாரு... அக்காவாலே தாங்க முடியாது... அக்கா கூட நாலைஞ்சு நாள் இருந்துட்டு வர்றேன். நீங்க செடிகளெ மட்டும் காயாமெப் பார்த்துக்குங்க...” சொல்லச் சொல்லவே அழுகை.



# ஆட்டனத்தி

“சரி சரி... பாத்துக்கிறேன். யாழை ஸ்கூல்லெ விட்டுட்டு வந்தர்றேன், போகலாம்.”

முப்பது கிலோ மீட்டர் தொலைவில்தான் அக்கா வீடு இருந்தது. மருத்துவமனையிலிருந்து ‘பாடி’ அக்கா வீட்டிற்குச் சென்று விட்டதாகவும் தகவல். நீண்ட காலமாக மருத்துவமனையி லிருந்து சிகிச்சை பெற்றிருந்ததால் ரொம்ப நேரம் வீட்டில் ‘பாடி’யை வைத்திருக்க மாட்டார்கள். கூடுதல் தகவலாக இருந்தது.

மோட்டார் சைக்கிளில் போகும்போதே கனகா பின் இருக்கையில் அமர்ந்து கொண்டு அழுதபடியே வந்தாள். இழவு வீட்டிற்கு நூறடி

தொலைவிலேயே வண்டியை நிறுத்திக் கொண் டான் சீதாராமன். மோட்டார் சைக்கிள், மொபட், கார், சைக்கிள் என்று விதவிதமாக அங்கு நிறுத்தப்பட்டிருந்தன.

மோட்டார் சைக்கிளை விட்டு இறங்கியதுமே தன் சேலை முந்தானையை எடுத்து வாயை மூடியவாறே 'நான் வர எப்படியும் ஒரு வாரமாவது ஆகும். கருமாதிக்கு வேணும்னா யாழைக் கூட்டிட்டு வருவீங்களாம். செடிகளைக் காய விட்றாதீங்க' என்று அழுதவாறே சொன்னவள், தன் கணவன் வண்டியை நிறுத்திவிட்டு உடன் வரட்டும் என்றுகூடக் காத்திராமல் 'அக்கா' என்று பெருங்குரலெடுத்து அழுதவாறே சவம் வைக்கப்பட்டிருந்த இடம் நோக்கி விரைந்தாள்.

வெயில் கடுமையாக இருந்தது. எங்கும் மரங்களில்லாத புதிய நகர். இருக்கும் காலி மனைகளில் எல்லாம் கட்டடங்கள் எழும்பி விட்டால் அவற்றையொட்டி செடிகொடிகள், மரங் கள் என்று அடர்ந்து வெயிலின் தாக்கம் குறைவதற்கு ஏதுவாகப் போகும். சீதாராமன் மகள் யாழ் தண்ணீர் ஊற்றுவதையே பார்த்துக் கொண்டி ருந்தான். அவன் முகம் இறுகிக் கிடந்தது.

"என்னெ பெரிம்மா ஊட்டுக்குக் கூட்டிட்டுப் போறேன்னெ... அங்கெயும் கூட்டிட்டுப் போகலே. பெரிம்மா ஊட்டுக்குப் போகலாமா..." என்று இழுத் தவள், "அம்மா எப்பப்பா வருவா?" என்று கேட்டாள்.

யாழ் பேசுவதைக் கேட்டும் கேட்காமலேயே செல்போனில் யாரிடமோ பேசிக் கொண்டி ருந்தான்.

"ஆமா, ரைட்லெ திரும்புங்க... ரோட்டி லிருந்து கொஞ்ச தூரந்தா... சரி வந்தர்றீங்களா... நான் முன்னாலேயே நிற்கிறேன்ஷெ."

சற்றைக்கெல்லாம் வீட்டு வாசல் முன்னால் டெம்போ ஒன்று வந்து நின்றது. கம்பிகள், சாமியானாத்துணி, சிறிய கடப்பாரைக் கம்பிகள் சகிதம் வந்த இருவர் இறங்கி, இறக்கிக்கொண்டு இருந்தார்கள்.

மளமளவென்று வேலை நடந்து கொண்டு இருந்தது. நான்கு புறமும் சாமியானாத் துணியின் முனைகளில் பத்தடி நீளமுள்ள கம்புகளைப் பொருத்தி இணைத்துத் தூக்கி நிறுத்தினார்கள். சாமியானாத் துணியில் இணைத்திருந்த கயிறை நான்கு புறமும் அடித்திருந்த ஆணியில் சுற்றிக் கட்டினார்கள். இப்போது பந்தல் போல ஆனது சாமியானாத் துணி.

காந்திக் கொண்டிருந்த வெயில், சாமி யானாப் பந்தலுக்குள் நுழைய முடியாமல் எங் கேயோ ஓடி ஒளிந்து கொண்டு இருந்தது. யாழ்ப்ரியா இதைப் பார்த்துக்கொண்டேயிருந்தவள் அப்பாவிடம் ஓடி வந்தாள்.

"ஏப்பா, செடிகளெல்லாம் வெயில்லெ காயுமேன்னு பந்தல் போட்டிருக்காங்களாப்பா...?" என்று செடிகள் பரவி நின்றிருந்த இடத்தைப் பார்த்துக்கொண்டே சொன்னாள். செடிகளின்மீது நிழல்கள் படர்ந்திருப்பதைப் பார்த்ததும் ஒரு பரவசம். செடிகள் இனி வாடாதுதானே... மனத் துள்ளல்!

"அம்மா எப்பப்பா வருவா... இந்த நிழலெப் பார்த்தா சந்தோஷப் படுவான்னுதானே பந்தல் போட்டே..."

செல்போன் ஒலித்தது.

"ம்ம் சரி..." என்று சொன்னதோடு நிறுத்திக்கொண்டான் சீதாராமன். சாமியானாவை எடுத்துக்கொண்டு வந்த டெம்போவே திரும்பிப் போய் பிளாஸ்டிக் சேர்களையும் எடுத்து வந்து இறக்கிக் கொண்டிருந்தது.

செல்போன் மறுபடியும் ஒலித்தது.

முன் ஹாலில் அங்கேயிருந்த பொருள் களையெல்லாம் வேறோரிடத்தில் வைத்துவிட்டு, தெற்கு வடக்கு முகமாக நீண்டதொரு மேஜை வைத்தாகிவிட்டது. தங்கச்சி ஏற்கனவே விளக்கில் திரிபோட்டு எண்ணெயை ஊற்றி வைத்துவிட்டு, அப்பா, அம்மாவைக் கூட்டிவரப் போயிருந்தாள். வந்து விடுவாள்.

வாசலின் ஓர் ஓரத்தில் பிளாஸ்டிக் சேர் ஒன்றை எடுத்துப்போட்டு உட்கார்ந்தான். கால் களின் இடையில் வந்து நின்றுகொண்டு யாழ் ப்ரியா "இந்தப் பிளாஸ்டிக் சேரெல்லாம் எதுக்குக் கொண்டுவந்து போடச் சொன்னே?" என்று இழுத்தவள்,

"அப்பா, அப்பா, அம்மா எப்பப்பா வருவா?" என்று சீதாராமனின் வயிறையும், தொடையையும் அடித்தவாறே கேட்டுக் கொண்டிருந்தாள்.

சீதாராமனின் முகம் இறுகிக் கிடந்தது.



“வந்துருவா...”

இப்போதும் போன் ஒலித்தது.

“அண்ணா, நீங்க சொல்லிய இடத்தி லேயே...”

“சரி” போனை வைத்துவிட்டுத் திரும்பி னான்.

அங்கே தார்ச்சாலையை விட்டுத் தன் வீட்டை நோக்கித் திரும்பிக் கொண்டிருந்தது ஆம்புலன்ஸ்!

பின்தொடர்ந்து ஐந்தாறு கார்கள், பைக்குகள்... அந்தப் புதிய நகரில் அங்கொன்றும் இங்கொன்றுமாய் உள்ள வீடுகளில் இருந்தவர்கள் உரத்த குரலில் 'வந்தாச்சு' என்றவாறே ஓடி வந்து குழுமினார்கள்.

ஆம்புலன்ஸ் நிறுத்தப்பட்டுக் கதவுகள் திறக்கும் முன்பே, பின்னால் வாகனங்களில் வந்தவர்கள் சித்திகள், மாமாக்கள் என்று உறவுகள் அனைவரும் யாழ்ப்ரியாவை அணைத்துக் கொண்டு பெருங்குரலெடுத்து அழத் தொடங்கினார்கள். யாழ்ப்ரியா ஒன்றுமே புரியாத நிலையில் அவளும் அழத் தொடங்கினாள்.

ஆம்புலன்ஸிலிருந்து இறக்கப்பட்ட ஐஸ் பெட்டியை நான்கைந்து பேர் சேர்ந்து தூக்கி வந்தார்கள். கண்ணாடி அமைப்புடன் கூடிய ஐஸ் பெட்டிக்குள் மாலை சகிதம் படுக்க வைக்கப் பட்டிருந்தாள் கனகா! நெற்றி நிறையத் திருநீறும் சந்தனமும்.

முன் ஹாலில் இருந்த மேஜையின்மீது ஐஸ் பெட்டியை வைத்தார்கள். சித்தி ஒருத்தி யாழ்ப்ரியாவைத் தூக்கிக்கொண்டு வந்து ''அம்மாவப் பாரடா கண்ணு... நம்மையெல்லாம் உட்டுட்டுப் போயிட்டா'' என்றாள்.

இதுவரை புரிந்தும் புரியாமலும் இருந்தவள், சித்தியின் இடுப்பிலிருந்து கீழே இறங்கி, கண்ணாடிப் பெட்டியை ஓங்கி ஓங்கி அறைந்து கொண்டே, ''அம்மா... அம்மா... ஏம்மா உள்ளே படுத்திருக்கிறே? ஏம்மா எந்திரிச்சு வா...'' என்றவாறே சொல்லி அழுதது அங்கிருந்த எல்லோரையும் பெருங்குரலெடுத்து அழவைத்த பரிதாபம்!

வாசலில் இருந்த பிளாஸ்டிக் சேர்களில் ஒன்றில் உட்கார்ந்திருந்த சீதாராமன் தோளில் போட்டிருந்த துண்டின் தலைப்பால் வாயை மூடிக் கொண்டு தன்னை வந்து துக்கம் விசாரிக்கிறவர்களிடம் தேம்பி அழுதவாறு இருந்தான்.

''பார்வதியக்கா கணவர் சவமாய்க் கிடப்பதைப் பார்த்ததும் கனகாவுக்கு எங்கிருந்துதான் அத்தனை ஆக்ரோஷம் வந்ததோ, ''அக்கா... நீ என்ன பண்ணுவையக்கா... என்ன பண்ணுவே''ன்னு முடியெப் பிடிச்சு இழுத்தவள் அப்படியே மயங்கிச் சரிஞ்சுட்டா... தண்ணியெ எடுத்து மூஞ்சிலெ தெளிச்சுப் பார்த்தா மயக்கம் தெளியலே... பார்வதியக்கா புருஷன் செத்துப் போன துக்கம் ஒரு புறம், எல்லோரும் கனகாவுக்கு என்னாச்சு, என்னாச்சுன்னு துடிச்சுப் போயிருக்காங்க...'' என்று சொல்லி நிறுத்திய மணிகண்டன், சீதாராமனைப் பார்த்தபடியே இருந்தான்.

''அதிகமா உணர்ச்சிவசப்பட்டிருக்காங்க. ரத்தக் கொதிப்புள்ளவர்களுக்கு இப்படி வர்றதுண்டு. மூளைக்குச் செல்லும் ரத்தக் குழாய் வெடிக்கும் நிலையிலிருக்கு. இருபத்தி நான்கு மணி நேரத்திற்குப் பிறகுதான் எதுவும் சொல்ல முடியும். எங்க கையிலெ என்ன இருக்கு? எல்லாம் கடவுள் செயல்''ன்னு ஐ.சி.யூ.விலிருந்து வெளியே வந்த டாக்டர் சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

யாழ்ப்ரியா, சீதாராமனின் மடியில் உட்கார்ந்து அண்ணாந்து பார்த்தபடி, ''ஏப்பா... அம்மா செத்துப் போயிட்டாளா? எனக்கு முத்தம் கொடுக்க வர மாட்டாளா?'' என்று கேட்டவாறேயிருந்தது பரிதாபமாக இருந்தது.

''கனகாவோட அக்கா வீட்டுக்காரர் என் பெரிய சகலை இறந்துட்டார்ன்னு போனோம். போன இடத்திலெ இப்படி ஆகிவிட்டது. கனகா நல்லாத்தா இருந்தா. ஒரு நாளும் சோர்ந்து உட்கார்ந்ததில்லெ... வீட்டுத்தோட்டம் போடறேன்னு சொல்லி எத்தனை பாடுபட்டா...'' என்று அழுது கொண்டே தன் மனைவி பற்றித் துக்கம் விசாரிக்க வந்த தன் சகாக்களிடம் சொல்லிக் கொண்டிருந்தான்.

''நா வர்றதுக்கு ஒரு வாரமாகும்... செடிகளெ வாட உட்றாதீங்கன்னு திரும்பத் திரும்பச் சொல்லீட்டே இருந்தா... அம்மா வந்தா உன்னெத் திட்டுவாளேன்னு யாழ்ப்ரியா தண்ணி ஊத்தி எப்படிப் பண்ணியிருக்கா பாருங்க...'' என்று முன்னால் அமைந்திருந்த தோட்டத்தைப் பார்த்துச் சொன்னவன், ''அவளுக்கு அம்மா செத்துப்போனாங்கற விபரம் இப்பத்தான் தெரியும்'' என்றவாறு மேல் துண்டால் கண்களைத் துடைத்தவாறே சொன்னான் சீதாராமன்.

செடிகளிலும், செடிபடர்ந்து பதிந்து இருக்கும் இடங்களிலும் நீர் சொதும்பிப் போய் இருந்தது. நான்கு நாட்களுக்கு முன்பு மணிகண்டன் கொண்டு வந்து கொடுத்த தூதுவளை, வல்லாரை, கரிசலாங்கண்ணி, கீழாநெல்லி நாற்றுகள் இருந்த சிறிய சிறிய மண்தொட்டிகளின் மேல்பகுதியிலிருந்த சிறு துவாரங்களின் வழியாகத் தண்ணீர் வடிந்து கொண்டிருந்தது. ●

கட்டுரை

முனைவர் இரா.மோகன்



# குறுந்தொகையில் ‘நிலா’

‘**கா**தலைப் பாடாத கவிஞன் இல்லை; காதலைப் பாடாதான் கவிஞன் இல்லை’ என்பார்கள். அது போல, நிலவைப் பாடாத கவிஞன் இல்லை; நிலவைப் பாடாதான் கவிஞன் இல்லை எனலாம்.

வாழையடி வாழை எனக் காலந் தொறும் தோன்றிய கவிஞர்கள் யாவரும் குளிர்நிலவு தரும் கொள்ளை இன்பத்தையும் அது உள்ளத்தே ஏற்படுத் தும் உணர்வு அலைகளையும் பாடி வந் துள்ளனர். இவ்வகையில் குறுந்தொகை யில் நிலவு குறித்து இடம்பெற்றுள்ள சில சொல்லோவியங்களை ஈண்டுக் காணலாம்.

***கன்னிப் பெண்கள் தொழும் மூன் றாம் பிறை :*** குறுந்தொகையில் நெடும் பல்லியத்தனார், நெடும் பல்லியத்தை என்ற பெயர்களில் இரு புலவர்கள் காணப்படுகின்றனர். பல்லியம் என்பது பல வாத்தியங்களைக் குறிக்கும். நெடிய பல வாத்தியங்களை உடைமையின் ‘நெடும்பல்லியத்தனார்’ என்ற பெயர் அவருக்கு வந்தது எனக் கருத இடம் உள்ளது.

இப்பெயருக்கு ஏற்ப இவர் புற நானூற்றில் பாடிய ஒரு பாடலில் ‘நல் யாழ் ஆகுளி பதலையொடு சுருக்கிச் செல்லா மோதில் சில்வளை விறலி’ *(64)* எனக் கூறியிருப்பது நோக்கத் தக்கது. நெடும் பல்லியத்தை ஒரு பெண்பாற் புலவர். இவர் நெடும் பல்லியத்தனாரின் உடன்பிறந்தாரோ என்று ஊகிக்கப்படு கிறார் (பாடினோர் வரலாறு, குறுந் தொகை மூலமும் உரையும்) என்பது பதிப்பு வேந்தர் உ.வே.சா.வின் கருத்து.

தலைவனும் தலைவியும் மணம் புரிந்து கொண்டு இல்லறம் நடத்தும் மனைக்குச் சென்ற தோழி, தலைவி யோடு அளவளாவு தலில் தலைவனுக்கு இருக்கும் விரை வைக் கண்டு, “கற்புக் காலத்தில் இப் படித் தலைவியோடு இணைந்தும் பிணைந்தும் இருக்கின்ற நீர், களவுக் காலத்தில் தலைவியைச் சந்தித்து அள வளாவ வேண்டும் என்ற நும் விரைவை வெளிப்படுத்த இயலாமல் மிக வருந்தி இருத்தல் வேண்டும்; பொறுமை



காத்திருக்க வேண்டும். நீர் தலைவிபால் கொண்ட அன்பின் திறத்தினை யான் முன்பு அறிந்திலேன்; இப்போது அதனை அறிந்து வருந்துகிறேன்” என்று கூறி இரங்குகிறாள்:

> “தொழுதுகாண் பிறையின் தோன்றி யா(ம்)நுமக்கு
> அரியம் ஆகிய காலை
> பெரிய நோன்றனிர் நோகோ யானே” (178)

பிறை மூன்றாம் நாள் சந்திரன். அது திங்களுக்கு ஒருமுறையே தோன்றுவது. ஆதலின் தலைவி, தலைவனுக்குக் களவுக் காலத்தில் காண்பதற்கு அரிய ளாய் இருப்பதற்கு, மூன்றாம் பிறை கண்டு தொழுவதற்கு அரிதாய் இருத் தலை உவமை கூறியுள்ளார் நெடும் பல்லியத்தை.

களவுக் காலத்தில் தலைவன் தலைவியைக் காண்பது என்பது மிகவும் அரிதாக இருந்தது. மகளிர் தொழுது காணும் பிறை வானில் காண்பதற்கு அரிதாகத் தோன்றி சற்று நேரத்தில் மறைவது போல, தலைவியும் எப்போதோ ஒருமுறை எதிர்ப்பட்டு விரைந்து நீங்குபவளாக இருந்தாள்.

'தொழுதுகாண் பிறை' என்னும் தொடர் சங்க காலத்தில் மகளிர் திங்களுக்கு ஒருமுறை அரிதாகத் தோன்றும் மூன்றாம் பிறையை வணங்கும் வழக்கத்தினை மேற்கொண்டிருந்






தமையைப் புலப்படுத்துகின்றது.

கடம்பனூர்ச் சாண்டிலியன் என்னும் புலவர் பாடிய பிறிதொரு குறுந்தொகைப் பாடலில் வரும் தலைவி, தலைவன் தன்னைப் பிரிந்திருக்கும் காலத்திலும் தனக்குத் துன்பத்தைத் தரும் வகையில், 'வளையை உடைத்தது போல, கன்னி மகளிர் பலரும் தொழத் தோன்றியது பிறை' என நினைந்து வருந்துகின்றான்.

"வளைஉடைத் தனையது ஆகிப் பலர்தொழச்

செவ்வாய் வானத்து ஐயெனத் தோன்றி

இன்னம் பிறந்தன்று பிறையே" (307)

"ஒள்ளிழை மகளிர் உயர்பிறை தொழூஉம்

புல்லென் மாலை"

என அகநானூற்றுப் பாடல் ஒன்றும் (239) இவ்வழக்கத்தினைச் சுட்டுவது குறிப்பிடத்தக்கது.

**மகளிர் நெற்றிக்கு உவமையாகும் எட்டாம் நாள் திங்கள் :** குறுந்தொகை 129–ஆம் பாடல் கோப்பெருஞ் சோழன் இயற்றியது; 'தலைமகன் பாங்கற்கு உரைத்தது' என்னும் துறையில் அமைந்தது. தலைவியோடு அளவளாவி மீண்ட தலைவனது வாட்டத்தைக் கண்ட பாங்கன், "உனக்கு இவ்வாட்டம் உண்டானதற்குக் காரணம் யாது?" என வினவுகிறான். "ஒரு மங்கையின் சிறிய நெற்றி என் உள்ளத்தைப் பிணித்தது" என்று அவனுக்கு மறுமொழி கூறுகிறான் தலைவன். அவனது கூற்றினைத் தன்னகத்தே கொண்ட குறுந்தொகைப் பாடல் வருமாறு:

"மாக்கடல் நடுவண் எண்ணாள் பக்கத்துப்

பசுவெண் திங்கள் தோன்றி யாங்குக்

கதுப்புஅயல் விளங்கும் சிறுநுதல்...

... ... ... பிணித்தற்றால் எம்மே"

எண்ணாள் பக்கம் – எட்டாவது திதி; அட்டமி. பசுமை – இளமை. மகளிர் கூந்தலுக்குக் கடலும், கடல் நடுவே எழுந்த நெற்றிக்கு எண்ணாள் பக்கத்துத் திங்களும் உவமைகள். கருநிறக் கூந்தலை அடுத்து விளங்கும் சிறுநெற்றி, கரிய கடலில் தோன்றும் எட்டாம் பிறைத் திங்களைப் போல உள்ளது.

'கதுப்பு அயல் விளங்கும் சிறுநுதல்' என்றது அளகம் ஆகிய முன்னுச்சி மயிருக்கு அருகில் விளங்கும் நெற்றி என்றபடி. 'குழவிப் பருவத்து ஒரு கலையுடைத்தாய்ப் பின்பு இளமைப் பருவத்தில் நின்ற பிறை, மகளிர் நெற்றிக்கு உவமை' என்னும் நச்சினார்க்கினியரின் உரைக்குறிப்பு ஈண்டு நினைவுகூரத் தக்கதாகும்.

**வெண்ணிலவைப் பாடியதால் சிறப்புப் பெயர் பெற்ற புலவர்** : குறுந்தொகையில் சிறப்புப் பெயர்களால் அறியப் பெறும் புலவர்களாக 18 பேரைப் பட்டியல் இட்டுள்ளார் பதிப்பு வேந்தர் உ.வே.சா. (நூலாராய்ச்சி, குறுந்தொகை மூலமும் உரையும்). அவர்களுள் நிலவைப் பாடியதால் பெயர் பெற்ற ஒருவர் 'நெடுவெண்ணிலவினார்' ஆவார். களவுக் காலத்தில் இரவுக் குறியில் தலைவியைச் சந்திக்க வரும் தலைவனுக்கு இடையூறாக இருக்கும் நிலவை 'நெடுவெண்ணிலவே' என்று விளித்து வெறுப்புக் குறிப்புப் புலப்படப் பேசுகிறாள் தோழி. அவளது கூற்றாக அமைந்த குறுந்தொகைப் பாடல் வருமாறு:

"... ... ... காட்டிடை
எல்லி வருநர் களவிற்கு
நல்லை அல்லை நெடுவெண் ணிலவே" (47)

"நெடுவெண்ணிலவு – நெடுநேரம் எரிக்கும் வெண்ணிலவு; இயல்பாகத் தனக்கமைந்த பொழுதின் மாத்திரம் எரிக்கும் நிலவாயினும், விரைவில் மறைய வேண்டுமென்னும் விருப்பினளாதலின், அவளுக்கு அருமை உடையதாகத் தோன்றியது; தம்மால் விரும்பப்படாத நிலவை, 'நெடு வெண்ணிலவு' என்று கூறுவதாக அமைந்த சிறப்பால் இச்செய்யுளை இயற்றிய நல்லிசைப் புலவர் 'நெடு வெண்ணிலவினார்' என்னும் பெயர் பெற்றார்" (குறுந்தொகை மூலமும் உரையும், ப.105) என்பர் உ.வே.சா.

தலைவன் இரவில் தலைவியிடம் வந்து பழகும் காலத்தில் அவனை விரைந்து மணம் செய்து கொள்ளும் படித் தூண்ட எண்ணிய தோழி, இங்ஙனம் முன்னிலைப் புறமொழியாக நிலவிற்கு உரைப்பது போலப் பேசுகிறாள்; "நிலவே, நீ இரவில் வந்தொழுகும் தலைவரது களவொழுக்கத்திற்கு நன்மை செய்வாய் அல்லை" என்று கூறி இரவுக்குறியை மறுக்கிறாள். கூறப்படும் செய்தியைக் கேட்டு அறிவதற்கு உரியவர் முன்னே இருக்கவும் அவரை விளித்துக் கூறாமல், வேறு ஒருவரையேனும் பிறிதொரு பொருளையேனும் விளித்துக் கூறுவது முன்னிலைப் புறமொழி ஆகும்.

களவுக் காலத்தில் நெடிய வெண்ணிலாவில் தலைவியின் நீண்ட தோள்களைத் தழுவிடும் தலைவன் பற்றிய குறிப்பு பிறிதொரு குறுந்தொகைப் பாடலிலும் (193) காணப்படுகின்றது. 'நெடுவெண்ணிலவு' என்ற தொடராட்சி இப்பாடலிலும் இடம்பெற்றிருப்பது நோக்கத்தக்கது.

'வளர்பிறை போல வழிவழிப் பெருகி' எனவரும் குறுந்தொகைப் பாடல் ஒன்றின் (289) முதல் அடியும் இங்கே மனங்கொளத் தக்கதாகும்.







இங்ஙனம், செவ்வானத்தில் அரிதாக முகம் காட்டும் உடைந்த வளையைப் போலக் காட்சி அளிக்கும் மூன்றாம் பிறையும், மகளிரின் நெற்றியைப் போலத் தோன்றுகின்ற எட்டாம் நாள் திங்களும், குளிர் வடிகின்ற வட்ட நிலாவும் குறுந்தொகைப் புலவர்களால் நெஞ்சை அள்ளும் அழகிய சொல் லோவியங்களாக வடிக்கப் பெற்றுள்ளன.

கட்டுரை

# ஹார்வர்டு பல்கலைக்கழகத்தில்



# 'தமிழ் இருக்கை'

தோன்றிய காலம் எது என்று அறிய முடியாத தொன்மையுடைய மொழி தமிழ்மொழி. காலமும், தமிழும் இரட்டைப் பிறவிகள். அதைத்தான் கல் தோன்றி மண்தோன்றாக் காலத்து மூத்த மொழி எனப் பெருமைப்படுத்தியது நம் இலக்கியம்.

'யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்' என்று தமிழ் மொழியின் சிறப்பைக் கூறினார் பாரதி. அதே போல், அமெரிக்க மொழியியல் அறிஞர் நோவாம் சாம்ஸ்கி "உலக மொழிகளுக் கெல்லாம் தாய்மொழி தமிழாகத்தான் இருக்க வேண்டும்" என்று தமது ஆய்வின்மூலம் நிறுவியுள்ளார்.

உலகச் செம்மொழிகளாக கிரேக்கம், லத்தீன், ஹீப்ரு, பாரசீகம், சமஸ்கிருதம், தமிழ், சீனம் ஆகியவை உள்ளன. இவற்றில் தொன்மை, எளிமை, இளமை, இனிமை, வலிமை, வளமை முதலான சிறப்புக்களை உடையது தமிழ்மொழி. அதுமட்டுமல்ல, இலக்கிய, இலக்கண வளம் வாய்க்கப்பெற்றதுமாகும்.

அவ்வகையில், தொன்மைச் சிறப்புகள் கொண்ட நம் தமிழ்மொழிக்கு 350 ஆண்டுகள் பழமை வாய்ந்த அமெரிக்க ஹார்வர்டு பல்கலைக்கழகத்தில் இது வரை 'தமிழ் இருக்கை' (Tamil Chair) இல்லை.

தமிழைத் தவிர மற்ற ஆறு செம் மொழிகளுக்கும் ஹார்வர்டு பல்கலைக் கழகத்தில் இருக்கைகள் உள்ளபோது, தமிழ்மொழிக்கு மட்டும் இல்லை என்பது ஆச்சரியமாக உள்ளது.

தமிழ்மொழியின் தொன்மை, சிறப்பை உலகுக்கு அறிவிக்கத் தமிழ் இருக்கை அவசியம். அப்படி, தமிழ் ஈன்


திருஞானசம்பந்தம், அ. முத்துலிங்கம், ஜானகிராமன்

மொழிக்கு இருக்கை அமைக்க வேண்டு மானால், ஹார்வர்டு பல்கலைக் கழகத்திற்கு ஆதார நிதியாக ரூ 39 கோடி செலுத்த வேண்டும். அதற்காக அமெரிக்கா வாழ் தமிழர்களால் அமைக்கப்பட்டதுதான் 'ஹார்வர்டு தமிழ் இருக்கை அமைப்பு' (Harvard Tamil Chair Inc).

இந்த அமைப்பு தமிழ்மொழிக்கு இருக்கை அமைக்கும் முயற்சியைக் கடந்த 3 ஆண்டுகளாகச் செய்து வரு கிறது. இந்த அமைப்பின் முதன்மை இயக்குநர்களாக அமெரிக்காவில் புலம்பெயர்ந்து வாழும் தமிழ் மருத்து வர்கள் ஜானகிராமன், திருஞான சம்பந்தம் ஆகிய இருவரும் ஹார்வர்டு பல்கலைக்கழகத்தில் தமிழ் இருக்கை அமைப்பதற்கான ஆதார நிதியான ரூ. 39 கோடியில் ரூ. 6 கோடியை நன் கொடையாக அளித்துள்ளனர். மேலும் 2500–க்கும் மேற்பட்ட தமிழ் ஆர்வலர் களிடமிருந்தும் நிதி திரட்டியுள்ளனர்.

அவர்களைத் தொடர்ந்து தமிழ் இருக்கை அமைப்பு இயக்குநர்களான கனடாவில் புலம்பெயர்ந்து வாழும் தமிழ் எழுத்தாளர் அ. முத்துலிங்கம், தமிழகப் பேராசிரியர் மு. ஆறுமுகம், தொழிலதிபர் பால் பாண்டியன் ஆகி யோரும் தமிழ் இருக்கைக்கு நன் கொடை அளித்துள்ளனர்.

ஹார்வர்டில் தமிழ் இருக்கை அமைக்கத் தமிழக அரசு நிதியளிக்க வேண்டும் என முன்னாள் முதல்வர் ஜெயலலிதா அவர்களிடம் அமெரிக்க வாழ் தமிழர்கள் வி. ஜானகிராமனும், திருஞானசம்பந்தமும் சில ஆண்டு களுக்கு முன்பு கோரிக்கை வைத்தனர்.

அந்தக் கோரிக்கையை ஏற்றுக் கொண்ட ஜெயலலிதா அவர்கள், 2016–ஆம் ஆண்டுத் தேர்தலின்போது வெளியிடப்பட்ட தேர்தல் அறிக்கையில் "தமிழ் மொழியின் சிறப்புகளை உலகெங் கும் கொண்டு செல்லும் வகையில் ஹார்வர்டு பல்கலைக்கழகத்தில் ஓர் இருக்கை ஏற்படுத்தப்படும் என்று அறிவித்தார். துரதிர்ஷ்டவசமாக அவர் இன்று நம்மிடையே இல்லை.

அவருடைய அறிவிப்பைச் செயல் படுத்தும் விதமாகத் தற்போது தமிழக முதல்வர் எடப்பாடி கே. பழனிச்சாமி அவர்கள் ஹார்வர்டு பல்கலைக் கழகத்தில் தமிழ் இருக்கை ஏற்படுத்த தமிழக அரசின் சார்பில் ரூ. 10 கோடி

**மா.செல்வராஜ்**

நிதி வழங்கப்படும் என்று அறிவித் துள்ளார்.

தமிழக அரசு ரூ. 10 கோடி அளித் துள்ளதன்மூலம் ஹார்வர்டில் தமிழ் இருக்கைக்குச் செலுத்த வேண்டிய நிதி யில் பெரும் சுமை குறைந்துள்ளது. இனித் தேவைப்படும் நிதி வெறும் ரூ 2 கோடிதான்.

இதனைத் தொடர்ந்து, வரும் தை மாதத்திற்குள் ஹார்வர்டில் தமிழ் இருக்கை அமைக்க தனியார் பெரு நிறு வனங்கள், தமிழ் ஆர்வலர்கள், தமிழ்ச் சங்கங்களிடமிருந்து நிதி திரட்டி அளிக்

கப்படும் என்று தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு மற்றும் தொல்லியல் துறை அமைச்சர் மாண்புமிகு பாண்டியராஜன் அவர்கள் அண்மையில் நடந்த நிகழ்ச்சி ஒன்றில் உறுதிபடத் தெரிவித்துள்ளார். அதனால் ஹார்வர்டில் தமிழ் இருக்கை அமைவது கிட்டத்தட்ட உறுதி செய்யப்பட்டுவிட்டது என்றே சொல்லலாம்.


ஆறுமுகம்


பால் பாண்டியன்

இதுவல்லாமல், மலேசியா வாழ் தமிழ் ஆர்வலர் தான்ஸ்ரீ கே.ஆர். சோமசுந்தரம் ரூ. 1 கோடி, நடிகர் கமல்ஹாசன் ரூ. 20 லட்சம், இசையமைப்பாளர் ஏ.ஆர். ரகுமான் ரூ. 16 லட்சம், மதுரை திருப்பரங்குன்றத்தைச் சேர்ந்த ஓய்வு பெற்ற தமிழாசிரியர் கோ. ராமசாமி ரூ. 5 லட்சம், தமிழக முன்னாள் பள்ளிக் கல்வித் துறை அமைச்சர் திரு. வைகைச் செல்வன் ரூ. 1 லட்சத்து 44 ஆயிரம், சிந்தனைக் கவிஞர் முனைவர் கவிதாசன் ரூ. 1 லட்சம் மற்றும் கவிப்பேரரசு வைரமுத்து, நடிகர் விஷால் மற்றும் பல்வேறு துறைகளைச் சேர்ந்தவர்கள் தமிழ் இருக்கைக்கு நிதியுதவி அளித்துள்ளனர், அளித்தும் வருகின்றனர்.

இதுபற்றி இன்னொன்றையும் சிந்திக்க வேண்டியுள்ளது. ஹார்வர்டில் தமிழ் இருக்கை அமைய, தமிழக அரசு ரூ. 10 கோடி நிதி அளிப்பதாக அறிவிக்கப்பட்டிருப்பது பாராட்டத்தக்கது, பெருமைப்படத்தக்கது. ஆனால், உலகின் மூத்த மொழி, செவ்வியல் மொழி என்று கூறப்படுகின்ற தமிழ் மொழிக்கு ஹார்வர்டில் இருக்கை அமைப்பதற்கு அதற்கான மொத்த ஆதார நிதியாகிய ரூ. 39 கோடியையும் தமிழக அரசே ஒரே தவணையில் செலுத்தியிருந்தால் அது தமிழுக்கும், தமிழ்நாட்டிற்கும், தமிழருக்கும் பெருமை சேர்ப்பதாக அமைந்திருக்கும்.

ஆனால், ரூ. 10 கோடி என்று தவணை முறையில் நிதியளித்துத் தமிழுக்கு இருக்கை அமைக்க வேண்டிய அவசிய நிலை தமிழ்மொழிக்கு ஏற்பட்டு விட்டதோ என்ற ஆதங்கம் பெரும்பான்மையான தமிழ் ஆர்வலர்களின் மனதில் நிச்சயம் ஏற்பட்டிருக்கும் என்பதில் ஐயமில்லை.

ஒருவேளை முன்னாள் முதல்வர் ஜெயலலிதா அவர்கள் இருந்திருந்தால், தேர்தல் அறிக்கையில் அவர் அறிவித்திருந்தபடி தமிழ் இருக்கை அமைவதற்கான மொத்த ஆதார நிதியாகிய ரூ. 39 கோடியையும் ஒரே தவணையில் அளித்து ஹார்வர்டில் தமிழுக்கு அரியாசனம் ஏற்படுத்தியிருப்பாரோ என்ற எண்ணம் பலரின் மனதில் எழாமல் இல்லை.

உலகச் செம்மொழிகளுள் ஒரே நாட்டின் இரண்டு மொழிகள் செம்மொழிகளாக இருப்பவை தமிழ், சமஸ்கிருதம் மட்டுமே. இந்த இரண்டு செம்மொழிகளுள் சமஸ்கிருதத்திற்கு மட்டும் ஹார்வர்டில் இருக்கை உருவாக்கப்பட்டுள்ளது. அதுபோலவே தமிழ்மொழிக்கும் அதற்குரிய ஆதார நிதியை அளித்து தமிழ் இருக்கையை மத்திய அரசு உண்டாக்கியிருக்க வேண்டும். ஆனால், தமிழ்மொழி புறக்கணிக்கப்பட்டுள்ளது. இது, ஒரு கண்ணுக்கு அழகிய மை தீட்டிவிட்டு மறுகண்ணுக்குத் தீட்டாமல் விட்டதுபோல் உள்ளது.

ஏதோ இங்கிலாந்து, இத்தாலியினுடைய மாநிலமாகத் தமிழ்நாடு இல்லை. இந்தியாவுக்குள் அதுவும் இந்தியாவின் பொருளாதார வளர்ச்சிக்கு முக்கியப் பங்காற்றும் மாநிலமாகத் தமிழ்நாடு உள்ளது. அதனால், தமிழகத்தின்மீதான

## 'தமிழ் இருக்கை'க்குப் பதியமிட்டவர்!




**அ**மெரிக்க ஹார்வர்டு பல்கலைக்கழகத்தில் 'தமிழ் இருக்கை' அமைப்பதற்கான முதல் முயற்சியைச் செய்தவர் அமெரிக்காவில் ஹவாய்த் தீவில் வசித்துவரும் தமிழ்ப் பேராசிரியர் வைதேகி ஹெர்பர்ட். இவர் 18 சங்க இலக்கியங்களையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர். அதற்காக இவரைப் பாராட்டும் முகமாக நடந்த விழாவில்தான் ஹார்வர்டில் தமிழ் இருக்கை அமைப்பதற்கான முயற்சி எடுக்கப்பட்டது.

அத்தனை உரிமையும் மத்திய அரசுக்கு உண்டு.

அப்படி இருக்கும்போது, தமிழ் மொழிக்கு ஹார்வர்டில் இருக்கை அமைத்துத் தரவேண்டிய பொறுப்பும் கடமையும் மத்திய அரசுக்கு உள்ளது. ஆனால், தமிழ்மொழியை மத்திய அரசு கவனத்தில் கொண்டதாகத் தெரியவில்லை. மாற்றாந்தாய் மனப் பான்மையுடன் நடந்து கொள்வதாகவே எண்ணத் தோன்றுகிறது.

ஆக, தமிழ் ஆர்வலர்களின் முழு முயற்சியில் எதிர்வரும் ஜூன் மாதத் திற்குள் ஹார்வர்டில் தமிழ் இருக்கை உருவாக்கப்படும் பட்சத்தில், தமிழுக்குக் கிடைக்கும் உலக அங்கீகாரம் அளவிடற்கரியது. இதன்மூலம் – 'அயல் நாடுகளில் தமிழ்மொழியை அடிப் படையாகக் கொண்டு இந்தியவியல் குறித்து ஆய்வுகள் மேற்கொள்ளும் முயற்சிகள் நடைபெறும். ஆராய்ச்சிக் கல்வியில் தமிழ் இலக்கியம், இலக் கணம், பண்பாடு முதலிய ஆய்வுகளை மேற்கொள்ளும் வகையில் மாணவர்கள் உருவாக்கப்படுவார்கள்.

தமிழ் தொடர்பான ஆவணங்கள் ஆய்வுக்கு உட்படுத்தும் நடவடிக்கைகள் உருவாகும். பதிப்பிக்கப்படாத ஆவணங்களைப் படியெடுத்துப் பதிப் பிக்கும் முயற்சிகள் உண்டாகும். பிற மொழிகளைப் பன்னாட்டினர் கற்க ஆர்வம் காட்டுவதுபோல் தமிழையும் கற்று அதில் ஆய்வுகள் செய்யவும் அதிக அளவில் முன்வருவார்கள். நாமும் நமது மொழியியல் ஆய்வுகளைப் பிற நாட்டினரின் இலக்கிய ஆய்வுகளுடன் ஒப்பீடு செய்து முடிவுகளைப் பகிர்ந்து கொள்ள முடியும்' என்பன போன்ற நன்மைகள் உண்டாகும் என்பதை உறுதியாகக் கூறலாம்.

அதுமட்டுமல்ல, சம்ஸ்கிருதத்திற்கு ஹார்வர்டில் இருக்கை ஏற்படுத்தப் பட்ட பிறகு யோகாக்கலை ஆய்வு செய்யப்பட்டு, உடல் ஆரோக்கியத்திற்கு யோகா பயனளிக்கக்கூடியது என்ற ஆய்வு முடிவுகள் ஹார்வர்டில் வெளி யிடப்பட்டன. அதன்பிறகு யோகக் கலை உலகம் முழுவதும் பரவியது.

அதுபோல் தமிழுக்கும் இருக்கை ஏற்படுத்தப்படுமானால், அதன்மூலம் நமது சித்த மருத்துவமும் ஆய்வுக்கு உட் படுத்தப்பட்டு உலக அளவில் மிகப் பெரிய அங்கீகாரம் கிடைக்கப்பெறும் என்பதில் எவ்விதச் சந்தேகமுமில்லை.

ஆகவே, நமது சங்கப்புலவர்கள், ஆழ்வார்கள், நாயன்மார்கள், ஆன் றோர்கள், சான்றோர்கள், தமிழறிஞர்கள் முதலியோர் வளர்த்த தமிழுக்கு அமெரிக்க ஹார்வர்டு பல்கலைக் கழகத்தில் 'இருக்கை' அமைக்கும் முயற் சியை இருகை நீட்டி வரவேற்று இன்பத் தமிழ் உலகெங்கும் வளர்வதற்கு உறு துணையாக நிற்போம். •

## விவாதம்

# நூலிழையில் குஜராத் வெற்றி !

**2017**–ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் நடந்த குஜராத், ஹிமாச்சல் பிரதேசச் சட்டப்பேரவைத் தேர்தல்கள் பிரதமர் மோடிஜியின் மத்திய ஆட்சிக்கு ஒன்றரை ஆண்டு ஆயுள் உள்ள நிலையில், அதனை மதிப்பிடுவதற்கான தேர்தலாக அமைந்தது.



பாரதப் பிரதமர் நரேந்திர மோடி

ஹிமாச்சலப் பிரதேசத் தேர்தலில் 44 எம்.எல்.ஏ.–க்கள் பா.ஜ.க.வுக்கும், 21 எம்.எல்.ஏ.–க்கள் காங்கிரசுக்குமாக முடிவுகள் வெளி யாயின.

குஜராத் மாநிலத் தேர்தலை தேசம் முழுவதும் மட்டுமல்ல, உலகம் முழு வதுமே இதை உற்றுப் பார்த்தது. ஏனெனில், இந்தத் தேர்தல் பிரதமர் மோடி அவர்களின் சொந்த மாநிலத்தில் நடந்த தேர்தல். அதுமட்டுமல்ல. 'குஜராத் மாதிரி வளர்ச்சி' (Gujarat Model) என்று ஒரு முன்மாதிரியை உருவாக்கிய மாநிலம்.

குஜராத் மாநிலத்தில் ஊழல் பூஜ்யமாக்கப் பட்டது, எந்த அளவுக்கு உண்மை என்பது வாசகர் களின் தீர்மானத்திற்கு உரியது.

இத்தேர்தல் தருணத்தில் காங்கிரஸ் கட்சியின் 19 ஆண்டுத் தலைவர் சோனியா காந்தி, அரசியலி லிருந்து ஓய்வு பெறுகிறேன்



ராகுல் காந்தி

என்று அறிவித்ததோடு தலைவர் பதவிக்குத் தன் மகனையே நியமித்தார். ராகுல் காந்தியின் தலைமையில் நடந்த முதல் தேர்தல் இது. பிரதமர் மோடிக்குப் போலவே ராகு லின் தலைமைக்கும் இது பரீட்சைதான்.

ஏற்கனவே குஜராத் சட்ட சபையில் பி.ஜே.பி. அறுதிப் பெரும்பான்மையைவிட 23 எம்.எல்.ஏ.–க்களை அதிகம் பெற்றது. அந்த 23 இப்போது 7 ஆகக் குறைந்து விட்டது. இதனை உள்முகமாகப் பார்த் தால் இது பி.ஜே.பி.க்குப் பின்னடைவு தான்.

அதேசமயம், 61 எம்.எல்.ஏ.–க் களோடு குஜராத் எதிர்க்கட்சியான காங்கிரஸ், இப்போது 80 எம்.எல்.ஏ.–க் களைப் பெற்று மகத்தான தோல்வியை அடைந்துள்ளது. பி.ஜே.பி.–க்குச் சற்றுக் கவனப்பிசகு ஏற்பட்டிருக்குமானால், அதனுடைய சரிவு தோல்வியில் முடிந்திருக்கலாம்.

பிரதமர் மோடி ஏறக் குறைய 1 மாத காலம் தலை நகர் புதுடில்லியில் இருந் ததைவிட, குஜராத்தில்தான் வசித்தார். கடுமையான விமர்சனங்களையும் கண்டனத்திற்குரிய விமர் சனங்களையும் சந்தித்தார். ஜெயிப்பாரா என்ற சந்தேகம் எழும் அளவிற்கு ராகுலின்

பிரச்சாரக் கூட்டங்கள் விரிவடைந்து கொண்டிருந்தது. மோடி அவர்கள் வளர்ச்சியைப் பற்றி மட்டுமே தன்னுடைய பிரச்சாரக் கூட்டங்களில் விரிவாகப் பேசினார்.

ஏறக்குறைய 22 ஆண்டுக்காலமாக குஜராத்தில் நடந்த பி.ஜே.பி. ஆட்சியில், விவசாயம், தொழில், வேலைவாய்ப்பு, நிர்வாகம், மின்சார உற்பத்தி முதலிய அனைத்துத் துறைகளிலும் அபரிமிதமான வளர்ச்சியை குஜராத் பெற்றது.

எல்லா மாநிலங்களும் குஜராத்தையே மேற்கோள் காட்டி அப்படிப்பட்ட அபிவிருத்தியை அடைய வேண்டும் என முயற்சிகள் செய்தன என்பதைக் காங்கிரஸ் கட்சியின் மத்திய ஆட்சியால் மறுக்க முடியவில்லை. இந்தச் சாதனைகளுக்காகத்தான் பி.ஜே.பி.–யினுடைய தேர்தல்குழு முதலமைச்சர் மோடியைப் பிரதமர் வேட்பாளராகவே அறிவித்தது.

பிரதமர் வேட்பாளருக்காகக் காத்திருந்த அத்வானிஜி அதிர்ச்சியடைந்தார். மூத்தவர் முரளிமனோகர் ஜோஷி, ஓய்வு பெற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரி யஷ்வந்த் சின்ஹா ஆகியோரும் சமாதானம் அடையவில்லை.

மோடியின் பின்புலத்தைப் பற்றி எடுத்துச்சொன்ன மணிசங்கர் ஐயர், மோடிஜி பிரதமராகத் தகுதியற்றவர் என்பதற்கு, பிளாட்பாரத்தில் அவர் டீ விற்றவர் என்று விமர்சனம் செய்தார். அதற்குப் பதிலடியாக மோடிஜி, தான் தேநீர் விற்றது உண்மைதான் என்றும், காங்கிரசைப்போல தேசத்தை விற்கவில்லை என்றும் சொன்னது மக்களின் அமோக வரவேற்பைப் பெற்றது.

அதே மணிசங்கர் ஐயர்தான் மோடிஜி ஒரு நீசன் என்றால் நாக்கூசாமல் பேசினார். நீசன் என்பது, கீழ்ப் பிறவி என்பது போன்றதாகும். மணிசங்கர் ஐயர், அவரது பெயரின் பின் ஒட்டான சாதியின் பார்வையில், பிற்படுத்தப்பட்ட சாதியைச் சார்ந்த மோடிஜியை ‘நீசன்’ எனக் குறிப்பிட்டது அதிர்ச்சி அலைகளை எழுப்பியது.

சாதியின் பெயரைச் சொல்லி எவரையும் தாழ்வாகப் பேசுவது ஜனநாயகத்தில் மிகப்பெரிய தவறு, தண்டனைக்குரிய குற்றமுமாகும். இதே போலத்தான் மதத்தின் பெயராலும் விமர்சனம் செய்வதும் மாபெரும் குற்றமாகும்.

சோம்நாத் ஆலயத்தில் வழிபாட்டிற்குச் சென்ற ராகுல் காந்தி, ஹிந்துவா, கிறிஸ்தவரா என்று விமர்சனம் எழுந்தது. ஆனால், மோடிஜி அதைத் தன்னுடைய தேர்தல் பிரச்சாரக் கூட்டங்கள் எதிலும் குறிப்பிட்டுக் கூறவில்லை. காரணம், சாதியிலோ, மதத்திலோ அவருக்கு நம்பிக்கை இல்லை என்பது மட்டுமல்ல, மனிதன் அதைக் கடக்கக் கடமைப்பட்டவன் என்ற கொள்கையுடையவர்.

அதன் காரணமாகத்தான் அப்துல் கலாம் என்ற விஞ்ஞானியை விஞ்ஞானியாகவே பி.ஜே.பி. பார்த்ததே தவிர, வித்தியாசமாகப் பார்க்கவில்லை. அவரை ஜனாதிபதி தேர்தலில் ஜெயிக்க வைத்தவர் பிரதமர் வாஜ்பாய்.

மோடி ஆட்சியில் அதே விஞ்ஞானி அப்துல் கலாமுக்கு ராமேஸ்வரம் பேக்கரும்பு என்ற இடத்தில் ரூ. 20 கோடி செலவில் ஒரு மிகப்பெரிய நினைவு மண்டபத்தை அமைத்தவர் பிரதமர் மோடிஜி.

குஜராத் தேர்தலில் இந்திய ஜனநாயகத்திற்கு ஏற்படவிருந்த மிகப் பெரிய வீழ்ச்சியைத் தடுத்து நிறுத்திய ஒரு வரலாற்றுச் சம்பவம் நடந்துள்ளது.

சென்ற மூன்று மாதங்களுக்கு முன்பு அமெரிக்காவில் சுற்றுப்பயணம் மேற்கொண்ட ராகுல்ஜி ஒரு பல்கலைக் கழகத்தில் பேசியபோது, இந்திய ஜனநாயகம் வாரிசால் நடந்து வருகிறது என்றும் அதனால், பிரதமராவதற்குத் தானும் மறைமுகமாக வாரிசு (Dynasty) என்றும் கூறியதுடன், தமிழக முன்னாள்

முதல்வர் கலைஞரின் மகன் ஸ்டாலினும், உ.பி. முன்னாள் முதலமைச்சர் முலாயம்சிங் யாதவின் மகன் அகிலேஷும் தன்னைப் போல வாரிசுகளாக அரசியலில் இருக்கிறார்கள் என்றும் விளக்கினார்.

இந்திய ஜனநாயகத்தை இதைவிட யாராலும் இழிவுபடுத்த முடியாது. காரணம், மோடி வாரிசு அடிப்படையில் பிரதமராகவில்லை. முதலமைச்சருமாக வில்லை. மோடிக்குப் பிறகு பிரதமராகக் கூடிய பி.ஜே.பி. தலைவர் எவரும் மோடியின் வாரிசுமல்ல. ஏனெனில், பிரதமர் மோடியே ஒரு பிரம்மச்சாரிதான்.

வாரிசு அரசியல் என்பது ஒற்றைக் குடும்ப அரசியல் ஆகிவிடும் ஆபத்தும் அதில் உள்ளது.

வாரிசுக்குத்தான் ஆட்சி என்றால், இந்தியாவிற்கு எதற்குச் சுதந்திரம் – ஜனநாயகம் – தேர்தல் ஆகியனவெல்லாம்? ராகுல்ஜியின் இந்த வாரிசு அறிவிப்பை பி.ஜே.பி. ஏனோ பிரபலப் படுத்தி விமர்சனம் செய்யவில்லை.

ராகுல்ஜியின் தலைமையை குஜராத் தேர்தலில் தோற்கடிப்பதன் மூலமே இந்த வாரிசு அரசியலை வேரோடும், வேரடி மண்ணோடும் பிடுங்கி எறிய பிரதமர் மோடி நினைத்திருக்கலாம். அவர் எண்ணியபடிதான் நடந்திருக்கிறது. ஆனால், முன்பிருந்த பி.ஜே.பி. ஆட்சியைவிட இப்போது உருவாகியிருக்கிற பி.ஜே.பி. ஆட்சி, இளைத்து நோஞ்சானாகி விட்டது. எழுந்திருக்கவே முடியாமலிருந்த காங்கிரசோ இப்போது எழுந்து நின்று, புஜங்களை உயர்த்தி ஏறக்குறைய சவால் விடக் கூடிய சமநிலைக்கு வந்திருக்கிறது.

இந்த அபரிமிதமான ஆதரவுக்கான காரணத்தை எக்ஸ்–ரேக்கு உட்படுத்த வேண்டும். அப்போதுதான் உள்ளே இருப்பதை நன்றாகப் பார்க்க முடியும்.

அப்படிப் பார்த்தால், பி.ஜே.பி. ய ஆட்சியில் கல்லூரி மாணவர் 22 வயது ஹார்திக் படேல் தன்னுடைய படேல் ஜாதிக்கு மற்ற பின்தங்கிய சாதிகளைப் போலக் கல்வியிலும் வேலை வாய்ப்பிலும் இட ஒதுக்கீடு வேண்டும் என்று போராட்டத்தில் ஈடுபட்டார். இத்தருணத்தில் பி.ஜே.பி.–யினுடைய குஜராத் முதல்வர் திருமதி. ஆனந்தி பென் அவர்களே படேல் சாதியில் ஆசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். அவர் மோடிஜியின் வாரிசு அல்ல. குஜராத் முதல்வரால் படேல் போராட்டத்தை அடக்கவும் முடிய வில்லை.

அதனால், மாணவர் ஹார்திக்



ஹார்திக் படேல்

படேல் திடீர் மாவீரனாக ஆகி விட்டார். அவருக்கான ஆதரவு முழுவதையும் படேல் சாதியைத் தவிர வேறு எந்தச் சாதி தந்திருக்க முடியும்? வேட்பாளர் தேர்தலுக்கான கடைசிக்கட்டம் வரை அவர் தன்னுடைய கோரிக்கையைக் காங்கிரசுக்கும், பி.ஜே.பி.–க்கும் தெரிவித்து வந்தார். இட ஒதுக்கீடு தரும் கட்சிக்கு ஆதரவு என்றும் அறிவித்தார்.

காங்கிரஸ் கட்சி, படேல் சாதிக்கு மற்ற பிற்படுத்தப்பட்ட சாதிகளின் (Other Backward) பட்டியலில் இடம்தராமல், பொருளாதாரத்தில் பின்தங்கிய பிரிவில் (Economically Backward Class) இடம் தருவதாக அறிவித்தது. இதற்கு

ஹர்திக் படேல் மறுப்புத் தெரிவித்துக் கெடு விதித்தார். அதேசமயம் பி.ஜே.பி. கட்சியிலிருந்து ஹர்திக் படேலின் கோரிக்கையைப் பரி சீலிப்பதாகக்கூட அறிவிப்பு வரவில்லை.

ஒருவேளை பி.ஜே.பி. இதை ஒப்புக் கொண்டிருந்தால் ஏறக்குறைய படேல் சாதியினர் பரவலாக உள்ள 60 தொகுதி களில் அதிகமான அளவு வெற்றியை நிச்சயம் பெற்றிருக்க முடியும். ஆனால், அந்த வெற்றி படேல் சாதிக்கு ஆதரவு காட்டியும் பிற சாதிகளைப் புறக் கணித்தும் பெற்ற வெற்றியாகவே இருந் திருக்கும்.

பிரதமர் மோடி இவ்வாறு செய் வதற்குப் பிரியப்படவே இல்லை. கெடு விதிக்கப்பட்ட காலம் முடிவடைகிற தருணத்தில் காங்கிரஸ் அதை ஒப்புக் கொண்டதாக அறிவித்தது. ஹர்திக் படேல் கடுமையாக பி.ஜே.பி.யை விமர் சித்துப் பிரச்சாரத்திலும் ஈடுபட்டார். அலைமோதுகிற கூட்டத்தைத் தொலைக்காட்சி ஊடகங்கள் காட்டின. ஆனாலும், பிரதமர் மோடியோ, பி.ஜே. பி.–யோ சற்றும் பீதி அடையவில்லை.

பிரதமர் மோடி குஜராத் மக் களுக்குச் செய்த மிகச்சிறந்த சாதனை களை எடுத்துச்சொல்லி, இந்தச் சாத னைகள் தொடர வேண்டுமானால், பி.ஜே.பி.யைத் தொடர்ந்து ஆதரியுங் கள் என்று மட்டுமே பேசினார். அந்த நம்பிக்கையை மேலும் வளர்க்கும் வகை யில் 58 ஆண்டுகளுக்கு முன்பு நேருஜி யால் அடிக்கல் நாட்டப்பட்ட நர்மதா நதி அணைக்கட்டைப் பிரதமர் மோடி திறந்து வைத்து, குஜராத் மக்களை மகிழ்ச்சிக்கு உள்ளாக்கினார்.

இந்தத் தருணத்தில்தான் மணிசங்கர் ஐயரின் மகத்தான சாதி விமர்சனம் வெளியாயிற்று. அதனைச் சகித்துக் கொள்ள முடியாமல் ராகுல்ஜி எடுத்த பாராட்டத்தக்க நடவடிக்கை ஜன நாயகத்திற்கு மதிப்பளித்தது.

ராகுல்ஜி தனது பிரச்சாரக் கூட் டத்தில் அதிகமாக வலியுறுத்தியது பிரதமர் மோடியின் மத்திய ஆட்சி, அதானி முதலிய தொழிலதிபர்களுக்கு உதவி செய்கிற ஆட்சியே தவிர, ஏழை, எளிய மக்களுக்கு உதவி செய்கிற ஆட்சி அல்ல என்பதுதான். தொடர்ந்து பண மதிப்பு நீக்கத்தையும், ஜி.எஸ்.டி. வரி விதிப்பையும் கடுமையாக விமர்சனம் செய்தார்.

இந்த இரண்டும் ஏறக்குறைய நிறைவேறியதால் இப்போது கருப்புப் பணம் புழக்கத்தில் இல்லை. வங்கிக்கே திரும்பி வந்துவிட்டது. இல்லாத கருப்புப் பணத்தை எப்படி ஒழிக்க முடி யும் என்று முன்னாள் நிதியமைச்சர் திரு. ப. சிதம்பரம் கேள்வி எழுப்பினார்.

ஒழித்த பிறகு பார்த்ததால்தானே இல்லாததே தெரிந்தது. ஆனால், பாமர மக்கள் இரண்டு மாதக்காலம் இதனால் பாதிக்கப்பட்டனர் என்பது உண்மை. அதைத் தவிர்ப்பதற்கான மாற்று வழியை எந்த எதிர்க்கட்சியும் ஏனோ சொல்லவில்லை.

சரக்கு மற்றும் சேவை வரிவிதிப்பும் காங்கிரஸ் ஆட்சியில் தொடங்கப்பட்ட முயற்சிதான். பிரதமர் மோடி அதற்கு நடவடிக்கை எடுத்தபோது கடந்த மூன்றரை ஆண்டுகளாகவே காங்கிரஸ் அதை எதிர்த்தது. பிறகுதான் அது ஒப்புக்கொண்டது. ஒப்புக்கொண்ட பிறகு ஒருவேளை பி.ஜே.பி.–க்குப் புகழ் வந்து விடுமோ என்று அந்த வரியை நீர்த்துப்போகச் செய்ய மீண்டும் எதிர்த்தது.

குஜராத் மாநிலத்தில் சூரத் போன்ற பகுதிகள் அதிகமான வியாபாரிகள் நிறைந்த பகுதி. ஜி.எஸ்.டி. வரியை வெறுக்கக்கூடியவர்கள். இந்த வியா பாரிகளில் அதிகம்பேர் படேல் சாதி யினர். இவர்களைக் கவர்கிற வகையில் ராகுல்ஜி கூறிய கருத்துக்களை அவர்கள் ரசித்தார்கள்.

இதே படேல் சாதியினரைப் பற்றிய ஒரு செய்தியைத் துக்ளக் ஆசிரியர் திரு. எஸ். குருமூர்த்தி அவர்கள் கூறி 3

## பிரதமர் மோடி குடும்பம்

“பாரதப் பிரதமர் நரேந்திர மோடிக்கு மூன்று சகோதரர்கள். அம்ருத்பாய் மோடியின் வயது 72. இவர் 2005–ஆம் ஆண்டு ஒரு தொழிற்சாலையில் ரூ. 10 ஆயிரம் சம்பளத்தில் வேலை செய்து ஓய்வு பெற்றவர். தற்சமயம் அகமதாபாத் நகரில் ஒரு சிறிய பிளாட்டில் வசித்து வருகிறார்.

அடுத்த சகோதரர் பிருஹலாத் மோடி. வயது 64. ஒரு சிறிய கடை நடத்தி வருகிறார்.

அடுத்த சகோதரர் பங்கஜ் மோடி. 58 வயது. குஜராத் மாநில செய்தித் துறை அதிகாரி. காந்தி நகரில் உள்ள ஒரு பிளாட்டில் வசிக்கிறார். இவரிடம் மட்டும் ஒரு சிறிய கார் உள்ளது. இவர்கள் யாரும் இதுவரை விமானத்தில்கூடப் பயணம் செய்ததில்லை.

மோடியின் 96 வயதுத் தாயார் 10–க்கு 8 அடி உள்ள சிறிய அறையில் வசிக்கிறார். மருத்துவ மனை, கோவில், வங்கி ஆகிய இடங்களுக்கு ஆட்டோவில் பயணிக்கிறார். சமீபத்தில் உடல்நிலை சரியில்லாதபோது, 108 ஆம்புலன்சில் மருத்துவமனைக்குச் சென்றார். தனது மகன் மோடி, குஜராத் முதல்வராக இருந்தபோதுகூட, முதல்வருக்கான அரசு பங்களாவில் அவர் வசிக்கவில்லை.” – 13.12.2017 துக்ளக் இதழில் என். முருகன், ஐ.ஏ.எஸ்.

இங்கே உள்ள அரசியல்வாதிகளின் குடும்ப உறுப்பினர்களுடைய வசதிகளோடு இதை ஒப்பிட்டுப் பாருங்கள்.

*யிருப்பது ஆச்சரியப்பட வைக்கிறது. அமெரிக்காவில் ஹோட்டல்களைச் சீனர்கள், ஐரோப்பியர்கள், இந்தியர்கள் நடத்துகிறார்கள். அங்குள்ள 53 ஆயிரம் ஹோட்டல்களில், 21 ஆயிரம் ஹோட்டல்களைப் படேல் சமுதாயத்தினர்தான் நடத்துகிறார்கள். படேல் சமுதாயம் குஜராத்தில் மட்டுமல்லாமல், ஆப்பிரிக்கா, கனடா, பிரிட்டன் முதலிய நாடுகளிலும் தொழில்கள் நடத்திச் செல்வம் ஈட்டியதோடல்லாமல் செல்வாக்குள்ள சமுதாயமாகவும் மாறியிருக்கிறது. இது ஒன்று போதாதா அவர்களுக்கு இட ஒதுக்கீடு வேண்டாம் என்பதற்கு?*

*மோடிஜி 300 ஓட்டு எந்திரங்களில் செய்த தில்லுமுல்லுகளால்தான் வெற்றி பெற்றார் என்று ஹர்திக் படேல் கூறியுள்ளார். அப்படியானால், காங்கிரஸ் 80 இடங்களில் எப்படி வெற்றி பெற்றது?*

*குஜராத் தேர்தல் பிரதமர் மோடிக்கு வைக்கப்பட்ட அக்கினிப் பரீட்சை எனச் சொல்வதற்கான காரணம், அடுத்த ஆண்டு இதேபோல நான்கு மாநிலங்களுக்குச் சட்டமன்றத் தேர்தல்கள் வரவுள்ளன. அதற்கு அடுத்த ஆண்டு நாடாளுமன்றத் தேர்தல் வர இருக்கிறது. இவற்றிலெல்லாம் பிரதமர் மோடி ஜெயிக்க வேண்டுமானால், இந்தத் தேர்தலில் பி.ஜே.பி. சறுக்கி விழுந்தாலே அதை பி.ஜே.பி.–க்குக் கட்டப்போகிற சமாதியாகவே பூதாகரமாக்கக்கூடியவர்கள் உள்ளனர். அதனால்தான் இந்த அக்கினிப் பரீட்சை.*

*பிரதமர் மோடியை முழுமையாக வெளிப்படுத்த கடந்த மூன்றரை ஆண்டுகள் போதாது. மீதமுள்ள ஒன்றரை ஆண்டுகளும் அவரது சிந்தனை தேர்தல்களைச் சுற்றியேதான் இருக்கும். அதனால், முழுமையாக இன்னொரு ஐந்தாண்டு மோடிஜிக்குத் தரப்படுமானால், பிரதமர் மோடியின் பல பரிமாணங்களை நாம் கண்டு கொண்டவர்களாவோம்.*

*இந்தச் சூழ்நிலையில், குஜராத் தேர்தல் பற்றி வாசகர்களாகிய நீங்கள் என்ன எண்ணுகிறீர்களோ, அதை எழுதுங்கள் ஜனவரி 12–க்குள்.*

**– பி.சி.**

# சக்தி பைனான்ஸ்

நம்பிக்கையின் நிகரற்ற கட்டமைப்பு

H.O. : கோயமுத்தூர் - 641 018. போன் : 0422-2231471-4

## புதிய மற்றும் பழைய "வாகனங்களுக்கு கடனுதவி திட்டம்"





## உங்கள் வளர்ச்சியே எங்கள் மகிழ்ச்சி





20* வருடங்கள் வரையிலான சிறிய மற்றும் கனரக லாரிகள் JCB, Excavator வாகனங்களுக்கும் கடனுதவி அளிக்கப்படும்.

**எங்கள் சேவைகளைப் பற்றி சில தகவல்கள்**

- ✓ புதிய மற்றும் பழைய வாகனங்களுக்கு கடனுதவி வழங்குதல்
- ✓ மிகப்பழைய மாடல் சரக்கு வாகனங்களுக்கு நிதியுதவி
- ✓ வாகன சீரமைப்பு Tyre, FC, உதிரி பாகங்கள் மற்றும் செலவினங்களுக்கும் கடன் உதவி
- ✓ தேர்டு பார்ட்டி செட்டில்மெண்ட் (Third Party Settlement)
- ✓ பழைய வாகனங்களுக்கும் இன்சூரன்ஸ் சேவையுடன் கூடிய நிதியுதவி
- ✓ வாடிக்கையாளர்களின் தேவைகளை அறிந்து 24 மணி நேர துரித சேவை
- ✓ துரித சேவைக்கு பிரதான இடங்களில் வாடிக்கையாளர் சேவை மையங்கள்
- ✓ எளிய விதிமுறைகள், நம்பிக்கை, நாணயம் மற்றும் கனிவான சேவை.

கட்டுரை



**த**மிழ்நாட்டில் கட்ட டப்பணிகள் அநேகமாகப் பல ஊர்களில் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. கட்டுமானப் பொருள் களான செங்கல், சிமெண்ட்,

# மணல் கொள்ளையைத் தடுக்க உயர்நீதிமன்றம் உத்தரவு

மணல், பெயிண்ட், டைல்ஸ், ஜல்லி, மின்சார உபகரணங்கள், கம்பிகள், குடிநீர் பைப்புகள், மரம் என அனைத்தும் கட்டடப்பணிகளுக்கு அவசியப் படுகின்றன.

இவற்றை உபயோகப்படுத்திப் பணிகளை மேற்கொள்ளும் கொத்தனார், சித்தாள், ஆசாரி, எலக்ட்ரீசியன், பிளம்பர், கட்டடக்கலைஞர் எனப் பலருக்கும் வேலைவாய்ப்புகள் உருவாகின்றன.

ஒட்டுமொத்தத் தமிழ்நாட்டில் ஏழரைக்கோடித் தமிழ்மக்களில் 25 லட்சம் குடும்பங்கள் கட்டுமானத் தொழிலில் ஈடுபட்டுள்ளன. இவர்களெல்லாம் பெயிண்ட் தொழிற்சாலை, சிமெண்ட் தொழிற்சாலை, குடிநீர் பைப், மின்சார உபகரணங்கள் முதலிய உற்பத்தி நிறுவனங்களில் பல்லாயிரக்கணக்கானவர்கள் பணியாற்றுகிறார்கள்.

கட்டுமானத்தொழில் ஸ்தம்பிக்குமானால், கட்டுமானப் பணியாளர்களுக்கும் வேலை இருக்காது. கட்டுமானத் தொழிற்சாலைகளும் வேலை செய்ய முடியாது.

நமது தமிழ்நாட்டில் கட்டுமானத் தொழிலில் மூன்றில் இரண்டுபங்குப் பணியாளர்கள் பீகார், உத்தரப் பிரதேசம், நேபாளம் முதலிய பகுதிகளிலிருந்து வருகின்ற இளைஞர்கள் பல்லாயிரக்கணக்கில் இருக்கிறார்கள்.

கட்டுமானத் தொழிலில் பிரதானமான கட்டுமானப் பொருள்கள் மணல், சிமெண்ட், செங்கல் ஆகியவையாகும். ஒன்றில்லாமல் மற்ற இரண்டையும் பயன்படுத்த முடியாது.



மணல் சப்ளை நிற்குமானால், கட்டுமானத்தொழில் ஸ்தம்பித்துவிடும். அதன் விளைவாக முன்பு சொன்ன சிக்கல்கள் தோன்றும்.

அதனால், கட்டுமானத்தொழில் தொய்வில்லாமல் தொடர்ந்து நடந்து கொண்டே இருக்க வேண்டுமானால், அதற்கு மணல், செங்கல், ஜல்லி, சிமெண்ட் ஆகியவை மிகமிக முக்கியம்.

தமிழ்நாட்டிற்குப் பக்கத்திலுள்ள கேரளா, கர்நாடகா, ஆந்திரா, தெலுங்கானா ஆகிய மாநிலங்களிலும் இதே போலக் கட்டுமானத்தொழில் தொய்வில்லாமல் நடக்கின்றது. தமிழ்நாட்டிற்கு ஏற்பட்டுள்ள சாபக்கேடு என்னவென்றால், அந்த மாநிலங்களில் நடக்கின்ற கட்டுமானத் தொழிலுக்கு தமிழ்நாட்டு ஆற்று மணலைக் கொண்டு போவதுதான்.

அதனால் ஏற்பட்ட கடுமையான பின்விளைவு, தமிழ்நாடு, மணலை மட்டும் இழக்கவில்லை; மணல் மண்டிக்கிடந்த ஆற்று வளத்தையும் இழந்து விட்டது.

முன்பெல்லாம் ஆறுகளிலிருந்து மணலைக் கட்டை வண்டிகளில் இரும்புச் சட்டிகளில் எடுத்து அள்ளிக் கொட்டுவார்கள். இப்போது அப்படி இல்லை. பொக்லைன் இயந்திரத்தின் மூலம் வீரியமிக்க சக்தியோடு ஆற்றின் அடிவயிறு வரை குடைந்தெடுத்து லாரிகளில் மணல் கொட்டப்படுகிறது. அதனால் ஆறுகளிலுள்ள மணல் விரைந்து குறைந்து விடுகிறது.

அவை மீண்டும் உருவாக அடைமழையின் மூலம் வெள்ளப்பெருக்கு ஏற்பட வேண்டும். நமக்கோ, தொடர் அடைமழையும் இல்லை; தொடர் வெள்ளப்பெருக்கும் குறைவு. அதனால் ஆறுகளில் மணல் மறு உற்பத்தி அருகிவிட்டது.

தமிழ்நாட்டிலுள்ள காவிரி, வைகை, தாமிரபரணி, அமராவதி, மணிமுத்தாறு முதலிய பல ஆறுகளிலிருந்து தொடர்ந்து மணல் எடுக்கப்பட்டதால், அனைத்து ஆறுகளும் நோயாளிகளாகிவிட்டன. அந்த ஆறுகளில் நீர் வற்றத் தொடங்கி விட்டது.

ஆனால், பக்கத்திலுள்ள கேரளாவில் 46 ஆறுகள் இருக்கின்றன. பாரதப்புழா மிகப்பெரிய ஆறு. அரபிக்கடலில் அது கலக்கின்றது. இந்த 46 ஆறுகளின் மணல் ஒருதுளி கூட கட்டுமானக் காரியங்களுக்கு எடுக்கக்கூடாது என்று கேரள மாநில அரசு உத்தரவு போட்டுவிட்டது.

கேரள அரசு மார்க்சிய அரசாக இருந்தாலும், அதற்கு மாற்றாக இருந்த காங்கிரஸ் அரசாக இருந்தாலும் இந்த உத்தரவை ரத்துச் செய்வதே இல்லை. இந்த உத்தரவு கடந்த 10 ஆண்டுகளாக நடைமுறையில் உள்ளது.

கேரளாவிற்கு சௌதி, அபுதாபி, துபாய், மஸ்கட் முதலிய வளைகுடா நாடுகளில் வேலை செய்கிற மலையாளிகள் தங்களுடைய சம்பாத்தியத்தைக் கோடிக்கணக்கில் இந்திய ரூபாய்களாக அனுப்புகிறார்கள்.

அந்நாடுகளிலிருந்து அடிக்கடி மலையாளிகள் கொச்சி, திருவனந்தபுரத்திற்கு விமானத்தில் வருகிறார்கள். இதன் காரணமாக, விமானப் பயணச் சீட்டுகள் உடனடியாக அவர்களுக்குக் கிடைப்பதில்லை. அதனால், தனியார்

**ம**ராட்டிய மாநிலம் கட்டுமானங்களுக்குத் தேவையான மணலை பிலிப்பைன்ஸிலிருந்தும், சிங்கப்பூரிலிருந்தும் இறக்குமதி செய்து கொள்கிறது. அது போலவே தமிழ்நாடும் மணலை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்து கொள்ளலாமே!

துறையில் ஒரு விமான நிலையமே கொச்சியில் செயல்படுகிறது.

அந்த அளவிற்குக் கேரளாவிற்குத் துபாய்ப் பணம் கொட்டுகிறது. அவர்கள் அந்தப் பணத்தை ஆடம்பர நுகர்பொருள் வாங்குவதில் செலவழிக்கிறார்கள். அவற்றை வைத்துக்கொள்வதற்கு அழகழகான நவீன வீடுகளைக் கட்டுகிறார்கள்.

அவ்வீடுகளைக் கட்டுவதற்கான மணல் கேரளாவிலிருந்து எடுக்கப்படுவதில்லை. தமிழ்நாட்டு மணலைத்தான் அதிக விலை கொடுத்து வாங்கி மலையாளிகள் மாளிகைகள் கட்டுகிறார்கள். தமிழ்நாட்டு மணல் பக்கத்து மாநிலங்களுக்குப் பயன்படுவதால், தமிழ்நாட்டு ஆறுகள்தான் பலியாகின்றன.

இந்தத் தகவல்களின் பின்னணியில் உள்ள தர்ம நியாயத்தை நாம் உணர வேண்டும். ஆற்றை அழிக்கும் அளவுக்கு மணலை இவ்வாறு செலவழிக்கக் கூடாது என்ற ஞானம் நமக்கு வேண்டும். ஆனால், மணலை விற்றால் சம்பாதிக்க முடியும் என்று அரசியல்வாதிகள் கண்டுபிடித்து விட்டார்கள்.

அதன் காரணமாக, அனுமதிக்கப்பட்ட அளவிற்கு மணல் அள்ளப்படாமல், இருமடங்கு, மும்மடங்கு என அள்ளி அந்தக் கூடுதல் மணலுக்கான தொகையை அரசியல்வாதிகள் பங்குபோட்டுக் கொள்கிறார்கள். குறிப்பாக, சில மணல் மாபியாக்கள் அந்தந்தக் காலகட்டத்தில் உள்ள ஆட்சிகளைக் கவனித்துக் கொள்வதால், இந்தக் கொள்ளையைத் தடுக்க முடியாமல் தொடர்கிறது.

இந்தப் பின்னணியில்தான் புதுக்கோட்டை – ஆவுடையார் கோவிலைச் சேர்ந்த 'ராமையா எண்டர்பிரைசஸ்' நிறுவனத்தின் மேலாண்மை இயக்குநர் ராமையா என்பவர் மலேசியாவிலிருந்து மணலை இறக்குமதி செய்வதற்கு அனுமதிக்குமாறு மதுரை உயர்நீதிமன்றக் கிளையில் மனு ஒன்றைத் தாக்கல் செய்தார்.

இறக்குமதிக்கு நீதிமன்ற அனுமதியும் கிடைத்தது. மலேசியாவிலிருந்து 55, 440 டன் மணல் கப்பலில் இறக்குமதி செய்யப்பட்டது. ஆனால், அந்த மணலை விற்பதற்கு மாநில அரசு அதிகாரிகள் தடுத்துவிட்டனர். காரணம், அந்த மணல் இறக்குமதி மணலாம்.

இந்த நிலையில் மனுதாரர் ராமையா மதுரை உயர்நீதிமன்றத்தை அணுகி, மணலை விற்பதற்கான உரிமையைப்பெற வழக்குத் தாக்கல் செய்தார்.



அரசுத் தரப்பு வழக்குரைஞர், இறக்குமதி மணல் ரசாயனப் பொருள்கள் கலந்துள்ள சிலிக்கான் மணல் என்பதாக எடுத்துக்கூறி, இது சட்டவிரோதமானது என்று வாதிட்டார்.

இந்த வாதத்தைக் கேட்டபிறகு, மாண்பமை நீதியரசர் ஆர். மகாதேவன் வழங்கிய தீர்ப்பு, வரலாற்றில் பதிக்கப்பட வேண்டிய ஒரு தீர்ப்பாகும். நீர்நிலைகளைப் பராமரிக்கத் தவறி, ஆறுகளுக்கான நீர்வழித் தடங்கள் குறைந்து வருகிற நிலையில், ஆறுகள் தொடர்ந்து அழிந்து வருகின்றன என்றும், இயற்கை வளத்தைப் பாதுகாப்பதற்குக் கனிமவளச்

சட்டத்தை ஒதுக்கி வைத்துவிட்டு, இறக்குமதி மணலை வைத்துத்தான் இனிக் கட்டுமானம் செய்ய வேண்டும் என்றும், பொதுநலன் கருதி ஆறுகளைப் பாதுகாக்க வேண்டியது அரசின் கடமை என்றும், அந்தத் தீர்ப்பில் வழிகாட்டு உத்தரவுகளை வரிசையாகத் தெரிவித்திருந்தார்.

இனிவரும் ஆறுமாத காலத்திற்குள் தமிழ்நாட்டு மணல் குவாரிகளை முழுவதுமாக மூடிவிட வேண்டும் என்றும், இறக்குமதி மணல்தான் அனுமதிக்கப்பட வேண்டும் என்றும் தெளிவாக அறிவுறுத்தியுள்ளார். இதனை நிறைவேற்றும் வகையில் மாவட்டக் கலெக்டர்கள், காவல் துறை அதிகாரிகள், வணிகவரித் துறையினர் அனைவரும் செயல்பட வேண்டும் என்றும் நீதியரசர் குறிப்பிட்டுள்ளார்.

இந்தப் பின்னணியில் கிடைத்த தகவல்கள் நம்மை அதிர்ச்சிக்குள்ளாக்கியுள்ளன. 2005–ஆம் ஆண்டில் முறைகேடாக மணல் அள்ளப்பட்டதால், கொள்ளையடிக்கப்பட்ட தொகை சுமார் 30 ஆயிரம் கோடி ரூபாய் என்பதாகும். இந்தத் தொகை சம்பந்தப்பட்டவர்களுக்குப் பங்கிடப்பட்டதால் மணல் கொள்ளையைத் தடுக்கக் கடமைப்பட்ட மாநில அரசு மௌனமாகிவிட்டது.

அதனால், மணல் கொள்ளை என்பது அநேகமாக அகில இந்திய அளவில் நடைபெற்ற நிலக்கரி ஊழல் போல, 2ஜி ஊழல்போல தேசத்தையே பாழ்படுத்தி வருவதாகும்.

உண்மையில், தமிழக அரசு மணல் இறக்குமதி செய்வதற்கு அனுமதி அளிக்குமானால், கட்டுமான நிறுவனங்கள் வெளிநாடுகளிலிருந்து தாராளமாக இறக்குமதி செய்யலாம். ஜெர்மனி, பெல்ஜியம், நெதர்லாந்து, ஆஸ்திரேலியா, வியட்நாம், கம்போடியா, பிரான்ஸ், சீனா, எகிப்து, தைவான், சௌதி, கனடா, இங்கிலாந்து, ஸ்பெயின், டென்மார்க், பல்கேரியா, நார்வே, மலேசியா முதலிய பல நாடுகள் மணலை இந்தியாவிற்கு ஏற்றுமதி செய்யத் தயாராக இருப்பதாக அறிவிக்கவும் செய்துள்ளன. ஏனெனில், அந்த நாடு களுக்கு மணல் மூலம் இதுவரை வருமானம் வந்ததில்லை.

1 கன அடி ஆற்று மணல் ரூ. 140–க்கு முன்பு இங்கு விற்பனையானது. மணல் இறக்குமதி செய்யப்படுமானால், அதே அளவு மணல் ரூ. 90–க்குக் கிடைக்கும். உண்மை இவ்வாறு இருக்கும்போது, இறக்குமதி மணலுக்கு அரசு ஆர்வம் காட்டாமல் இருப்பது நியாயமாகத் தெரியவில்லை. அல்லது வேறு ஏதோ காரணம் இருக்குமோ என நினைக்க வேண்டியுள்ளது.

எப்படியாயினும் நீதியரசர் ஆர். மகாதேவன் வழங்கிய தீர்ப்பின் வழிகாட்டுதலின்படி, எக்காரணம் கொண்டும் தமிழ்நாட்டு ஆறுகளிலிருந்து மணலைக் குறைந்தபட்சம் 10 ஆண்டுகளுக்கு ஒரு துளி யளவுகூட எடுக்க அனுமதிக்கக்கூடாது. திருட்டு மணல் எடுக்கப்படுமானால், காவல் துறைதான் தடுக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. ஆற்றோர கிராமத்து மக்களே ஆவேசத்தோடு அணி திரண்டு மணல் அள்ளுவதைத் தடுக்க வேண்டும்.

– ந.நி.

## லண்டனில் திருவள்ளுவர் சிலை!



படத்தில் இருக்கும் வித்தியாசமான இந்தத் திருவள்ளுவர் சிலை, லண்டனில் உள்ள கீழையியல் ஆப்பிரிக்க ஆய்வு நிறுவனத்தில் நிறுவப்பட்டுள்ளது.

சில ஆண்டுகளுக்கு முன்பு, தமிழக அரசால் இந்தச் சிலை அன்பளிப்பாக வழங்கப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது.

– த.சீ. பாலு

டிசம்பர் 2017 விவாதம்

# மத்திய ஆட்சியின் இரு நடவடிக்கைகளும் சர்ச்சைக்குரியனவா?

## விவாதக் கடிதங்களில் சில... சில... சில...

**ப**ண மதிப்பிழப்பு, சரக்கு மற்றும் சேவை வரி நடவடிக்கைகளால் பெரும் பயனை அடைந்திருப்பது பெரிய நிறுவனங்களும், பணக்காரர்களுமே என்பதில் மாற்றுக் கருத்து இல்லை. சிறு, குறுதொழில்கள் முடங்கிப் போனதே நிதர்சனம்.

– **நவீன்குமார்**, நடுவிக்கோட்டை.

**ப**ணமதிப்பு நீக்கத்திற்கு முதலில் சொல்லப்பட்ட காரணங்களும், தற்போது சொல்லும் சமாதானமுமே அதன் உண்மையான நிலையை விளக்குகின்றன. இதற்காகப் பிரதமரின் வயதான தாயாரைக் கூட வரிசையில் நிற்க வைத்தது மிகுந்த நகைச்சுவையானது. சரக்கு மற்றும் சேவை வரியைப் பொறுத்த அளவில், இந்தியாவின் பெருவாரியான முறைசாராத தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்பினை வழங்கும் நிறுவனங்களுக்கு ஏற்பட்டுள்ள பாதிப்பு அதிகம்.

– **வ. நவநீதகிருஷ்ணன்,**
நெ. மேட்டுப்பட்டி.

**ம**த்திய அரசால் கொண்டுவரப்பட்ட சரக்கு மற்றும் சேவை வரி விதிப்பில் மக்களின் நலன்கள் இல்லை. 500, 1000 ரூபாய் நோட்டுக்கள் செல்லாது என்ற அறிவிப்பால் மக்களுக்குத் துன்பமே தவிர, பலன்கள் இல்லை. கருப்புப் பண விடயத்தில் வெற்றியும் ஏற்படவில்லை. ஒட்டுமொத்தத்தில் சரித்திரத்தில் மத்திய ஆட்சியின் இரு நடவடிக்கைகளும் தோல்விதான். இதுதான் நிதர்சனமான உண்மை.

– **சு. இலக்குமணசுவாமி**, மதுரை.

**ப**ண மதிப்பு நீக்கத்தாலோ, சரக்கு மற்றும் சேவை வரியாலோ பாதிக்கப்படுவது மக்கள்தான் என்பதே உண்மை. டெல்லியிலிருந்து சென்னைக்காரர் வரி தந்து எவர்சில்வர் தகட்டை வாங்கி மதுரைக்காரருக்கு வரி போட்டு விற்றுவிடுகிறார். மதுரைக்காரர் இடைத்தரகர்களுக்கு வரியுடன் விற்று விடுகிறார். கடைக்காரர் வரியுடன் நல்ல லாபம் வைத்து மக்களிடம் பாத்திரங்களை விற்கிறார். மக்கள் தரும் வரி அவர்கள் தலையில்தானே விடிகிறது?

– **இரா. கல்யாணசுந்தரம்**, மதுரை.

**ச**ர்ச்சைகளும், பிரதமர் மோடியும் ஒட்டிப்பிறந்த இரட்டைக்குழந்தைகள் என்றே கூறலாம். புழக்கத்திலிருந்த 500, 1000 ரூபாய் நோட்டுக்கள் செல்லாது என்ற அறிவிப்பும், நுகர்வோர் மற்றும் ஏழை, எளிய மக்களின் வயிற்றிலடித்து வரும் ஜி.எஸ்.டி. வரி விதிப்பும், மோடி எதிர்பார்த்த பலன்களைக் காட்டிலும் எதிர்மறையான பலன்களை அளித்து வருவதுதான் நிதர்சனமான உண்மையாகும்.

– **இரா. வளையாபதி,**
தோட்டக்குறிச்சி.

**ப**ண மதிப்பிழப்பு, மோடியே எதிர்பார்த்த பலனைத் தரவில்லை. எனினும், பொருளாதார வல்லுநர்களின் கருத்துப்படி நாட்டுக்குத் தேவையான நல்ல துணிச்சலான நடவடிக்கை. ஒட்டல் உணவுப் பண்டங்களும் வரிக்கு உட்படுத்தப்படுவதால் ஏற்படும் விலை உயர்வு சாதாரண மக்களை எரிச்சலடைய வைக்கிறது. வரவு – செலவுக் கணக்குகளை முறையாகப் பராமரிக்காமல், அரசுக்கு உரிய வரிவகைகளைச்

செலுத்தாமலே தொழில் செய்து பழக்கப் பட்டவர்களுக்கு இப்போதைய கடி வாளம் கசக்கவே செய்யும். மொத்தத்தில் ஆழ்ந்த திட்டமிடுதலின் அடிப்படையில் கொண்டு வரப்பட்ட திட்டங்களே இவை என்பதில் சந்தேகமில்லை.

– **ந. சந்திரமௌலி,** ஊத்துக்குளி.

**இ**ந்தியா சுதந்திரமடைந்த பின்பு, பாரத மக்கள் அனுபவித்திராத ஒரு பொரு ளாதாரச் சிரமத்தை, பா.ஜ.க. அரசு உணர்த்தியது. சமயத்தில் நிறையச் சோக நிகழ்வுகளான மருத்துவமனைகளில் மரணம், திருமணத்தடை, வீட்டுச் செல வினச் சிக்கல் என இன்னும் பலவற்றை மறக்க முடியுமா? ஜி.எஸ்.டி.யினால் நுகர் வோர், வணிகர், ஊதியம் பெறுவோர், சிறிய, பெரிய நிறுவனங்களுக்கு அடிமேல் அடியென மோசமானது பணப்புழக்கம்.

– **வே. முத்துக்கிருஷ்ணன்,** தாராபுரம்.

**மு**ந்தைய காங்கிரஸ் அரசின் தவறான நடைமுறைகளை மேலும் வலிமையுடன், சற்று மாறுதல்களுடன் பரவலாக்குவது, அதனையும் விரைவு படுத்துவது இன் றைய மைய (பா.ஜ.க.) அரசு தொடருமா னால், மக்களது ஆமோதிப்பைத் தொடர்ந்து பெறுவதில் நிச்சயமற்ற தன் மையே ஏற்படும் எனலாம்.

– **எஸ்.ஜி. இசட்கான்,** திருப்பூர்.

**ம**த்திய அரசின் பணமதிப்பு நீக்க நட வடிக்கையால் நடுத்தர மக்கள் பெரும் துன்பத்திற்கு உள்ளானதுதான் மிச்சமேயன்றி, திட்டம் வெற்றிபெற வில்லை. சரக்கு மற்றும் சேவை வரித் திட்டம் வரவேற்கத்தக்கதுதான் என்றா லும், முறையாகச் செயல்படுத்தப்படாமை யால் ஏகப்பட்ட குளறுபடிகள். சில பொருள்களுக்கான சேவை வரியால் சிறு வணிகர்கள் மற்றும் பொதுமக்கள் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளனர்.

– **உ.மு.ந. ராசன் கலாமணி,**
கோபிசெட்டிபாளையம்.

**ரூ.** 500, 1000 நோட்டுக்கள் செல்லாது என்று பிரதமர் மோடி அறிவித்தும் அரசி யல்வாதிகள், பெரும் தொழிலதிபர்கள், சினிமாத்துறையினர் யாரும் அகப்பட வில்லை. இது வெளியில் தெரியப்படுத்திச் செய்திருந்தால் என்னவாகியிருக்கும்? அடுத்து ஜி.எஸ்.டி. வரி ஒரு மாநிலம் விட்டு மறு மாநிலம் சரக்குச் சென்றால் ஒரே வரி விதிப்பது நல்லது. மேற்படி வரி விதிப்பின் மூலம் என்ன நன்மை என்பது போகப்போகத்தான் தெரியும்.

– **தி. ஈசுவர் மூர்த்தி,** ஸ்ரீவில்லிப்புத்தூர்.

**ம**த்திய ஆட்சியின் இரு நடவடிக்கை களின் நோக்கங்களும் பாராட்டத் தக்கவை. இரண்டு பெரிய நடவடிக்கை களை அமல்படுத்தத் துணிந்த விதம் மெச்சத்தக்கதாகும். ஆனால், குறிப்பிட்ட நோக்கங்களைச் சென்று சேர்த்ததா? சேர வில்லை எனில், அடுத்து என்ன செய்ய லாம் என்னும் ஆலோசனைகளை அரசியல் கட்சிகள் வழங்க வேண்டும். கட்சி நலனைவிட, நாட்டின் நலனைப் பிரதானமாகக் கொள்ள வேண்டும்.

– **ரவிச்சந்திரன்,** ஆவுடையாள்புரம்.

**மு**ன்பு கிலோ ரூ. 100–க்கு வாங்கிய பொருளுக்கு ஜி.எஸ்.டி. வரி அமலாக்கம் செய்தபின்பு ரூ. 120 கொடுக்க வேண்டி யுள்ளது. நோட்டுத் தடையாலும், ஜி.எஸ். டி.யாலும் தற்போது பொருளாதாரப் பின்னடைவு போல் தோன்றினாலும் அதன் பலன்கள் பின்னரே கிடைக்கும்.

– **த. நாகராஜன்,** சிவகாசி.

**க**ருப்புப்பணம் இருப்பது உண்மை. ஆனால், அது மாயமாகிவிட்டது என்பது நகைப்புக்குரியதாக அல்லவா இருக்கிறது! ஆட்சியாளர்கள் எதற்கு இருக்கிறார்கள்? கருப்புப்பணம் எங்கே இருக்கிறது என்று இவர்களுக்குத் தெரியாதாம், ஆனால் ஆளும் கட்சியும், எதிர்க்கட்சியும் தேர்தலில் போட்டி போட்டுக்கொண்டு ரூ. 50 ஆயிரம் கோடி, 60 ஆயிரம் கோடி செலவு செய்வது எப்படிச் சாத்தியம்? பாம்பு (கருப்புப்பணம்) மறைந்திருப்பது பாம்பின் தவறு அல்ல, பாம்பை (கருப்புப் பணத்தைத்) தெய்வமாக வழிபடும் அரசியல்வாதிகளின் தவறுதான் இதற்குக்

காரணம்.

**– என். மோகன்,** சூரமங்கலம்.

**பொ**துவாக நாடு எல்லா வகையிலும் வளர எடுக்கப்படும் சட்ட வரையறை வரவேற்புக் குரியதே. இருப்பினும் சிலவற்றைச் சூழ்ந்து செய்ய வேண்டும். வரி விதிப்பு என்றதும் உடனே நாட்டின் தொழில் துறையில் வாணிகத்தில் வரி ஏற்றம் வந்து விடுகிறது. வரிக்குறைப்பு என்றதும் குறைக்கப்படுவதில்லை. ஏற்றியது ஏற்றியதுதான். பண மதிப்பீட்டில் எடுத்த நடவடிக்கை சரியே. அதனால் நடுத்தர மக்கள் மிகவும் பாதிக்கப்பட்டனர். ரூ. 2 ஆயிரம் நோட்டு அச்சிட்டது தேவையில்லாதது. காங்கிரஸ் செய்ததைத்தான் பா.ஜ.க. செய்தது. வீம்புக்குச் செய்து பெயரைக் கெடுத்துக் கொண்டது.

**– தெ. முருகசாமி,** புதுச்சேரி.

**க**ருப்புப்பணம் தொடர்பாகச் செய்யப்பட்ட செயல் ஓரளவு கருப்புப்பணம் வங்கிகட்கு வந்திருப்பினும், தாங்கள் குறிப்பிட்டுச் சொன்னபடி நான்கு பிரிவினரின் கருப்புப்பணம் வந்திருக்க வாய்ப்பில்லை. நீண்ட காலங்கட்குப்பின் கருப்புப்பணம் படிப்படியாக நீங்கிடலாம். எல்லாவற்றுக்கும் மேலாக, நாம் சந்தோஷப்பட முடியாத கருத்து யாதெனில், அரசாங்கத்தின் நேர்மை, சிக்கனம், கட்டுப்பட்டான Law & Order ஏற்படாத வரை எதுவும் பயனில்லை.

**– ராம சிதம்பரம்,** கண்டனூர்.

**ம**த்திய ஆட்சியின் பணமதிப்பு இழப்பு மற்றும் ஜி.எஸ்.டி. என்ற இரு விஷயங்களும் மிக நல்ல தொரு மாற்றம்தான். இதன் நல்ல பலன்களை அறியாதவர்கள்தான் இச்செயல்கள் சர்ச்சைக்குரியவை

# வாசகர் கடிதம்

‘**ஆ**திமூலா, ஆதிமூலா’ எனத் தலைப்பிட்டு வடிவமைக்கப்பட்டிருந்த ‘ஓம் சக்தி’ டிசம்பர் மாத முகப்பு அட்டை வண்ணப்படம் திருமாலின் புகழை வாய்விட்டுப் பாட வைத்தது.

**– இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.**

‘**சு**ரங்கம்’ பகுதியில் அருட்செல்வர், இந்திய ஜனநாயகத்தின் ஆணி வேரான உள்ளாட்சி அமைப்பின் ஆன்மாவையே வெளிப்படுத்தியிருக்கிறார்.

**– வே. முத்துராமலிங்கம், மங்கலம்.**

**டி**சம்பர் மாத ‘ஓம் சக்தி’ இதழில் நதிநீர் இணைப்புக் குறித்து மிகமிக உருக்கமாக எழுதியுள்ளார் பொறியாளர் ஏ.சி. காமராஜ். அதில் அருட் செல்வரின் கருத்தையும், அவருடைய நதி நீர்த் திட்டத்தையும் அழகாக விவரித்திருந்தார்.

**– ராம. சிதம்பரம், கண்டனூர்.**

‘**கீ**ழடி’ ஆய்வு பற்றி அமர்நாத் ராமகிருஷ்ண னின் நேர்காணல் மூலம் பண்டைய தமிழரின் நாகரிகத்தை விளக்கமாக அறிந்துகொள்ள முடிந்தது.

**– க.அண்ணாமலை, சேலம்.**

**பா**ரதி, பாரதிதாசன் ஆகிய இருவரின் இயற்கை அழகு குறித்த தகவல்களைச் சுவையுடனும் இலக்கிய நறுமணத்துடனும் அளித்திருந்தார் கவிஞர் சிற்பி பாலசுப்பிரமணியம் அவர்கள்.

**– கே. பிரபாவதி, மேலக்கிருஷ்ணன்புதூர்.**

**உ**ஷாமுத்துராமனின் ‘நன்றிக்கடன்’ சிறுகதை, முதியோரை அலட்சியப்படுத்தாமல் பேணிப் பாது காத்தல் வேண்டும் என்பதை மிக அழகாக எடுத்துரைத்திருந்தது.

– பே. சண்முகம், செங்கோட்டை.

**டி**சம்பர் ‘ஓம் சக்தி’ இதழில் வெளியாகியிருந்த ‘மனுநீதி’ சிறுகதை அருமை! எளிய நடை. மனத்தைத் தொட்ட நல்ல கருத்து. கதாசிரியருக்குப் பாராட்டுகள்!

**– ஜெயாராஜாமணி, மதுரை.**

**தா**ழ்வு மனப்பான்மையைத் தகர்த்தெறிந்து தன்னம்பிக்கைச் சிறகுகளை விரித்து முன்னேற டாக்டர் கவிதாசன் கூறிய கருத்துக்கள் வாழ்க்கைக்கு மிகவும் பயனளிக்கக் கூடியவை.

**– லிங்கம் சின்னசாமி, தாராபுரம்.**

## ‘ஓம் சக்தி’ தனிப்பிரதி விலை ரூ. 15/–

காகித விலை, அச்சுக் கட்டணம், அஞ்சல் செலவு ஆகிய இனங்களின் விலையேற்றத்தின் காரணமாக, ‘ஓம் சக்தி’யின் தனிப்பிரதி விலை ரூ. 15/– என 2018 ஜனவரி முதல் உயர்த்தப்படுவதற்கு வாசகர்களின் ஒத்துழைப் பையும், ஆதரவையும் வேண்டுகிறோம்.

**ஓராண்டுச் சந்தா (400 பக்க தீபாவளி மலர் உட்பட) : ரூ. 265/–**

**ஆயுள் சந்தா : ரூ. 2000/–**

**– இ.ஆர்.**

என்று முத்திரை பதிப்பர். மாற்றங்கள் எவையுமே அனைவராலும் ஏற்றுக் கொள்ள முடியாதுதான். விடியற்காலை யில் எழுவது பலருக்கு மிக மிகக் கடினம். ஆனால், அதைத் தங்கள் பழக்கமாக வைத்துக் கொண்டிருப்பவர்களுக்கு அது எளிய செயல். அதுபோலத்தான் இந்த இரு நடவடிக்கைகளும் சர்ச்சைக்குரிய வையே இல்லை.

– **உஷா முத்துராமன்,** மதுரை.

**ப**ண மதிப்பிழப்பு மற்றும் ஜி.எஸ்.டி. இந்த இரண்டுமே தற்சமயம் பி.ஜே.பி. ஆட்சியில் நடைமுறைப்படுத்தப்பட்டு, இந்திய நாட்டிற்கே பெரும் மாற்றத்தைத் தந்தது எனலாம். இத்திட்டத்தால் நடுத்தர மக்களும், வியாபாரிகளும் கீழ்நிலையில் உள்ள சாதாரண மக்களும் பாதிக்கப்பட் டுள்ளனர். பணமதிப்பு நீக்கத்தால் அரசி யல்வாதிகளோ, பெரிய பெரிய தொழிலதி பர்களோ, மருத்துவர்களோ பாதிக்கப்பட வில்லை. தேசிய நீர்வழிச்சாலைத் திட்டம், மாநிலங்களுக்குள் நதிகளைத் தேசியமயமாக்குவதில் மோடி அரசு கோட்டைவிட்டு விட்டது என்றே கூற முடியும்.

– **லிங்கம் சின்னசாமி,** தாராபுரம்.

**ப**ண மதிப்பிழப்பு நடவடிக்கையால் எதிர்பார்த்ததைவிட அதிகமாகவே வங்கி களில் பணப்பரிமாற்றம் நடந்துள்ளது. ஆனால், கருப்புப்பணம் முழுவதுமாக வந்துவிடவில்லை என்றும் உறுதியாகக் கூற முடியவில்லை. இதனால் சுமார் மூன்றுமாதக் காலம் பாமர மக்களே பாதிப்புக்குள்ளானார்கள். கொசுவர்த்தி ஏற்றி வைத்தால் கொஞ்சநேரம் கொசு வராமல் இருக்குமே தவிர, கொசுவை ஒழிக்க முடியாது.

அதுபோலத்தான் பல சட்டத் திருத் தங்கள், அறிவிப்புகள் செய்தாலும் கருப்புப்பணத்தை ஒழிக்க முடியாது. ஜி.எஸ்.டி.யில் மக்களுக்கோ, அரசாங்கத் திற்கோ நன்மை ஏற்பட்டுள்ளதா என் றால், இல்லை என்றே கூறத் தோன்று கிறது. இதனால் பொருள்கள் உற்பத்தி யாளர், விற்பனையாளர் இருவருக்குமே பாதிப்பு ஏற்படவில்லை. இதை வாங்கும் நுகர்வோராகிய பாமர மக்களே பாதிக்கப் பட்டுள்ளார்கள் என்பது உண்மை.

– **பி. திருமூர்த்தி,** இருகூர்.

**ப**ணமதிப்பு நீக்கம், சரக்கு மற்றும் சேவை வரி தொடர்பாக மத்திய அரசு எடுத்துள்ள நடவடிக்கைகள் எதிர்பார்த்த அளவு பலன்களைத் தரவில்லை. பொது மக்களும், வணிகர்களும் அதிகம் பாதித் துள்ளனர். இந்த இரு திட்டங்களும் மக்களுக்கு நன்மையைச் செய்வதைவிட, தீமையையே செய்துள்ளன. அந்த இரு திட்டங்களிலும் அடிக்கடி மாறுதல்கள் செய்துள்ளது தொலைநோக்குப் பார்வை இல்லை என்பதையே விளக்குகிறது.

– **என். ஆர். ஜெயசந்திரன்,**
காவேரிப்பட்டணம்.

**ம**த்திய அரசின் இரு நடவடிக்கைகளும் சர்ச்சைக்குரியன அல்ல. ரூ. 500, 1000 ரூபாய் நோட்டுக்கள் மாற்றப்பட்டது



அட்டைப்பட விளக்கம்

## ஞான வேலுடன் மயில்வாகனன்

**த**மிழ்க்கடவுள் முருகன், அசுரர்களை அழிப்பதற்காகச் சிவபெருமானின் நெற்றிக்கண்ணிலிருந்து தோற்று விக்கப்பட்டதாகக் கந்தபுராணம் கூறுகிறது. ஆறுமுகங்களையும் பன்னிரு கைகளையும் கொண்டவராகக் கூறப் படும் முருகப்பெருமானின் ஆயுதம் வேல். ‘குன்றுருவ வேல்வாங்கி நின்ற முகம் ஒன்று’ என அருணகிரிநாதர் கூறு வது நோக்கத்தக்கது. அதேவேளை, அந்த வேலினை அறியாமை இருளை அழிக்கும் ஞானவேல் என்றும் கூறுவர்.

முருகப்பெருமானுக்கு உகந்த சிறப்பு நாள் தைப்பூசம். தமிழர்கள் தைப்பூச விழாவில் முருகன் கோவிலுக்குக் காவடி எடுத்துச் சென்று வழிபடுவர். இந்த வழக்கம் தமிழகத்தில் மட்டுமின்றி, இலங்கை, மலேசியா, மொரீசியஸ் உள்ளிட்ட தமிழர்கள் மிகுதியாக வாழும் நாடுகளிலும் சிறப்பாக உள்ளது. மயில்வாகனத்தில் வீற்றிருந்து அருள் புரியும் முருகப்பெருமானை இம்மாத ‘ஓம் சக்தி’ அட்டைப்படத்தில் காணலாம்.

– ஆர்.வி.

கருப்புப் பணத்தை ஒழிக்கும் செயலாகும். இதுபோன்றே வரி விதிப்புகளும் மக்கள் நலத்தை அடிப்படையாகக் கொண்டு செயல்பட வேண்டும். இதில் கட்சி வேறு பாடு கருதாமல் மக்கள் நலம் காக்கத் திட்டங்கள் வகுக்கப்பட வேண்டும். இதில் சர்ச்சைகள் தேவை இல்லை.

– **இரா. தியாகராசன்,** இலால்குடி.

**ஒ**ரு நாட்டின் பொருளாதாரச் சிக்கல் களை அவ்வப்போது சீர்படுத்தும் மேலாண்மை முயற்சியானது பல வருடங் களுக்கு ஒருமுறை நடைபெறுவதால் பணமதிப்பு நீக்கம், சரக்கு மற்றும் சேவை வரி ஆகிய இரண்டும் வரலாற்றுச் சம்பவங்களாகிப்போயின. பணமதிப்பு நீக்கத்தால் நான்கு பிரிவினர்களும் பாதிக்கவில்லை என்பது நாடகம். அவர் கள் தமது தனிப்பட்ட இழப்புகளை வெளிக்காட்டிட மாட்டார்கள் என்பது திண்ணம்.

சரக்கு சேவை வரி என்பது ஒரு நாடு, ஒரு முறை, ஒரு வரி என்ற எளிய முறை யாகும். இது மிகவும் எளிதாக முறை கேடற்ற தொழில் முறைக்கு வித்திடுகிறது என்பதே உண்மை. மேற்கண்ட இரண்டு நடவடிக்கைகளால் யாரும் பாதிக்க வில்லை. தவிர, ஒரு நாட்டின் அனைத்து வளர்ச்சிக்கும் இது வித்தாக அமைகிறது.

– **டி.என்.சி.எஸ். திருநாவுக்கரசு,**
பொள்ளாச்சி.

**ப**ணமதிப்பு நீக்க அறிவிப்பினால் பல்வேறு தரப்பினர் பாதிக்கப்பட்டது உண்மை. ஆனால், திட்டம் நல்ல திட்டம். மேலும் கருப்புப்பண விசயத்தில் அதி காரிகள் முதல் அரசியல்வாதிகள் வரை யிலும் லஞ்சம் வாங்குவதும், மக்கள் லஞ்சம் தருவதும் நிறுத்தப்பட்டால் ஒழிய, கருப்புப்பணம் ஒழியாது. அடுத்ததாக, முன்பிருந்த பல்நிலை வரிவிதிப்பு முறையை மாற்றி, நாடு முழுவதும் ஒற்றை வரிவிதிப்பைக் கொண்டு வந்தது பெரிதும் வரவேற்கத்தக்க செயலே.

இதனால் வரி இழப்பு ஏற்படும் மாநிலங் களில் மத்திய அரசு அவ்விழப்பை ஏற்றுக் கொள்ளும் என்பதால், மாநில அரசுகள் கவலைப்படத் தேவையில்லை. எந்தப் பொருளையும் வாங்க, விற்க வரி செலுத்த வேண்டும் என்பதால், அரசுக்கு வரியின் மூலம் வருமானம் அதிகரிக்கும். இந்தத் திட்டம் அரசுக்குப் பயனுள்ள திட்டமே. அரசியல்வாதிகள் சுயநலமின்றி, மக்களுக் காகப் பணிபுரிந்தால் பணமதிப்பு நீக்கம் மற்றும் ஜி.எஸ்.டி. வரிவிதிப்பு இரண்டு சம்பவங்களும் சரித்திரம் ஆகும் என்பதில் சந்தேகமே இல்லை.

– **வெ. ஜெயலட்சுமி,** கோவை.

சென்ற இதழ் தொடர்ச்சி

# வள்ளுவம் காட்டும் வாழ்க்கை நெறி




இனிக் குறள் நூலில் அதிகாரப் பெயராலும் வைப்பு முறையாலுமே மக்கள் வாழ்க்கை நெறி அழகியதாய், நுண்ணியதாய்க் காட்டப் படும் திறத்திற்கு ஒரு சான்று தருகின்றேன். கல்வி, கல்லாமை, கேள்வி, அறிவுடைமை, குற்றங் கடிதல், பெரியாரைத் துணைக்கோடல் என்ற அதிகாரங் களின் அமைப்புமுறை காண்போம். ஆளும் பொறுப்பினனாய தலைவனாயினும் அவன்கீழ் வாழும் குடிமகனேயா யினும்,

'கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக'

என்ற குறளின்படி கற்க வேண்டியதை ஐயம் திரிபின்றிக் கற்று அக் கல்விக்கேற்ப அந்நூல்கள் சொல்லும் நெறிக்கண் நிற்றல் வேண்டும். கற்பவை பொதுமையான நூல்களும் அவரவர் துறைக்கு ஏற்ற சிறப்பியல் நூல்களும் ஆம். அவற்றை நன்கு ஓதி உணர்தல் வேண்டும். மெய்ம்மையால் அறிவு கருதிக் கற்றானாயின், அறிவு வளர வளரத் தன்பால் மேலும் கல்லாமையாகிய இழிவு இருப்பதை உணர்வான். உணர்ந்ததும் சிறிது கற்ற அளவில் செருக்கி இராது, தன்னினும் நிரம்பக் கற்றார்பால் சென்று குறையிரந்து பணிந்து நின்று நூல் பல கேட்டறிவன். கற்றலால் அறிவும், கேட்டலால் ஒழுக்கமும் வளர்ந்தோங்கி நிலைபெறும்.

கல்வியாலும் கேள்வியாலும் இயற்கையோடு கூடிய செயற்கை அறிவு பெற்றவன், தன்பால் உள்ள காமம், வெகுளி முதலிய குற்றங்களை ஏதிலார் குற்றம் போன்று நடுவாக நின்றறிகின்றான். அறிந்தவுடன் அவற்றைக் கடிந்தொதுக்குகின்றான்.

குற்றங்களை உள்ளவாறு அறிதலும் கடிதலுமே அறிவின் தொழிலும் பயனும். அவ்வறிவே, கருவியாய்க் குற்றம் புகாது காத்துநிற்கும் அரணுமாம். இங்ஙனம் குற்றம் கடிந்தோனே அறனறிந்து மூத்த அறிவுடைப் பெரியாரைத் துணைக்கொண்டு அவர் கூட்டுறவால் பயன் பல கொள்ளுதற் குரியவன். அவன் ஒருவனே சிற்றினமும் சேராது வாழ்பவன் ஆவன்


திருவள்ளுவர்

தோன்றி உயர்ந்து நிலை பெறுதற் குரிய அடிப்படை நிலையை வள்ளு வம் கூறுமாறு கண்டு மகிழ்வோமாக.

'பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்

தேரினும் அஃதே துணை"

என்பது வள்ளுவம்.

அறிவு கருவியாகவும் அதுவே அரணாகவும் கொண்டு மனத்தைச் சென்றவிடத்தெல்லாம் செல்ல விடாது, தீயவற்றிலிருந்து விலக்கி நீக்கி நல்லனவற்றிற் செலுத்தும் நெறி அறிந்தான் ஒருவன், வாழும் நெறி முறையினை அடக்க முடைமை என்ற அதிகாரத்தில் வள்ளுவர் காட்டிச் செல்வர்.

'அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை

ஆரிருள் உய்த்து விடும்'

என்பது குறள். பெறுதற்கரிய மக்கட் பிறப்பெய்தியவன், மன மொழி மெய்கள் அடங்கி ஒழுக்க நெறிச் சென்று வாழ்வானாயின் அவ்வடக்கம் பழுத்துப் பக்குவ மாகி அவனைப் புத்தேள் உலகத் துச் செலுத்தும். இக்குறள் மக்கள் வாழ்வில் அமைந்துள்ள மேல் நெறியும் நிலையும், கீழ்நெறியும் நிலையும் எவ்வளவு தெளிவாக உரைக்கின்றது, பார்மின்!

அறிவறிந்த மகனின் மெய்யடக்கத் திற்கு மனன் உணர்விலாத அஃறி ணைப் பொருளாய ஆமையினைச் சான்றாய்க் காட்டும் திறம் இன்பம் தருவது. இயல்பிலேயே பரபரப்பும் பதற்றமும் இல்லாத அமைதியான ஆமை, தனக்குத் தீங்கு வருங் காலத்துத் தலையும் காலும் ஆகிய ஐந்துறுப்புகளையும் சுருக்கித் தன் வலிய ஓட்டுக்குள் இயல்பாய் அடக்கிக் கொள்ளுதல் போன்று மகனும் பழியும் பாவமும் புகாமல் மெய் முதலாய தன் ஐம்பொறிகளை யும் அடக்கவல்லவனாயின்

என்னும் இத்துணைப் பொருட்களும் அதிகார அமைப்பாற் பெறப்பட்டன அல்லவா?

நாட்டின் கல்விநிலை திருந்தல் வேண்டும்; சமுதாயத்தின் அறிவாக்கத் திற்கும் ஒழுக்கத்திற்கும் இயைந்ததாய் இருத்தல் வேண்டும் என எங்கும் இன்று பேசப்படுகின்றது. இக்கருத்துக் கள் வள்ளுவம் காட்டும் பயனுடை நெறிகளெனக் கொள்ளின் நலம் பல விளையுமன்றே.

சமுதாயத்தில் மக்கள் ஒழுக்கம் தாழ்ந்துள்ளது. அவ்வொழுக்கத்தில் மக்கள் உயரவேண்டும் எனத் தலை வர்கள் பலரும் வருந்தி வருந்தி உரைத்து வருகின்றனர். ஒழுக்கம்

அவ்வடக்கம் மனஒருமை – யோகம் – இவ்வொரு பிறப்பிற்கு மட்டுமன்று, வினைப்பயன் தொடரும் எழுபிறப் பிற்கும் அவனுக்கு அரணாம்.

'ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்க லாற்றின்

எழுமையும் ஏமாப் புடைத்து'

என்பது குறள். இதனையே திருமூல தேவரும்,

'ஒருமையுள் ஆமைபோல் உள்ளைந்தடக்கி

இருமையுங் கேட்டிருந்தார் புரையற்றே'

என்று தம் திருமந்திரத்து எடுத் தாண்டுள்ளமை நினையுந்தோறும், நினையுந்தோறும் உள்ளம் பெருமிதம் கொள்கின்றது.

இக்குறள் யோகம் சுட்டும் மந்திரமாயின், திருக்குறள் முழுவதும் தெய்வமாமறை ஆமன்றோ? நம்மை நெறியலா நெறிச்செலுத்தும் சொற் குற்றம் நான்கு – பொய்யும், புறங் கூற்றும் கொடுஞ்சொல்லும், பயனில் சொல்லும் என்பன. இவற்றையெல் லாம் கடிந்து அமைதலே நாவடக்கம் – நாநலன் உடைமையாம். ஒழுக்க முடையவர்க்குத் தீய சொல் வழுக் கியும் சொல்லுதல் இயலாது.

அடக்கம் பெற வள்ளுவம் காட்டும் வழி, 'தீச்சொல் சொல்லாதே தீய்க்கும் தீங்குதரும் ஆதலின் இனி யன கூறு, அந்நெறியே நாவடக்கம் தேடு' என்பது. பேச்சொடு பேச்சுக் கெல்லாம் பிறரையே புறம் கூறும் நம் நா, நாவடங்கிய பின் செயலுக்கும், சொல்லுக்கும் வித்தாய மனம் அடங் கல் வேண்டும். கதம் காத்துக் கற்றடங் குதல் உடையானிடத்து அறக் கடவுளே சென்று தன் குறை கூற, அவன் செவ்வி பார்த்து நிற்குமென்பார் வள்ளுவர்.



மக்கள் வாழ்க்கை, நெறியொடு செல்லின் எத்துணை மேம்பாடு உடையதாகின்றது பார்மின்! அறக் கடவுளும் அவனைப் பணிந்தடையு மெனின் அவன் அடக்கத்தால் அமரன் ஆதலில் வியப்பொன்று மில்லை. இவனே அந்நிலையில் நின்று யான் எனது என்னும் இருசெருக்கும் அறுப்பானாயின், அமரர் உலகினும் மேலாய வீட்டுலகமும் எய்துவான். இம்மை (இப்பிறப்பு), மறுமை (வரு பிறப்பு), வீடு (அழிவில் இன்பநிலை) இம்மூன்று நிலையும் சேர்ந்தமைவதே வாழ்க்கையின் முழுமை. இப்பிறப்பில் அமையும் வாழ்வு, வாழ்வின் முக் கூற்றில் ஒரு கூறென வள்ளும் கொண்டு மெய்ம்மையாக உணர்தல் வேண்டும்.

'பொருளிலார்க்கு இவ்வுலகம் இல்லை' என்று கூறும் வள்ளுவர், முயன்று நெறிநின்று 'செய்க பொருளை' என்பர். முயன்று தேடிய நற்பொருள் கொண்டு வாழ்தலே இயல்பாய அறநெறி என்பர், வெஃகலும் கள்ளத்தனமும் வேண்டா என்பர். தேடிய பொருள் கொண்டு வாழும்போது கடைப்பிடித்தற்குரிய ஒரு வரவு செலவுத் திட்டம் எக்காலத் தும் யார்க்கும் பொருந்துமாறு அரு மையில் எளிமை துலங்க நன்கனம் வகுத்துரைப்பர்.

வருகின்ற வருவாயின் அளவறிந்து அதற்கேற்பச் செலவிட்டு வாழ்க. அதுவே நிலையாத செல்வத்தை நிலை பெறச் செய்யும். வருவாய் சுருங்கி இருப்பதால் குடிகெடாது, செலவு மட்டும் மிகாதாயின். அளவிலாது செலவிட்டு வாழ்தல் பீடும் பெருமையும் தருவது

போன்று காட்டிப் பின் அறவே அழித்தொழிக்கும்.

செய்வன நல்லனவே ஆயினும், செல்வம் குன்றளவு குவிந்திருப்பினும் அச்செல்வ வரம்பறிந்து, என்றும் தொடர்ந்து நிலைபெற்று நிற்குமாறு வினை செய்க. இன்றேல், அறவினை தொடர்ந்து நடைபெறாவாறு செல்வம் தொலையும். இப்பொருளியல் வாழ்க்கைநெறி, நாட்டு மகனுக்கும் நாடாளும் பெருமகனுக்கும் பொதுமையாக வலியறிதல் அதிகாரத்துக் கூறப்பெற்றுள்ளது.

இறுதியாக, இரண்டொரு மெய்ம்மொழிக் கருத்துக் கண்டு மகிழ்வோமாக. இல்லறம், அறிவும் அன்பும் கொண்டு ஒழுக்கநெறி நின்று செய்வது. துறவறம், மெய்யுணர்வும் அருளும் கொண்டு ஒழுக்கநெறி நின்று செய்வது. இருநிலையிலும் தவிர்வன தவிர்ந்தால் செய்வன பயன் தரும். அல்லனவாய தீயவற்றை நாட்டிலும் வீட்டிலும் விலக்காமல், எத்துணை மேம்பட்ட நல்லன செய்யினும், செய்ய முயலினும் பயன் யாதுமில்லை என்பதே வள்ளுவம் காட்டும் வாழ்க்கை நெறி.

ஆதலால்தான், இழிந்தன மறந்தும் எண்ணாத வள்ளுவர், இறப்ப இழிந்தவும் தாழ்ந்தவும் ஆய அதிகாரங்களை அறத்துப்பால், பொருட்பால்களில் கூறிச்செல்வர். 'தவிர்க' என்பது அவர் ஆணை. செயற்பாலது என்றும் அறமே. தவிர்தற்குரியது என்றும் பழிதரும் வினையே. அறத்தின் வழிப்படும் பொருளே பொருள். அதன் வழிப்படும் இன்பமே இன்பம் என்பது மறைமொழி.

இல்லறத்தில் காதலின்பநிலை கூறாது, அன்பொடு பொருந்தும் அறத்தின் நிலையே கூறலும், காமத்துப் பாலில் அகனமர் காதலின்ப நிலையே காட்டலும், ஊடல், புலவி, துனி என்ற திறங்களால் காமம் வெல்லும் வகை குறித்தலும், இன்பத்தின் ஏற்றம் கூறல் போன்று அதன் இயல்புநிலை சுட்டலும் இயல்பினால் இல்வாழ்வார் எண்ணுதற்குரியன.

'கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக'

(முற்றும்)

# தீர்வு...




**சுத்தியல் பேசியது :**
**"பூட்டே உன்னை**
**தலையில் அடித்தால்தான்**
**உன்னைத் திறக்க முடிகிறது."**

**பூட்டு சொன்னது :**
**"அத்தனை சிரமம்**
**உனக்கு எதற்கு ?**
**என் இதயத்தைத் தொடு**
**நான் திறப்பேன்**
**அதற்கு சாவி போதுமே !"**

**– யாரோ**

கட்டுரை


திருமதி இந்திரா காந்தி

# மனிதனும் இயற்கை உலகமும்

(1972 ஜூன் 14-இல் ஸ்டாக் ஹோமில் ஐ.நா.வின் செயலர் திரு. மோரிஸ் ஏற்பாடு செய்து நடத்திய சுற்றுச்சூழல் பற்றிய முதல் மாநாட்டில் பிரதமர் இந்திரா காந்தியின் உரை)

"ஐ.நா.வின் மகத்தான முயற்சியாக இம்மாநாட்டில் உரையாற்றுவதைக் கருதுகிறேன்.

இயற்கையோடு பிணைந்த, உறவு கொண்ட சூழலில் வாழும் நல்வாய்ப்பைப் பெற்றவள் நான். பறவைகள், செடிகள், மலைகள் யாவையும் எனது இளமைக்கால நண்பர்கள். வெட்ட வெளியில் படுத்தபடி வானத்து நட்சத்திரங்களைக் கண்டும், வெறும் காலில் புல்வெளியில் நடந்தும் மகிழ்ந்தவள். நமது ஒரே பூமி மனித குலத்தின் அற்புத உறைவிடம்.

உலகின் அனைத்து உயிரினங்களையும் தனது உறவுகளாகப் பார்க்க முடியாது போனால், நமது நாகரிகம் பொருளற்றதாகிவிடும். இந்தியாவில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் பாறைகளிலும், இரும்புத்தூண் மீதும் மாமன்னர் அசோகர் பதித்த செந்நெறிகள் – அரசின் கடமை மக்களைக் காப்பதும், குற்றம் புரிபவர்களைக் கண்டிப்பதும் மட்டும் அல்ல, கானுயிர்களைக் காப்பதும் கடமையே எனக்கூறுகிறது.

வேட்டை விளையாட்டுக்காகவும், உணவுக்காகவும் உயிரினங்களைக் கொல்வதைச் சட்டம் மூலம் தடுத்தவர் அசோகர். இதற்குமேல், போரின் கொடுமைகளால் நொந்து போய், தர்மத்தின் ஆட்சியே நிரந்தர மகிழ்ச்சிக்குரியது என்பதை நிறுவியவர். அவரது கொள்கைகள் இந்த மாநாட்டின் நோக்கத்திற்கு உரியவை.

ஆனால், இந்தியர்களாகிய நாங்களே இயற்கையை அழிக்கும் தவறைச் செய்து வருகிறோம். எமது தாவரங்களும், விலங்கினங்களும் அழிந்து வருவது எனக்கு வேதனை தருகிறது. எங்கள் நாட்டின் சில உயிரினங்கள் பூண்டற்றுப் போய்விட்டன. சரித்திரத்தின் மௌன சாட்சிகளாக நின்ற பெரிய மரங்களும், அழகிய வனங்களும் அழிக்கப்பட்டு விட்டன.



ஈரோடு ஜீவா

எங்களின் தொழில்கள் துளிர் விடுகிற போது எங்கள் சுற்றுச்சூழல் சீர்கெடாது தடுக்க முயற்சி மேற் கொண்டுள்ளோம்.

இயற்கையை அழித்துத்தான் வளர்ச்சி நிகழ வேண்டிய அவலம் ஒவ்வொரு நாட்டிலும் தொடர்கிறது. இயற்கையைச் சார்ந்தே வாழ வேண்டி யவர்களாகிய நாம் "இயற்கையைச் சுரண்டுவது" பற்றியே சிந்தித்துக் கொண்டு வருகிறோம்.

1953–இல் எவரெஸ்ட் சிகரத்தை முதன் முதலாக மனிதன் எட்டியபோது இமயத்தை வெற்றிகொண்டோம் என்று கூறிக்கொண்டதை, மனித மமதையின் வெளிப்பாடு என்றார் ஜவகர்லால் நேரு.

மனிதர்களுக்கு மத்தியிலேயே இன்னும் சமத்துவம் உண்டாகவில்லை. நிறம், இனம், மதம், கலாச்சாரம் என்பவற்றால் வேற்றுமை வளர்க்கப்படுகிறது. நியாயத்தின் பக்கமாக வலிமை நிற்க வில்லை. அநியாயங்களுக்கே வலிமை உதவுகிறது.

முன்னேறிய நாடுகள் தங்களின் வளங்களைப் பிற நாடுகளை அடிமைப் படுத்தியும், இயற்கை வளங்களைச் சுரண்டியுமே பெற்றன.

அடிமைப்படுத்தப்பட்ட நாடுகளின் உழைப்பாளிகளும், சிறு முதலாளிகளும் மேலை நாடுகளின் இன்றைய தொழில் வளர்ச்சிக்கு நிறைய உதவியுள்ளனர்.

நாங்கள் எங்கள் இலட்சியங்களுக்கு உண்மையாக இருக்க விரும்புகிறோம். உழைப்பாளிகளின் உரிமைகளுக்கான உலக சாசனம் வகுத்துக் கொடுத்துள்ள பாதையைப் பின்பற்ற விழைகிறோம். அனைத்துக்கும் மேலாக அரசியல் விழிப்புணர்வு பெற்ற கோடிக்கணக் கான மக்களின் கேள்விகளுக்குப் பதில ளிக்க வேண்டியவர்களாகவும் உள் ளோம்.

மேற்கத்திய நாடுகள் எமது வறுமை யைக்கண்டு முகஞ்சுளிக்கின்றன. அவை வளம்பெறக் கடைப்பிடித்த முறைகளை இன்று நாங்கள் கையாளக்கூடாதென மிரட்டுகின்றன.

மலைவாழ் மக்களுக்கு வேலை வாய்ப்பையும், வருமானத்தையும் உருவாக்காமல், அவர்கள் தங்களது அன்றாட உணவுத் தேவைக்காகக் காடு களில் வேட்டையாடுவதைத் தடுப்பது எப்படி நியாயமாகும்? தங்கள் உயிர் வாழ்வுக்கே அவர்கள் போராடும்போது விலங்குகளின் நலனை எப்படி அவர் கள் சிந்திக்க முடியும்? நகரங்களின் சேரி களிலும், பின்தங்கிய கிராமங்களிலும், மோசமாக வாழ்ந்து கொண்டிருப்பவர் களிடம் காற்றைக் காப்பாற்று, தண் ணீரைக் கெடுக்காதே, என்று எப்படிக் கேட்பது?

வறுமையை வைத்துக்கொண்டு சுற்றுச்சூழலைக் காக்க முடியாது. வறு மையை விஞ்ஞானமும், தொழில் நுட்பமும் இன்றி வறுமையைப் போக்க முடியாது.

இந்தியாவின் பொருளாதார மேம்பாட்டு முயற்சிகள், அதன் ஆன்மீக மதிப்பைக் கெடுத்துவிடாதா எனச் சில வெளிநாட்டினர் கவலையுடன் கேட்பது எமக்கு வியப்பூட்டுகிறது.

பொருளாதார வளர்ச்சியும், அரு ளாதார வளர்ச்சியும் இருவேறானவை. துறவும், பற்றின்மையும் எமது பாரத மக்களின் மதிப்புமிக்க பாரம்பரியம். எமது உன்னத ஆன்மீகம் செல்வக் குவியலின் நடுவேதான் உண்டானது. செல்வத்தின் நடுவேயும் வசதிகளைக் குறைத்து வாழும் நெறியை மேற் கொண்டவர்கள் எம்மக்கள்.

மனதின் விசாலம்தான் ஆன்மீகம். இன்பத்தையும், துன்பத்தையும் சம மாகப் பாவித்தல்தான் ஆன்மீகத்தின் அடிப்படை.

இந்தியாவின் வடமேற்கு மலைப் பிரதேசங்களில் நான் பயணம் செய்தபோது எனக்கு ஓர் அனுபவம் கிடைத்தது. முதியவர்கள், தமது சிறு பான்மைக் கலாச்சாரம், பெரும்பான் மையினரின் கலாச்சாரத்தில் மூழ்கி விடாமல் பாதுகாக்கப்பட வேண்டும் என்றனர். அந்தச் சிறுபான்மை இன இளைஞர்கள், "நாடு முழுவதையும் புதுமைப்பாதையில் நடைபோடும் போது எங்களை மட்டும் அருங்காட்சி யகப் பொருளாகப் பழமையில்

வைத்திருப்பது என்ன நியாயம்?" என்றனர். இதையே மேலைநாடுகளுக்குக் கூறிக்கொள்கிறேன்.



கடந்த கால் நூற்றாண்டாக மனிதகுலத்தின் ஆறில் ஒரு பங்கான எமது இந்திய மக்களின் அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்யும் சரித்திரப் புகழ்மிக்க பணியை மேற்கொண்டுள்ளோம். எமது திட்டங்களுக்குச் சரியான வழிகாட்டிகள் இல்லை. பிற நாடுகளின் அனுபவங்களும் எங்களுக்கு இல்லை. எமது மாறுபட்ட சமூக, அரசியல், பொருளாதாரச் சூழலுக்கு அவை பொருந்துவதாக இல்லை.

திட்டமிடலும், செயல்படுத்தலும் ஒன்றுடன் ஒன்று மோதிக் கொண்டதால் முன்னேறினோம். மேற்கின் முன்னேற்றத்தின்கான தொழிற்கொள்கைகளை நாங்களும் கடைப்பிடித்தோம். ஆனால், 60–களில் அச்சுறுத்தும் விளைவுகளைச் சந்தித்தோம். சில விளைவுகள் எமது தவறால் நேர்ந்தவை. பல தவறுகள் அந்த மேற்கத்திய வழிமுறையில் உள்ள கோளாறினால் உருவானவை.

எமது தேவைகளின் பட்டியலை மறுபரிசீலனை செய்ய வேண்டிய சூழல் இப்போது உருவாகியுள்ளது. மனிதர்களைவிடப் பண்டங்களுக்கே முதன்மை தரும் குறுகிய நோக்கம் கொண்ட முன் மாதிரிகளை நாங்கள் விலக்க வேண்டியுள்ளது. மேற்கத்திய வழிமுறைகள் எமது தேவைகளை வளர்த்தன. ஆனால், மகிழ்ச்சியை வளர்க்கவில்லை. அதனால் மனிதனை மையப்படுத்தி, அவனது பன்முக மாட்சியை வளர்க்கும் அணுகுமுறைதான் அவசரத் தேவை. இதுவும் வளர்ச்சியின் ஒரு பாகமாக வேண்டும்.

மக்கள்தொகை, சூழல் மாசுபடுதல் முதலியவற்றை அரசியல், பொருளாதார, சமூகச் சூழலுடன் இணைத்துப் பார்க்க முயல்கிறோம். குடும்பக் கட்டுப்பாட்டை அரசுச் செயல்பாடாகக் கொண்டு சிறப்புறச் செய்து வரும் ஒரு சில அரசுகளில் எமது அரசும் ஒன்று.

திட்டமிட்ட சிறு குடும்பம் ஆரோக்கியமானதே. விழிப்புணர்வுள்ள மக்களை உருவாக்கவும், மக்களின் வாழ்க்கைத் தரத்தையும், கல்விநிலையையும் உயர்த்தவும் அம்முயற்சி பயன்பட வேண்டும். நகர்ப்புறங்களில் எமது குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டம் வெற்றிகரமானதாக உள்ளது. ஏழைகளுக்கோ ஒவ்வொரு குழந்தையும் வருமானம் ஈட்டுபவர்களாக இருக்கிறார்கள். இப்போது குடும்பக் கட்டுப்பாட்டுடன் தாய், சேய் நலம், சத்துணவு ஆகியவற்றையும் இணைத்துச் செயல்படுத்துகிறோம்.

இயற்கை வளங்களை அழிப்பது, சுற்றுச்சூழலை மாசுபடுத்துதல் மேலைநாடுகளிலும், அமெரிக்காவிலும் ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளிலும் சமமாகவே நடக்கின்றன.

முரண்பாடும், மோதலும், வளர்ச்சிக்கும் சூழல் பாதுகாப்புக்கும் இடையில் இல்லை. சுற்றுச்சூழலுக்கும், பொறுப்பற்ற முறையில் இயற்கை வளங்களைப் பயன்படுத்துதலுக்கு இடையில்தான் உள்ளது. தனிமனித சுதந்திரத்தை முன்மொழிவதுதான் புதுயுகம் என்கின்றனர் வரலாற்றாசிரியர்கள். ஆனால், உரிமையுடன் கடமைகளும் உண்டு என்பதை மறக்க முடியுமா?

தனிமனித லாபவேட்டையைத் தடுக்கும் தத்துவங்கள் உட்பட அனைத்து நவீனத் தத்துவங்களுமே பொருள் சேர்ப்பதே மனிதனின் குறிக்கோள் என்பதை ஏற்றுக்கொண்டுவிட்டன.

மாசுபடுதல் என்பது தொழில்நுட்பப் பிரச்சனை அல்ல. விஞ்ஞானத்திலோ, தொழில்நுட்பத்திலோ குறை இல்லை. தொலைநோக்கற்ற, சக மனிதனின் உரிமைகளை மதிக்காத

மதிப்பீடுகளின் வீழ்ச்சிதான் மாசுபடு தலுக்கான காரணம்.

பெரும்பான்மை ஏழை மக்களின் வாழ்வை மேம்படுத்துவதே சுற்றுச்சூழல் பாதுகாப்புப் பணிகளின் நோக்கமேயன்றி, அவர்களுக்கு எதிரானதல்ல. அவர்களுக்குத் தொழில் நுட்பங்களை மறுப்பது அநீதி.

வளர்ச்சிதான் சூழல் அழிவிற்குக் காரணம் என்றும் பணக்கார நாடுகள் கூறலாம். ஆனால் உணவு, தண்ணீர், சுகாதாரம், உறைவிடம் யாவற்றையும் அனைத்து மக்களுக்கும் தர வளர்ச்சி தேவை. தரிசு நிலங்களை விளை நிலமாக்கவும், மலைகளை மக்களின் தேவைகளுக்கு ஏற்றதாக மாற்றவும் வளர்ச்சி தேவை.

இன்றைய அவசர, அடிப்படைக் கேள்வி உலக சமாதானமே. நவீனப் போர்முறைக்கு லட்சியம் இல்லை. ஒட்டுமொத்த அழிவைக் கணப்பொழுதில் கொண்டுவரும் அசுர ஆயுதங்கள், மனிதரைக் கொன்று உருக்குலைப்பதுடன் நில்லாது, கருவில் வளரும் குழந்தையையும், வருங்காலத் தலைமுறையினரையும் சிதைப்பனவாகும். மண்ணை நஞ்சாக்கி, பூமியை வெறுமையால் நிறைக்கும் கோரம் இந்த நவீன ஆயுதங்களுக்கும் உண்டு.

இந்தப் பூமியின் எதிர்காலத்தை உலகை அச்சுறுத்தும் சூழல் பிரச்சனைகள் நிர்ணயிப்பவையாக உள்ளன. நாம் எவ்வளவு உயர்ந்தவர்களாக, பலம் பொருந்தியவர்களாக இருந்தாலும் அழிவிலிருந்து தப்பிவிட முடியாது.

அதேவேளையில், சூழல் சிக்கல்களைக் காட்டி ஏழை நாடுகளின் சுமையை அதிகரிக்கவிடக்கூடாது. புதிய அரசியல், வணிக நிர்ப்பந்தங்களைச் சுமத்தப் பணக்கார நாடுகள் முயலக்கூடாது. மாசுக்கட்டுப்பாடு என்பதே அவர்களின் மற்றொரு வியாபாரமாகிவிடக்கூடாது. சில நிறுவனங்களும், சில நாடுகளும் இதையும் பணம் குவிக்கும் வித்தையாக்கிவிடக்கூடாது. உலக நாடுகளின் விஞ்ஞானிகள் அனைவரும் ஒன்றுபட்டு உருவாக்கும் கண்டுபிடிப்புகளை உலகுக்கே பொதுவாக்க முன்வர வேண்டும். கண்டுபிடிப்புகள் யாருடைய தனியுடைமையாகக் கூடாது. இந்த மாநாடு இதுகுறித்துச் சிந்திப்பது மகிழ்வளிக்கிறது.

நமது சமுதாயத்தின் அடிப்படைக் கருத்தை நாம் மறுபரிசீலனை செய்தாக வேண்டும். மனமாற்றம், பாதைமாற்றம், செயல்முறை மாற்றம் இன்றிப் புதிய மாறுதலை எந்த நாடும் அடைந்துவிட முடியாது. ஒவ்வொரு நாடும் தனக்கு ஏற்ற முறையில்தான் பிரச்சனையை அணுக வேண்டும். ஆனால், அனைத்து நாடுகளின் ஒன்றுபட்ட முயற்சி உலகளாவிய மாற்றத்திற்குத் தவிர்க்க முடியாத தேவை.

நாங்கள் காலக் கடிகாரத்தைப் பின்னோக்கிச் சுழற்றவோ, எங்களைப் பாமரத்தனமான பழைமையில் ஆழ்த்திக் கொள்ளவோ விரும்பவில்லை. அறிவியல் தரும் அற்புதங்களைப் பயன்படுத்திக் கொள்ளும் புதிய பாதையை நாடுகிறோம். இது ஒரே மூச்சில் எட்டிவிடக்கூடிய அளவுக்கு எளிதல்ல. அறிவியல் நுட்பத்தையும், மனிதகுல மேம்பாட்டையும் கைகோர்க்கச் செய்ய விடாமுயற்சியும், முடிவற்ற தேடலும் தேவை.

எனவே, மனிதனே பிரதானமாகவும், நல்லிதயத்துடனும் மனசாட்சியுடனும் விளங்கட்டும். நாம் அமைக்கும் உலகம் கட்டளையிடுவோர் – பணிந்து நடப்போர் என இருவேறு கூறாக உலகம் இனியும் இயங்க முடியாது. சுய சிந்தனையுடனும், சுயமான செயல் திறனுடனும் கூடிய சக மனிதன்மீது மட்டற்ற அன்பு ததும்பும் மனிதனே இன்றைய தேவை.

எமது அதர்வண வேதத்தின் 'பூமி வாழ்த்து' இதற்கு வழிகாட்டியாக அமையும்.

"உன் உயிர்நிலைகளையோ, இதயத்தையோ நான் காயப்படுத்தாதிருப்பேனாக,

நான் உன்னில் அகழ்ந்தெடுப்பது மீண்டும் விரைந்து துளிர்க்கட்டும்."

●

நேர்காணல்

# பொள்ளாச்சியில் 'நீரா' உற்பத்தி நிலையம்




*தமிழக அரசு தென்னை, பனை மரங்களிலிருந்து 'நீரா' பானம் இறக்குவதற்கு ஒப்புதல் அளித்ததையடுத்து, சென்ற ஜூன் 2017 'ஓம் சக்தி' இதழில் அது பற்றிய செய்தியை வெளியிட்டிருந்தோம். அதற்கான அரசாணை விரைவில் வெளியிடப்பட உள்ள நிலையில், தமிழகத்தின் முதல் நீரா உற்பத்தி மற்றும் ஆராய்ச்சி நிலையம் பொள்ளாச்சிப் பகுதியில் உள்ள பொன்னாலம்மன் துறை என்னும் ஊரில் அமைக்கப்பட்டுள்ளது.*

*இதுபற்றிய செய்திகளை அறிய, இந்த உற்பத்தி மற்றும் ஆராய்ச்சி நிலையத்தை அமைத்திருக்கும் பொள்ளாச்சி ஆனைமலை தென்னை உற்பத்தியாளர் சங்கத்தின் இயக்குநர் திரு. தனபால் முத்துசாமி அவர்களைச் சந்தித்தோம். 'ஓம் சக்தி' வாசகர்களுக்கு அவர் அளித்த பேட்டி...*

**கேள்வி : 'நீரா' உற்பத்தி மையம் அமைக்கும் எண்ணம் உங்களுக்கு எப்படி வந்தது?**

**பதில் :** நான் தொடக்கத்தில் எச்.எஸ்.பி.சி. வங்கியில் ஏற்றுமதி – இறக்குமதிப் பிரிவில் மேலாளராக இருந்தேன். நான் அடிப்படையில் விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவன். அதனால், எனக்கு விவசாயத்தில் ஈடுபாடு அதிகம். தென்னையில் ஏதேனும் மதிப்புக்கூட்டுப் பொருள் தயாரிக்க விரும்பினேன். எனவே, வங்கிப்பணியிலிருந்து விலகி, தற்போது நீரா தொடர்பான ஆராய்ச்சியில் 4 ஆண்டுகளாக ஈடுபட்டு வருகிறேன்.

இந்த நீரா யூனிட்டை நான் மட்டும் தனியாக உண்டாக்கவில்லை. ஆனைமலை தென்னை உற்பத்தியாளர் சங்கத்தின் மூலம் செய்திருக்கிறோம்.


திரு. தனபால் முத்துசாமி

அரசுக்கு இது பற்றித் தெரியப்படுத்தி, நீராவைப் பற்றிய எங்கள் ஆராய்ச்சி முடிவுகளைத் தமிழக முதல்வரிடம் கொண்டு சென்று தந்தோம். மேலும், நீராவைத் தலைமைச் செயலகத்திற்குக் கொண்டு சென்று, முதல்வரிலிருந்து தலைமைச் செயலகப் பணியாளர்கள் வரை அனைவருக்கும் தந்தோம்.

நீராவிலிருந்து சர்க்கரை, தேன், பிஸ்கட்டு

கள், இனிப்புப் பலகாரங்கள் என 20 தயாரிப்பு களைச் செய்திருக்கிறோம். இவற்றையெல்லாம் செய்ய முடியும் என்பதை அரசிடம் விளக்கியிருக் கிறோம்.

முதலில் எங்கள் தொகுதி சட்டமன்ற உறுப் பினரும், சட்டப்பேரவைத் துணைத் தலைவருமான மாண்புமிகு பொள்ளாச்சி ஜெயராமன் அவர் களிடம் இதைப்பற்றி எடுத்துரைத்தோம். அவர் இதில் மிகுந்த ஈடுபாடு காட்டினார். இதன்மூலம் விவசாயிகளுக்கு மிகுந்த பலன் உண்டு என்பதை அறிந்து, அதற்காக முழுமுயற்சி எடுத்தார்.

எங்களை முதல்வரிடம் அழைத்துச்சென்று இதுபற்றி விளக்கும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்தார். அதனால் முதல்வரும் நீரா பானம் இறக்க அனுமதி அளிக்க முன்வந்தார். எங்கள் தொகுதி சட்டமன்ற உறுப்பினர் இதற்காக நிறைய உதவிகளைச் செய்துள்ளார். அரசின் உயர் அலு வலர்கள் அனைவரையும் நாங்கள் சந்தித்து நீரா பற்றிய தகவல்களைக் கொடுக்க ஏற்பாடுகள் செய்தார்.

அதன்பின் தலைமைச் செயலகத்திலிருந்து அரசின் உயர் அலுவலர்கள் பொள் ளாச்சிக்கு வந்து நீரா யூனிட்டை ஆய்வு செய்தனர். பின்னர் ஜூலை 19–இல் இதனை அரசு சட்டப்பூர்வ மாக்கியது.

இனி விவசாயிகளுக்குப் பயிற்சியும், மரம் ஏறுபவர்களுக்குப் பயிற்சியும் அரசு தரவிருக்கிறது. விற்பதற்கான உதவிகளையும் அரசு செய்ய முன்வந்திருக்கிறது.

**கேள்வி : விவசாயிகளே நேரடி யாக உற்பத்தி செய்து விற்பனை செய்ய முடியுமா?**

**பதில் :** தென்னை உற்பத்தி யாளர் சங்கங்களின் மூலமாகத் தான் நீரா இறக்க அரசு அனுமதி தரும். தனிப்பட்ட முறையில் இறக்க இயலாது. நான் ஆனை மலை தென்னை உற்பத்தியாளர் சங்கத்தில் இயக்குநராக இருக் கிறேன். எங்கள் சங்கத்தில் 1000 விவசாயிகள் உறுப்பினர்களாக உள்ளனர். எங்கள் ஆய்வு நிறு வனத்தை இச்சங்கத்துடன் இணைத்து இனி நீரா தயாரிக்கத் திட்டமிட்டுள்ளோம்.

**கேள்வி : நீரா – தற்போதைய கண்டுபிடிப்பா? முற்காலத்திலேயே இருந்ததா?**

**பதில் :** முதலில் கள், பதநீர் ஆகியவை இருந்தன. நீரா இப்போதைய கண்டுபிடிப்புத்தான். அனைத்திற்கும் மூலப்பொருள் தென்னையின் பூப்பாளையிலிருந்து வருகிற நீர்தான்.

**கேள்வி : நீரா – கள் வேறுபாடுகள் என்னென்ன? நீரா, கள் போலப் போதை தருமா? வாடை வருமா?**

**பதில் :** தென்னம்பூப்பாளையிலிருந்து வரும் நீரானது மிகவும் இனிப்பாக இருக்கும். மிகுந்த ஊட்டச்சத்துக்கள் கொண்டது. அது இறங்கிய பின் குறிப்பிட்ட நேரம் கடந்து விட்டால் ஈஸ்ட் களால் புளித்துப்போய்க் கள்ளாக மாறும். புளிக்கா மல் இருப்பதற்காகச் சுண்ணாம்பு தடவுவார்கள். அதுதான் பதநீர் எனப்படுகிறது. சுண்ணாம்பு தடவினால் காரத்தன்மை உடையதாகிறது. கள் ளுக்குத் தொடக்கத்தில் புதுப்பானையில் சிறிது பழைய கள்ளை ஊற்றிப் புளிக்க வைப்பார்கள்.



பாட்டிலில் அடைக்கப்பட்ட நீரா

நீரா என்பது மரத்தி லேயே குளிர்பதனப் பெட்டியில் தென்னம்பாளை நீரை இறங்க வைத்து, 4 டிகிரி வெப்பநிலை மாறாமல் சீரான குளிர்ப்பதன நிலையில் காக்கப்படும். இதனால் புளிக்காமல் இருக்கும். இதில் ஆல்கஹால் கிடையாது. எனவே, இது கள் போலப் போதை தருவ தில்லை. விரும்பத்தகாத வாடை யும் இதில் இல்லை.

**கேள்வி : உங்கள் நீரா உற்பத்தி மையம் போல, பொள்ளாச்சிப் பகுதியில் எத்தனை மையங்கள் அமைக்க வாய்ப்புகள் உள்ளன?**

**பதில் :** பொள்ளாச்சிப் பகுதியில் உள்ள தென்னை மரங்களை வைத்து, ஏறத்தாழ 10 நீரா மையங் கள் அமைக்க முடியும். இப்போதே பொள்ளாச்சிப் பகுதியில் தென்னை உற்பத்தியாளர் சங்கங் கள் ஏழு உள்ளன. வருங்காலத் தில் இன்னும் அதிகரிக்க

வாய்ப்புகள் உள்ளன.

**கேள்வி : ஒரு மையத்தில் எத்தனை மரங்களிலிருந்து நீரா தயாரிக்க முடியும்?**

**பதில் :** தற்போது விவசாயிகளிடம் உள்ள அத்தனை மரங்களிலிருந்தும் நீரா உற்பத்தி செய்வது சாத்தியமில்லை. இதற்கு ஆட்கள் தேவை. இனிமேல்தான் படிப்படியாக இந்தப் பணியைச் செய்ய முடியும். தற்போது எங்கள் மையத்தில் ஏறத்தாழ 5 ஆயிரம் மரங்களிலிருந்து உற்பத்தியைத் தொடங்கத் திட்டமிட்டுள்ளோம். இதற்கும் ஓராண்டு அல்லது இரண்டாண்டுகளாகலாம்.


நீராவிலிருந்து தயாரிக்கப்பட்ட சர்க்கரை

**கேள்வி : ஒரு மரத்திற்கு எத்தனை ஆட்கள் தேவைப்படுவார்கள்?**

**பதில் :** மரம் ஏறுவதற்கு ஒருவர், கீழே உதவியாளர் ஒருவர் என ஒரு மரத்திற்கு இரண்டு பேர் தேவைப்படுவார்கள். ஒருவர் ஒரு நாளில் 25 மரங்கள் ஏற முடியும்.

**கேள்வி : இதற்குத் தேவையான ஆட்கள் இப்போது கிடைப்பார்களா?**

**பதில் :** கிடைப்பார்கள். மேலும் ஆட்களைத் தேவைக்கேற்பப் பயிற்சி கொடுத்துத் தயார் செய்து கொள்ளலாம். இதில் நல்ல வருமானம் கிடைக்கும். மரம் ஏறுபவர் ஒருவர் ஒரு மாதத்திற்கு ரூ. 25 ஆயிரம் முதல் ரூ. 30 ஆயிரம் வரை வருமானம் பெற முடியும். இதனால் இத் தொழிலுக்கு நிறையப்பேர் வர வாய்ப்புள்ளது.

**கேள்வி : தென்னை, பனை மரங்களில் ஏறுவதற்கு உதவும் கருவிகளைப் பயன்படுத்தி ஏறலாமல்லவா?**

**பதில் :** அதையும் வருங்காலங்களில் பயன்படுத்தலாம். அதற்கான முறையான பயிற்சி தேவை. மரம் ஏறுவது மட்டுமல்ல, மரத்தில் ஏறிச் செய்யும் வேலைதான் முக்கியமானது. பாளையைச் சீவுவதில் பயிற்சி தேவை. முறையான பயிற்சி இல்லாத நிலையில் விவசாயிக்கு இழப்புத்தான் ஏற்படும்.

**கேள்வி : பனிக்கட்டிகள் உள்ள பெட்டியைச் சுமந்து கொண்டு மரம் ஏறுவது கடினமான பணியல்லவா?**

**பதில் :** பனிக்கட்டிப் பெட்டியைச் சுமந்து கொண்டு மரம் ஏறுவதில்லை. கயிற்றோடு மரம் ஏறுவார்கள். மேலே ஏறிய பின் கயிற்றை அங்கிருந்து கீழிறக்கி, அதில் பெட்டியைக் கட்டி மேலே இழுத்துக் கொள்வார்கள். இந்த வேலைகளில் நிறைய நுணுக்கங்கள் உள்ளன. சிறிய மரங்களுக்கு உயரமான ஏணிகளையே பயன்படுத்திக் கொள்ளலாம்.

**கேள்வி : நீரா இறக்குவதால் தென்னை மரங்களுக்குப் பாதிப்பு ஏதேனும் ஏற்படுமா?**

**பதில் :** பாதிப்பு எதுவும் ஏற்படாது. ஒவ்வொரு மரத்திலும் 8 முதல் 10 மாதங்கள் வரைதான் இறக்குவார்கள். பின்னர் 2 – 4 மாதங்கள் இடைவெளி கொடுத்த பின்னர்தான் மீண்டும் இறக்குவார்கள். நல்ல வயதுள்ள மரங்களில் ஓராண்டுக் காலம்கூடத் தொடர்ந்து இறக்க முடியும். மரங்களின் வயது, அவற்றிற்கான நீர்ப்பாசனம், உரங்கள் தருவதைப் பொறுத்துப் பலன்கள் கிடைக்கும்.

**கேள்வி : நீரா இறக்குவதற்கு எத்தனை வயதுடையதாக மரம் இருக்க வேண்டும்?**

**பதில் :** குறைந்தது ஏழு ஆண்டுகளாகியிருக்க வேண்டும். அதிக வயதுடைய மரங்கள் மிகுந்த உயரமாக இருந்தால் மரம் ஏறுவதற்கு ஆள்கள் கிடைக்கச் சிரமமாக இருக்கும். எனவே, அதிக அளவாக 20 அடி உயரம் வரை உள்ள மரங்களில் நீரா இறக்கலாம்.

**கேள்வி : அப்படியானால், ஒரு தோட்டத்திலுள்ள மரங்கள் அனைத்திலும் நீரா இறக்காமல், பாதிப் பாதியாக இறக்க வேண்டுமா?**

**பதில் :** எல்லா மரங்களிலும் இறக்க இயலாது. எல்லா விவசாயிகளும் பயனடைய வேண்டும். எனவே, அது தொடர்பான சட்ட விதிகளை அரசு உருவாக்கும்.

**கேள்வி : வறட்சிக் காலத்தில் உற்பத்தி குறையுமா?**

**பதில் :** வறட்சிக் காலத்தில் உற்பத்தி குறையும். இதற்கு நீர்ப்பாசனம் மிகவும் முக்கியம். நீர்ப்பாசனத்தைப் பொறுத்தே உற்பத்தி அதிகரிக்கும்.




நீரா சர்க்கரை

**கேள்வி : நீரா இறக்குவதால் அம்மரத்தில் தேங்காய் உற்பத்தி இருக்காது. அதனால் தேங்காய் விலை உயரும் வாய்ப்புள்ளதா?**

**பதில் :** ஆம்! பாளையைச் சீவி நீரா பானத்தை இறக்குவதால் தேங்காய் உற்பத்தி தடைப்படும். ஆனால், விவசாயிக்குத் தேங்காயிலுள்ள வருமானத்தைவிட இதில் அதிக வருமானம் கிடைக்கும். விலை உயரும் என உடனடியாகச் சொல்ல முடியாது. தற்போது ஒரு தோட்டத்திற்கு 50 மரங்கள் என்ற அளவில்தான் நீரா இறக்கப்போகிறோம்.

பொள்ளாச்சிப் பகுதியில் இப்போது சுமார் 1 கோடி தென்னை மரங்கள் உள்ளன. இவற்றில் 1 லட்சம் மரங்களில் இறக்குவதே கடினம். நாளடைவில் – சுமார் ஐந்தாண்டுகளுக்குப் பின்னர் ஏற்றுமதி அதிகரித்து ஒரு தோட்டத்தில் 150 முதல் 200 மரங்கள் வரை நீரா இறக்கும் நிலையில் அதாவது, 1 லட்சம் மரங்களுக்கு மேல் இறக்கும் நிலையில் தேங்காய் விலை சிறிது அதிகரிக்கும் வாய்ப்பு ஏற்படும். விலை உயர்வுக்குச் சுமார் பத்தாண்டுகளாகலாம்.

**கேள்வி : ஒரு நாளைக்கு ஒரு மரத்திலிருந்து எத்தனை லிட்டர் நீரா கிடைக்கும்? இதன்மூலம் விவசாயிக்கு ஓராண்டிற்கு எவ்வளவு வருமானம் கிடைக்கும்?**

**பதில் :** ஆண்டுச் சராசரியாகப் பார்க்கும் போது ஒரு மரத்திலிருந்து ஒரு நாளைக்கு இரண்டு முதல் இரண்டரை லிட்டர் வரை நீரா கிடைக்கும். பருவ கால நிலைக்கேற்ப இது மாறுபடும். சில நாட்கள் 3 லிட்டரும் கிடைக்கும், சில நாட்கள் குறைவாகவும் கிடைக்கும். ஒரு மரத்திற்கு ஓராண்டிற்கு ரூ. 7 ஆயிரத்து 500 முதல் ரூ. 8 ஆயிரம் வரை கிடைக்கும்.

**கேள்வி : நீரா தென்னையிலிருந்து மட்டும்தான் கிடைக்குமா? பனையிலிருந்தும் கிடைக்குமா?**

**பதில் :** பனையிலிருந்தும் கிடைக்கும். 98 % ஒரே தரத்தில்தான் இரண்டும் இருக்கும். இரண்டிலும் சத்துக்கள் ஒன்றாகவே இருப்பதாக ஆய்வறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

**கேள்வி : ஒரு பாளையில் நீரா எத்தனை நாட்களுக்குக் கிடைக்கும்?**

**பதில் :** அது மரம் ஏறும் தொழிலாளர்களின் பயிற்சியைப் பொறுத்தே அமையும். நன்கு பயிற்சி பெற்ற ஒருவர் ஒரு பாளையில் 90 நாட்கள் வரை கூட நீராவைப் பெறுவார். பயிற்சி இல்லாதவர் பாளையைச் சீவுவதில் 15–30 நாட்களில்கூட முடிந்துவிடும் வாய்ப்புள்ளது. எனவே, மரம் ஏறி நீரா இறக்குபவருக்கு முறையான, தரமான பயிற்சி தேவை. பொதுவாக 60 – 65 நாட்களிலிருந்து 90 நாட்கள் வரை ஒரு பாளை பயன்தரும்.

**கேள்வி : இந்தியாவில் எந்தெந்த மாநிலங்களில் நீரா உற்பத்தி செய்யப்படுகிறது?**

**பதில் :** கேரளாவில் உற்பத்தி செய்கின்றனர். கர்நாடகத்தில் சிறிதளவு செய்கின்றனர். தமிழகத்திலும், ஆந்திராவிலும் செய்யப்பட உள்ளது. எல்லாவற்றிற்கும் உகந்த சூழ்நிலை தமிழகத்தில் தான் உள்ளது. கேரளாவில் ஆட்கள் பற்றாக்குறை உள்ளது. மரங்களும் மிக உயரமானவையாக உள்ளன. தமிழகத்தில் மரங்கள் அவ்வளவு உயரமில்லை.

**கேள்வி : நீராவிற்கு விற்பனை வாய்ப்புகள் எப்படி உள்ளன?**

**பதில் :** விற்பனைக்கு உள்ளூர்ச் சந்தையை மட்டும் நம்பியிருக்க முடியாது. மதிப்புக் கூட்டப்பட்ட பொருள்களைக் கொண்டு வெளிநாட்டுச் சந்தையைப் பார்க்க வேண்டியுள்ளது.


நீரா உற்பத்தி மற்றும்
ஆராய்ச்சி நிலையம்

வருங்காலத்தில் நிறைய உற்பத்தி செய்யப்படும் போது வெளிநாட்டு ஏற்றுமதி அவசியம். இதற்கெனப் பாக்கெட்டுகளில் அடைக்கும் ‘டெட்ரா பேக்’ யூனிட் அமைக்க அரசு உதவி செய்வதாகக் கூறியுள்ளது. பொள்ளாச்சியில் ஒரு ‘டெட்ரா பேக்’ யூனிட் அமைய உள்ளது. அது வந்தால் ஏற்றுமதி வாய்ப்புகள் கிடைக்கும். இப்போதுள்ள தொழில் நுட்பத்தில் ஏற்றுமதி செய்ய முடியாது. குளிர் பதனத்தில்தான் வைத்திருக்க வேண்டியுள்ளது. எனவே, டெட்ரா பேக் வேண்டியுள்ளது.

**கேள்வி : பாக்கெட்டுகளில் அடைத்து வைத்தால் எத்தனை நாட்களுக்குக் கெடாமல் இருக்கும்? அதற்கு ஏதேனும் ரசாயனம் கலக்க வேண்டியிருக்குமா?**

**பதில் :** 6 மாதங்கள் முதல் 9 மாதங்கள் வரை கெடாமல் இருக்கும். சாதாரண வெப்ப நிலையிலேயே வைத்திருக்கலாம். ரசாயனம் ஏதும் கலக்க வேண்டியதில்லை. இயற்கையானதாகவே வைத்திருக்கலாம்.

**கேள்வி : நீரா இறக்கத் தேவையான ஐஸ் பெட்டியை விவசாயி தன் சொந்தச் செலவிலேயே வாங்கிக் கொள்ள வேண்டுமா? அல்லது தென்னை உற்பத்தியாளர் சங்கமோ, அரசோ தருமா?**

**பதில் :** அது பற்றி இன்னும் முடிவு செய்யப்படவில்லை. ஒரு பெட்டியின் விலை சுமார் ரூ. 2 ஆயிரம் ஆகிறது. இதற்கெல்லாம் அரசு மானியம் கேட்டுள்ளோம். அரசு உதவி செய்வதாகக் கூறியிருக்கிறது. வேலும் எங்களுக்கு வேறு என்னென்ன உதவிகள் வேண்டுமென்று அரசிடம் 150 பக்கங்களில் கோரிக்கைகளை விடுத்திருக்கிறோம். அவற்றை அரசு பரிசீலித்து ஆவன செய்யும். அரசு ஆணை வந்தால்தான் அவற்றில் என்னென்ன உதவிகள் கிடைக்கும் என்று தெரியும். மைய அரசின் தென்னை வாரியத்தின் உதவிகளையும் கேட்டிருக்கிறோம்.

**கேள்வி : நீரா உற்பத்தி தொடங்கினால் எத்தனை தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்புக் கிடைக்கும்?**

**பதில் :** ஒரு தென்னை உற்பத்தியாளர் சங்கத்திற்கு மட்டுமே குறைந்தது 150 முதல் 200 பேர்களுக்கு நேரடியான வேலை வாய்ப்புக் கிடைக்கும். மறைமுக வேலைவாய்ப்பும் சேர்த்து சுமார் 250 பேர்களுக்கு வேலைவாய்ப்புக் கிடைக்கும். இந்த அடிப்படையில் சங்கங்கள் மற்றும் உற்பத்தியைப் பொறுத்து வேலை வாய்ப்புகள் அமையும். தமிழகத்தில் சுமார் 50 உற்பத்தி நிறுவனங்கள் அமைய வாய்ப்புள்ளது. அந்த அடிப்படையில் சுமார் 12 ஆயிரத்து 500 பேர்களுக்கு நேரடி மற்றும் மறைமுக வேலைவாய்ப்புகள் கிடைக்கும்.

**கேள்வி : அரசு ஆணை எப்போது வரும்?**

**பதில் :** இன்னும் இரண்டு முதல் மூன்று வாரங்களுக்குள் வந்துவிடும் என எதிர்பார்க்கிறோம்.

நீரா உற்பத்தியை மற்ற தொழில்களைப் போலச் சாதாரணமாகச் செய்துவிட முடியாது. மிக நுணுக்கமாகச் செய்ய வேண்டும். விவசாயிகள் இதை மிகுந்த ஈடுபாட்டுடன் செய்ய வேண்டும். அப்போதுதான் வெற்றிகரமாகச் செய்ய முடியும்'' என்கிறார் திரு. தனபால்.

பேட்டி : **இரா. வேணுகோபாலகிருஷ்ணன்**

# அந்த ஒரு நாளில் அந்த ஒரு கணம்

இது 1942–ஆம் வருடம். பிரயாக் நகரத்தில் சூரியன் வெப்பக் கதிர்களை மெல்லியதாக வீசிக் கொண்டிருந்தாலும், மெல்லியதான குளிர்க் காற்றும் வீசிக் கொண்டிருந்தது. மைதானத்தின் மேல்புறத்தில் ஓர் ஆங்கிலேயப் போர்வீரன் ஒரு முனையிலிருந்து மறுமுனைக்கு நடந்து கொண்டிருந்தான். அவன் இடுப்பில் ஒரு துப்பாக்கி தொங்கிக் கொண்டிருந்தது.



பெரோஸ் காந்தி – இந்திரா காந்தி

துருப்பு வீரர்கள் மைதானத்தின் நான்கு மூலைகளிலும் கூர்வாள்களைக் கையில் ஏந்தி மக்களை நோக்கி உபயோகிக்கத் தயாராக நின்றிருந்தார்கள். மைதானத்தின் மறுபுறத்தில் ஓர் ஆங்கிலேயப் போர்வீரன் மற்றவனைப் போலவே நடந்து கொண்டிருந்தான். நடப்பது என்னவாக இருக்கும் என்று ஊகித்தாலும் என்ன நடக்கப் போகிறது என்று அறியாதவனாக இருந்தான்.

ஆங்கிலேயருக்கு எதிராகத் தீவிரமாகப் போராட்டம் நடந்த காலம். இந்தியாவில் எல்லா இடங்களிலும் ரயில் தண்டவாளங்கள் பெயர்த்தெடுக்கப்பட்டன. நாதம் எழுப்பிய தந்திக் கம்பிகள் அறுக்கப்பட்டன. ரயில்வேயின் தளத்தில் அருகில் நடந்து கொண்டிருந்தாலும் கண்டதும் சுடு என ஆங்கில அரசின் ஆணை பிறந்தது.

அருகிலுள்ள பாலியா மாவட்டத்தில் ஒரு தீவில் ஒரு பள்ளி ஆசிரியர் ஒரு போலீசிடமிருந்து ஆயுதங்களையெல்லாம் அகற்றிவிட்டார். எவ்வித தீவிரமும் இல்லாமல் இருபுறமும் உள்ள பாலங்களைத் தகர்த்துவிட்டார். உடனே ‘‘சகோதர சகோதரிகளே பாருங்கள்! இந்தியா விடுதலை அடைந்தது. நாமும் விடுதலையானோம்’’ என்று முழக்கமிட்டார்.

பிரயாக் என்ற புராதன நகரத்தில் உயர் குலத்தில் தோன்றிய ஓர் இளம் மங்கை ஆங்கில அரசால் பூட்டி சீல் வைக்கப்பட்ட காங்கிரஸ் காரியாலயத்தைத் திறந்து விடவேண்டும் எனத் தீர்மானித்தார். அவர் அஞ்சா நெஞ்சினர். அவர் தலைமுடி வாகு எடுத்த விதமும் கால் விரல் மெட்டியுமே அவரது தீரத்தைக் காட்டுவதாக இருந்தது. காங்கிரஸ் காரியாலயம் அந்தக் காலகட்டத்தில் நமது தற்காலிகக் கோயிலாக விளங்கியது.

அந்த மங்கையின் பெயர் இந்திரா பிரியதர்சினி. பரிவு காட்டும் நிலவினையொத்த முகம். இந்தப் புனிதமான காரியம் நிறைவேறுவதைக் காணப் பிரமாண்டமான கூட்டம் சேர்ந்திருந்தது. இது வெற்றியுடன் நடந்தால் இது ஒரு நிரந்தர நிகழ்வின் நிலையாகவும் அர்ப்பணிப்பாகவும் இருக்கும்.

இந்திராவும் புராதனத்தின் தன்மையாக விளங்குபவர். அவருடைய அப்பாவும் தோற்றப் பொலிவுடன் தீவிர குணம் கொண்டவர். அவருடைய அம்மா இறைபக்தி உடையவர். இந்திரா முந்தைய பிறவியில் கடவுளாக இருந்தவர் என்று மக்கள் நம்பினர். ஏதோ சிறு தவறுதலாக இந்தியா விடுதலையாக மீண்டும் பிறந்தார் என்பது மக்களின் எண்ணமாக இருந்தது.

இந்திராவின் கணவர் பெரோஸ் இளைய வயதினர். மக்கள் மேல் அன்பானவர். அவரும் இந்த மைதானத்தில் இருக்க ஏற்பாடு. ஏதோ ஓர் எல்லை மீறிய சம்பவம் நடைபெறும்போல் இருந்தது. மக்கள் மேல் மலர் மழை பொழியலாம் அல்லது வெடி மழை வீசலாம். கடவுளின் லீலை என்ன என்பது யாருக்கும் தெரியாது.

பெரோஸ் ஒரு நடுத்தர மக்கள் வீட்டில் பிறருடன் கலந்துரையாடலில் ஈடுபட்டிருந்தார். மக்களைத் திரட்டி பாலங்களைத் தகர்ப்பதைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். சிறிது காலத்திற்கு முன்தான் காந்திஜி இந்தத் தடவை இரத்த வெள்ளம் ஓடினாலும் ஆங்கிலேயர் வெளியேற வேண்டும் என்று சேவாகிராமத்தில் சொல்லியிருந்தார். அதன் பிறகுதான் ‘வெள்ளையனே வெளியேறு’ என்ற கோஷத்தை ஆங்கிலேயருக்கும், நமக்கு ‘செய் அல்லது செத்துமடி’ என்பதையும் கூறினார்.

மைதானத்தில் பலதரமான உடைகள் அணிந்து மக்கள் குவிந்திருந்தனர். மக்களின் வெள்ளம் உணர்ச்சி எழும்படி இருந்தது. ஒரு முக்கிய விஷயத்திற்காக அமைதியாகவும் இறுக்கமாகவும் இருந்தனர். எது நடக்குமோ அது நடந்தே தீரும் என்பதே அவர்கள் மனதில் பதிந்திருந்தது. எந்தச் சமயத்திலும் வெடி வீசப்பட்டு மக்கள்



இறக்கக் கூடும். பெண்கள் தங்களை எதுவும் அசைக்காது என்பது போல் அசையாமல் நின்றிருந்தார்கள். நில அதிர்வுதான் அவர்களை அசைக்கும். அஃதன்றி அவர்களை எதுவும் அசைக்காது என்பதே அவர்களின் மனநிலை.

திடீரென மைதானத்தின் நடுவே ஓர் அசைவு ஏற்பட்டது. மக்களின் தலைக்கு மேல் இந்திரா, காங்கிரஸ் கட்டட வாசலுக்கு முன் தோன்றினார். பூமியினடியிலிருந்து பெயர்ந்து வந்தவர் போல் இருந்தது. பெரிய பூட்டு மிகவும் தடிமனான தாழ்ப்பாளில் சிவப்பு முத்திரையுடன் தெரிந்தது. ஆங்கிலேய வீரர்கள் துப்பாக்கிகளுடன் நடந்து கொண்டிருந்தார்கள். காவல் தலைவன் இந்திராவின் பின்னால் எதுவும் நேராததுபோல்



அமைதியாகவும் இளம் சிரிப்புடனும் போய்க் கொண்டிருந்தான்.

இந்திரா திடீரென கண்ணிமைக்கும் நேரத்தில் அன்றைய விதியான செயலை முடித்திட முன் நகர்ந்தார். காவல் தலைவன் அவரது கைகளை இலகுவாகப் பற்றிக் கைது செய்தான். இந்திராவும் பணிந்து காவல் தலைவன் இட்டுச் செல்ல, படிக்கட்டுகளின் பக்கத்தில் நின்றிருந்த கருநிறக் காரை நோக்கி நடந்தார்.

யாரும் நகரவில்லை. எதுவும் பேசவில்லை. ஆங்கிலேயப் போர் வீரர்கள் துப்பாக்கியின் முன் விறைப்பாகவும் கவனமாகவும் நின்றார்கள். போர் வீரர்களின் கனமான துப்பாக்கி இன்னமும் மக்களை நோக்கி இருந்தது. மக்கள் முகத்தில் ஒரு வெரிச்சலான பார்வை. இந்திரா படிக்கட்டில் இறங்கும்போது தீடீரென அறுபது வயது நிரம்பிய ஒரு மாது ஜனங்களைத் தள்ளிக் கொண்டு வந்து இந்திராவின் நெற்றியில் குங்குமத் திலகம் இட்டாள். திலகமிட்ட மாது நமது கனவுகளில் வரும் பாரத மாதா போல் தோன்றியது.

இந்திராதேவி இயல்பாக நடந்து போலீஸ் காரில் ஏறினார். இந்தச் சம்பவத்தின் பின்னும் மைதானத்தில் அமைதி நிலவியது. கார் நகர்ந்து சென்றது. யாவரும் நகரவில்லை. உலகம் மட்டும் தனது அச்சில் சுற்றியது.

ஏதாவது நடந்ததா? ஒன்றும் நடக்கவில்லை. ஒன்றும் நடக்காததுதான் நடந்தது. இந்திராவின் நெற்றியில் இட்ட குங்குமம் அமைதியான மக்களின் முகங்களைப் பார்த்துக் கொண்டிருந்தது.

இந்தச் சம்பவம் இந்திராவின் வாழ்வில் ஒரு சிறப்பு வாய்ந்த சரித்திரச் சம்பவம். எதிர்பார்த்த விபரீதம் நடக்கவில்லை. எல்லாம் அமைதியில் முடிந்தது. இந்திரா அமைதியாக ஏற்றுக்கொண்ட கைது பல்லாயிரக்கணக்கான மக்களின் உயிர்களைக் காப்பாற்றியது.

●

# இம்மாத ராசி பலன்

**"என்ன நடக்கலாம் என்பதை அனுமானிப்பவன் சோதிடன்
என்ன நடக்கும் என்பதைத் தீர்மானிப்பவன் இறைவன்!"**

'ஜோதிடத் திலகம்'
**க. தில்லையம்பலம்**

**1.1.2018 அன்று கோள்கள் நிலை**

| | | | |
|---|---|---|---|
| | | | சந்திரன் |
| | 06.1.2018 – புதன் – தனுசு<br>13.1.2018 – சுக்கிரன் – மகரம்<br>14.1.2018 – சூரியன் – மகரம்<br>16.1.2018 – செவ்.–விருச்சிகம்<br>27.1.2018 – புதன் – மகரம் | | ராகு |
| | | | |
| சுக்கிரன்<br>சூரியன்<br>சனி | புதன் | செவ்வாய்<br>குரு | |

## மேஷம்



**ஆ**டு, மொத்தை, தகர், முல்லை என்று வேறு பெயர் களாலும் அழைக்கப்படும் மேஷ ராசி அன்பர்களே! மாதத்தின் முற்பாதி வரை தடைகள் பல ஏற்படலாம். பலதரப்பட்ட முயற்சிகளால் உங்கள் காரியங்களை நிறை வேற்றிக் கொள்ளலாம். மாதத்தின் பிற்பாதியில் நீண்ட கால எண்ணம் ஒன்று ஈடேற வாய்ப்புண்டு. தொழில் உத்தியோகத் துறைகளில் நன்மை ஏற்படும். பண வரவுகளும் ஏற்படும். 13 தேதி முதல் சுக்கிரன் 10–ஆம் வீட்டில் உலவ இருப்பதா லும், கேது சேர்க்கை ஏற்படுவதாலும் பெண்கள் முகாந்திரமாக உத்தியோகத் துறையில் எதிர்ப்பு கள், குழப்பங்கள் ஒரு சிலருக்கு ஏற்பட வாய்ப் புண்டு.

15–ஆம் தேதி வரை செவ்வாய், குருவுடன் சேர்ந்து 7–ஆம் வீட்டில் உலவுவதால், வீண் வாக்கு வாதம் வீட்டில் நிலவக்கூடும். இருப்பினும் பாதிப்பு எதுவும் ஏற்படாது. புதிய சூழ்நிலைகளுக்கு இந்த ஆண்டு மாறிவிடுவீர்கள் என்பதால் கவலை ஏற்பட ஏதுமில்லை. சுப காரியங்களும் ஈடேறும். 16–ஆம் தேதி முதல் செவ்வாய் 8–ஆம் வீட்டில் உலவ இருப்பதால் வீண் வம்பு தேடி வரலாம். கோபதாபங்களை வெளிப்படுத்த வேண்டாம். 9–இல் சனி, 4–இல் ராகு இருப்பது குடும்பத்தில் உள்ள பெரியோர்களுக்கு ஆகாது.

## ரிஷபம்



**எ**ருது, புல்லம், விடை, பாண்டில் என்று வேறு பெயர் களாலும் அழைக்கப்படும் ரிஷப ராசி அன்பர்களே! இம்மாதம் அவ்வளவு திருப்திகரமானது இல்லை. மாதத்தின் முற்பாதி யில் எதிர்பாராத செலவுகள், நிகழ்வுகள், உடல் நலிவுகள் ஏற்பட வாய்ப்புள்ளது. மாதத்தின் பிற்பாதியில் சுபச்செலவு, காரியத் தடைகள், தூர தேசத்திலிருந்து அசுபச் செய்தி கேள்விப்படுவது முதலிய பலன்கள் ஏற்பட வாய்ப்புள்ளது. 15–ஆம் தேதி வரை செவ்வாய், குரு 6–ஆம் வீட்டில் உலவுவதால் காரம், எண் ணெய் கலந்த உணவுகள், அசைவ உணவுகளைத் தவிர்ப்பது நல்லது.

16–ஆம் தேதி முதல் கணவன், மனைவி உறவுகள் பாதிக்கப்படலாம். சர்ச்சைகள் ஏற்பட லாம். பக்குவமாக நடந்து கொள்ள வேண்டும். குறுகிய பயணங்கள் ஏற்படலாம். அதனால் நன்மையுண்டு. மிகவும் வயதானவர்கள் உடல் நலனில் இந்த ஆண்டு அதிகம் அக்கறை

கொள்வது நல்லது. தொழில் உத்தியோகத் துறைகளில் அத்தியாவசியம் கருதிக் கடன்பட நேரலாம். கேட்ட இடத்தில் கடன் கிடைக்கும். உறவினர்கள் வகையில் சில அதிருப்திகள் ஏற்படலாம். கல்யாணக் காரியங்கள் தடைப்படலாம்.

## மிதுனம்



**ச**ண்டு, யாழ், வீணை, தாரம் என்று வேறு பெயர்களாலும் அழைக்கப்படும் மிதுன ராசி அன்பர்களே! சூரியன் 7, 8– ஆம் இடங்களில் இம்மாதம் உலவுவதால், சஞ்சலம், சலனம், களத்திர வழியில் பிரச்சனைகள், எதிர்பாராத நிகழ்ச்சிகள், எதிர்பாராத செலவுகள் தவிர்க்க இயலாத ஒன்றாகும். குரு, செவ்வாய் 16–ஆம் தேதி முதல் சாதகமாக உலவுவதால், சில எதிர்ப்புகளைச் சமாளித்து விடுவீர்கள். ஏதேனும் கோர்ட்டு வழக்கு விவகாரங்களில் இறங்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டால் 16–ஆம் தேதிக்குப் பின்னர் இறங்கலாம். காலப்போக்கில் வெற்றி கிடைக்கும்.

7–ஆம் வீட்டிலேயே சனி உலவுவதால், சில நேரங்களில் உடல் சோர்வும், மந்த புத்தியும், சோம்பேறித்தனமும் உங்களிடம் காணப்படும். கூட்டாளிகள் விஷயத்தில் கவனம் தேவை. 13–ஆம் தேதி வரை சுக்கிரன் சனியுடன் இணைவு பெற்று உலவுவதால் பிறரது மனைவியரால் சங்கடங்கள் ஏற்படலாம் அல்லது பெண்களால் எதிர்ப்பு ஏற்படலாம். திருமணக் காரியங்கள் மற்றும் பிற சுப காரியங்களில் ஈடுபாடு கொள்ளலாம்.

## கடகம்



**க**த்தரி, நண்டு, அலவன், கொண்டல் என்று வேறு பெயர்களாலும் அழைக்கப்படும் கடகராசி அன்பர்களே! இம்மாதம் முற்பாதியில் தொழில் உத்தியோகத் துறைகளிலும் நல்ல பலன்களை எதிர்பார்க்கலாம். மாதத்தின் பிற்பாதியில் செலவும் குடும்பத்தில் அற்ப மனத்தாங்கலும் வாழ்க்கைத் துணைவரால் பிரச்சனைகளும் ஏற்படலாம். உங்களின் பந்த பாச உணர்வுகளே அவற்றிற்குக் காரணமாக அமையலாம்.

குரு 4–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் குடும்பத்தில் மூத்த உறுப்பினர்களுக்குப் பாதிப்புகள் ஏற்படலாம். தற்போதைய வசிப்பிடத்தை மாற்ற வேண்டிய அவசியம் ஏற்பட்டால் மாற்றிக் கொள்ளலாம் அல்லது வீட்டில் திருத்தங்கள் செய்யலாம். 16–ஆம் தேதி முதல் 5–இல் செவ்வாய் உலவ இருப்பதால் அடிக்கடி உங்கள் எண்ணங்கள், முடிவுகளை மாற்றிக்கொள்வீர்கள். ஸ்திர புத்தி இருக்காது. 6–இல் சனி உலவுவதால் பிற வசதிகளைத் தேடிக்கொள்ளக்கூடிய காலமாகும். சுப காரியங்கள் சற்றுச் சிரமமாகும்.

## சிம்மம்



**அ**ரி, பொன், புலி, சிற்றில் என்று வேறு பெயர்களாலும் அழைக்கப்படும் சிம்ம ராசி அன்பர்களே! இம்மாதத்தின் முற்பாதியில் காரியத்தடைகளும், அரசாங்க உபத்திரவங்களும், புத்திர வகைப் பிரச்சனைகளும் ஏற்பட்டாலும், மாதத்தின் பிற்பாதியில் காரிய வெற்றியும், தொழில், உத்தியோகத் துறைகளில் அனுகூலமும் சன்மார்க்க நெறியில் உள்ளவர்களது தொடர்புகளும் ஏற்படும் வாய்ப்புண்டு. ராகு 12–ஆம் வீட்டில் உலவுவதால் குல தெய்வ வழிபாடு மறைமுக எதிரிகளின் தொந்தரவுகளிலிருந்து விடுபட உதவும்.

5–ஆம் வீட்டில் சனி தொடர்ந்து உலவ இருப்பதால், புத்திர வர்க்கத்தார் பற்றிய கவலை இரண்டு, மூன்று ஆண்டுகள் வரை இருந்து வரும். செவ்வாய் 15–ஆம் தேதி வரை யோகமாக இருப்பதால் தனவந்தர், கௌரவமான மனிதர்கள், புகழ் மிக்கவர்கள், அரசு – அரசியல் பிரமுகர்கள், அதிகாரிகள், சகோதர வர்க்கத்தார் மூலமான நன்மைகள் ஏற்பட வாய்ப்புண்டு. 13–ஆம் தேதி வரை சுக்கிரன் அதிர்ஷ்டகரமான நிகழ்வு ஏற்படக் காரணமாக அமையலாம். திருமணம் முதலிய சுப காரியங்களில் ஜனன ஜாதகத்தை ஆய்வு செய்து இறங்கலாம்.

**செ**ண், சேடி, மாது, தெரிவை என்று வேறு பெயர்களையும் உடைய கன்னி ராசி அன்பர்களே! இம்மாதம் முற்பாதியில் உடல் ஆரோக்கியம் கெடும் வாய்ப்புண்டு. அலைச்சலும் சிலருக்கு ஏற்படும். குடும்பச் செலவுகளும் அதிகரிக்கும். மாதத்தின் பிற்பாதியில் குழப்பம், தடுமாற்றம்,




தடைகள் ஏற்படும் வாய்ப் புண்டு. வாக்கு ஸ்தானத்தில் உலவும் குரு – செவ்வாய் – சுக்கிரன் சில நல்வாய்ப்பு களையும், செல்வத்தையும் கொடுக்க வாய்ப்புள்ளது. இருப்பினும் ஒரு சிலர் குடும்பத் தில் சில பிரச்சனைகளைச் சந்திக்க நேரலாம். வாழ்க்கைத் துணைவர் கோபதாபங்களை வெளிப்படுத்தக்கூடும்.

சிலர் கையூட்டுக் கொடுப்பதாலோ, வாங்குவ தாலோ சங்கடங்களை அடையலாம். அதேபோல் நீங்களும் பேச்சில் நிதானத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். 16–ஆம் தேதி முதல் செவ்வாய் 3–ஆம் வீட்டில் உலவ இருப்பதால் தீய பலன்கள் பின்னர் ஏற்பட வாய்ப்பில்லை. சுப காரிய முயற்சிகள் செய்யலாம். தக்க சமயத்தில் உதவிகள் வந்து சேரும். 4–ஆம் வீட்டில் சனி உலவுவதால் சுய தொழில் செய்வோர் கவனமுடன் செயல்பட வேண்டும்.




**வா**ணிபன், தராசு, நிறை, செட்டி என்னும் மாற்றுப் பெயர்களால் அழைக்கப்படும் துலா ராசி அன்பர்களே! இம் மாதம் மாதத்தின் முற்பாதி வரை சூரியன் அனுகூலமாகக் காணப்படுவதால் தொழில், உத்தியோகத் துறைகளிலும் பொருளாதார விஷயங்களிலும் திருப்திகரமான சூழல் நிலவும். மாதத்தின் பிற்பாதியில் வீண் அலைச்சல், உடல் நலிவு, பெற்றோர்களுக்குச் சுகவீனம் முதலிய பலன்களை அடையலாம். செவ்வாய் மாதத்தின் முற்பாதியில் கலக்கத்தை ஏற்படுத்தக்கூடும்.

மாதத்தின் பிற்பாதியில் உத்தியோகஸ்தர்கள், அரசு அதிகாரிகள், சகோதர வர்க்கத்தார், பூமி தொடர்பான விஷயங்களில் நன்மைகளை ஏற்படுத்தக்கூடும். குரு ராசி மீது உலவுவதால் உங்கள் தலையில் கூடுதலான மின்சக்தி உற்பத்தி யாவதால் பாதிப்புகளை அடைவீர்கள். இயல்புக்கு மாறாகச் செயல்படுவீர்கள். சனி 3–ஆம் வீட்டில் உலவுவதால் முயற்சிகள் பலிதமாகும். வசதிகள் படிப்படியாக உயரும். தன்னம்பிக்கையும், உறுதி யும், தீரமும் கூடும். 10–இல் ராகு உலவுவதால் ல் இடமாற்றம், தொழில் மாற்றம் குறித்த சிந்தனை கள் வரும். ஆனால், மாற்றங்கள் ஏற்படுவது கடினம்.




**க**ழுகு, தேள், தெருக் கால், நீர் என்று வேறு பெயர் களால் அழைக்கப்படும் விருச் சிக ராசி அன்பர்களே! இம் மாதம் சூரியன் ஓரளவு சாதக மாக உலவுவதால் நன்மையான பலன்களை எதிர்பார்க்கலாம். குறிப்பாக மாதத்தின் பிற்பாதி எடுத்த காரியங்களில் வெற்றியையும், தொழில் உத்தியோகத் துறைகளில் ஆதாயத்தையும் கொடுக்கும் வாய்ப்புள்ளது. மாதத்தின் முற்பாதி யில் பணத்தேவை ஏற்படும். இருப்பினும் தேவைக் கேற்பப் பணம் கிடைக்கும். பெற்றோர் வகையில் உறவுகள் சிறப்படையும். கடந்த காலக் கசப் புணர்வுகள் இருப்பின் அவை மறைந்துவிடும்.

15–ஆம் தேதி வரை உத்தியோகஸ்தர்கள், அதிகாரிகள், நிலம், பூமி தொடர்பான நன்மைகள் ஏற்படும். 16–ஆம் தேதி முதல் விரயம், ஞாபக மறதி, தர்மார்த்தக் காரியங்களில் செலவு, பயணங் கள் முதலியவை ஏற்படலாம். வாக்கில் சனி இருப்பதால் பிறரைச் சபிக்க வேண்டாம். விற்கிரய ஆதாயங்கள் சிலருக்குக் கிடைக்கலாம். 9–இல் ராகு உலவுவதால் தொலைதூரத் தொழில் தொடர் புள்ளவர்களுக்கு நன்மை, திருமணம் முதலிய சுப நிகழ்வுகள் ஈடேற வாய்ப்பில்லை.




**வி**ல், அம்பு, கார்முகம், காண்டீபம் என்று மாற்றுப் பெயர்களாலும் அழைக்கப்படும் தனுசு ராசி அன்பர்களே! இம் மாதம் முற்பாதியில் உஷ்ண பீடிதத்தால் உடல் நலிவுகள் ஏற்படும் வாய்ப்புண்டு. தொழில் துறையில் அதிக உடல் உழைப்பு ஏற்படலாம். மாதத்தின் பிற்பாதியில் தொழில், உத்தியோகத் துறைகளில் நன்மை உண் டாகும். சொத்து, சுகம் வாங்குவதால் அல்லது விற்பதால் நன்மை ஏற்படும்.

சிலர் எதிரிகளாலும், நண்பர்களாலும் நன்மை அடைவர். இனிமையான பேச்சாற்றல் மூலம்

காரியங்களை நிறைவேற்றிக் கொள்ளலாம். மாதத்தின் பிற்பாதியில் நிதானமாகச் சிந்தித்து எக்காரியத்தையும் செய்ய வேண்டும். தீயவர் களால் பொருள் விரயம் ஏற்படலாம். மறதியும் ஏற்படலாம். குரு 11–இல் உலவுவதால், சுப நிகழ்வு களில் ஈடுபடலாம். சனி ராசி மீது உலவுவதால் – குறிப்பாக மூல நட்சத்திரக்காரர்கள் பல வகை யிலும் பாதிப்படையக்கூடும். வயதானவர்கள் உடல் நலனில் அக்கறை செலுத்த வேண்டும்.

## மகரம்



**மா**ன்றலை, சுறா, கடல் சிங்கம், முதலை என்று வேறு பெயர்களாலும் அழைக்கப்படும் மகர ராசி அன்பர்களே! இம் மாதம் செலவினங்கள் உண்டு. அலைச்சல், விரயம், அரசாங்க உபத்திரவம் முதலியவை ஏற்பட வாய்ப்புண்டு. மாதத்தின் பிற்பாதியில் சிரசு, ரோகம், மனக்குழப்பம், உஷ்ணரோகம் இவற்றால் சிலர் பாதிப்படைவர். 10–இல் குரு உலவுவதால் தொழில், உத்தியோகம் குறித்துக் குழப்பம் நிலவி வரும். சிலர் தொழில் பயணங்களை மேற்கொள் வர். குரு விரயாதிபதியாவதால் ஒரு சிலர் தொழிலை விட்டுவிட எண்ணம் கொள்வர்.

செவ்வாய், குரு இணைவு பெற்று 15–ஆம் தேதி வரை 10–ஆம் வீட்டில் உலவுவதால் சுப கிரக திசை நடப்பவர்களுக்கு உத்தியோக உயர்வு, பட்டம், பதவி கிடைக்கலாம். 16–ஆம் தேதி முதல் செவ்வாய் 11–ஆம் வீட்டில் உலவுவதால் அதி காரிகள், பிரமுகர்களது நட்பால் நன்மையுண்டு. ஒரு சிலர் பூமி இலாபம் அடைவர் அல்லது சகோதர வர்க்கத்தார் மூலம் நல்ல செய்தி கேள்விப்படுவர். புதிய முயற்சிகள் எதையும் செய்ய வேண்டாம். திருமணம் முதலிய சுப நிகழ்வு கள் அடுத்த ஆண்டு பார்த்துக் கொள்ளலாம்.

## கும்பம்



**க**லசம், குடம், துர்முகன், சாடி என்ற வேறு பெயர்களாலும் அழைக்கப்படும் கும்ப ராசி அன்பர்களே! இம்மாதம் முற்பாதி அனுகூல மானது. தொழில் முன்னேற்றம், தனலாபம், பொருள் வரவு முதலியவை ஏற்படும். பெரியோர் கூட்டுறவால் நன்மை ஏற்படும். ஏற்கனவே வழக்கு விவகாரங்களைச் சந்தித்துக் கொண்டிருப் பவர்கள் வெற்றி காண்பர். செவ்வாய் 9–இல் குருவுடன் தொடர்பு கொண்டு உலவுவ தால் வெளிநாட்டுப் பயணம், வியாபாரத் தொடர்புகளுக்கு நல்லது.

16–ஆம் தேதி முதல் செவ்வாய் 10–ஆம் வீட்டில் உலவ இருப்பதால், அதிகாரம் கூடும். அதேசமயம் தொழில் தலத்தில் கலக்கம் ஏற்படும். 6–இல் ராகு உலவுவதால் வசதி கூடலாம். 12–இல் கேது உலவுவதால் ஒரு சிலருக்கு வரும் காலங்களில் திடீர் ஐஸ்வர்யம் கிட்டலாம். மாதத்தின் முற்பாதியில் புதிய முயற்சி களில் இறங்கலாம். பிற்பாதியில் விரயம், செலவு கள்தான் ஏற்படும். கண்களில் தொல்லைகள் வரலாம். சுப காரியங்களில் இறங்கலாம்.

## மீனம்



**போ**கன், சேல், கெண்டை, மீன், கயல் என்னும் மாற்றுப் பெயர்களாலும் அழைக் கப்படும் மீனராசி அன்பர்களே! இம்மாதம் முற்பாதியில் தொழில் சிறக்கும். தனம் வரவாகும். பெரியோர் சந்திப்பு, தொழில் பயணங்கள் வெற்றி தரும். அரசியல் தொடர்புகள் நன்மை பயக்கும். மாதத்தின் பிற் பாதியில் பொருள் வரவு ஏற்படும். ஞானியர் நட்பு உபதேசம் ஏற்படும். சிலர் நிதி நிறுவனங்களில் கடன் பெறுவர். வழக்கு விவகாரம் வெற்றியாக முடியும்.

15–ஆம் தேதி வரை செவ்வாய் 8–இல் உலவுவதால் கோபதாபங்களை அடக்கிக்கொள்ள வேண்டும். குரு 8–இல் உலவுவதால் வயதானவர் கள் சிறுநீரகக் கோளாறுகள், கல்லடைப்பு, வயிற்று உபாதை முதலியவற்றை அடையலாம். ஆரோக் கியத்தில் கவனம் தேவை. பொருள் முடக்கம், தொழில் முடக்கம் இந்த ஆண்டு பொதுவாக ஏற்பட வாய்ப்புண்டு. பொறுமையுடன் இருந்தால் ஓராண்டுக் காலத்தில் துன்பங்களிலிருந்து விடு படலாம். திருமணக் காரியங்களில் இறங்க வேண் டாம். மாதத்தின் பிற்பாதியில் புதிய முயற்சி செய்ய லாம்.

கட்டுரை

# சீனாவில் 'கழிப்பறைப் புரட்சி'

'உலகக் கழிப்பறை தினம்' சென்ற நவம்பர் மாதம் 19–ஆம் தேதி கொண்டாடப் பட்டது.

காந்திஜி இந்தியாவிற்கு வந்து அவர் பிரபல மான பிறகு, பள்ளிகளில் விருந்தினராக அவரை அழைப்பார்கள். அப்படிப் பள்ளிகளுக்குப் போனால், முதலில் அங்குள்ள வரவேற்பறைக்கு அவர் போக மாட்டாராம். நேராகக் கழிப்பறைக்குத் தான் போவாராம். கழிப்பறை சுத்தமாக இருந்தால், அந்தப் பள்ளியே சுத்தமாகத்தான் இருக்கும் என்பது அவருடைய நம்பிக்கை.

அவருடைய வார்தா ஆசிரமத்தில் கழிப்பிடங் களில் குழிகள் இருக்கும். கழிவினை வெளி யேற்றிய பிறகு குழியில் கொஞ்சம் மண் போட்டு மூட வேண்டும். அது அப்படியே உரமாகிவிடும். இதற்குப் பெயரே வார்தா கக்கூஸ். பிரதமர் மோடிக்கு முன்பே காந்திஜி கழிப்பறைகளைப் பற்றிச் சிந்தித்திருக்கிறார். பிரதமர் மோடியின் முயற்சியால் 'தூய்மை பாரதம்' ஒரு திட்டமாக உருவாகியுள்ளது.

சீன தேசத்தில் கழிப்பறைகள் அதிகமாகவும் இல்லை, இருக்கிற கழிப்பறைகளும் மிக மோசமா கவும் உள்ளன. இது சீனாவினுடைய தீராத பிரச்சனை.

சீன தேசத்திற்குச் சுற்றுலாப்பயணிகளின் வருகை அந்நியச் செலாவணியைச் சம்பாதித்துத் தந்து வருகிறது. அதனால் கழிப்பறைகளை உலகத் தரத்திற்குப் பராமரிக்க வேண்டும் என்று சீன தேசம் பெரிதும் விரும்புகிறது. அவ்வாறு செய்யப்படுமானால், சுற்றுலாப்பயணிகளும் அதிக மாக வருவார்கள்; சுற்றுலாத்துறையின் மூல மாகச் சீனர்களுக்கு அதிக வேலைவாய்ப்பும் ஏற்படும்.

இந்தச் சூழ்நிலையில்தான் இந்தியாவின் 'தூய்மை பாரதம்' திட்டத்தைக் கண்ட சீன அதிபர் ஜீ ஜின்பிங் உற்சாகமடைந்தார். இந்தியா வைப் பார்த்து உற்சாகமடைந்த சீன அதிபர் ஜின்பிங், பிரதமர் மோடியைப் போல, சீனத் தலை நகர் பீஜிங்கில் 'கழிப்பறைப் புரட்சி'யை (Toilet Revolution) மேற்கொண்டார்.

பல்லாண்டுகளுக்கு முன்பு சீனாவில் சன் யாட் சென் கருத்துக்களால் உருவான 'கலாச் சாரப் புரட்சியை' (Cultural Revolution) மா–சே–துங் செய்தார். இப்போது அதிபர் ஜின் பிங் அவர்கள் கழிப்பறைப் புரட்சியைச் செய்யத் தொடங்கியிருக்கிறார்.

சீனாவில் ஸ்மார்ட் போன் பிரபலமாகியுள்ளது. இத்தொலைபேசி, பல்நோக்குப் பயன் தரக் கூடியது. உடனுக்குடன் செய்திகளைப் பரிமாறிக் கொள்வதையும், வங்கிகளில் பணம் செலுத்து வதையும் இப்போதெல்லாம் ஸ்மார்ட் போன் மூலமாகவே செய்யலாம்.

இவ்வாறு ஸ்மார்ட் தொலைபேசியைக் கழிப் பறைப் பராமரிப்பிலும் உபயோகிக்கலாம். இந்த

ஸ்மார்ட் தொலைபேசியை உபயோகித்து, அதற்குரிய செயற்கைக்கோளுடன் தொடர்பு கொண்டு பயன் படுத்தினால், நீங்கள் இருக் கிற இடத்திலிருந்து இரண்டு கி.மீ. சுற்றளவிற்குள் உங் களுக்கு அவசியப்படுகிற கழிப்பறை எங்கே இருக்கிற தென்று எளிதாகத் தெரிந்து விடும்.


காந்திஜி

இதற்குரிய 'ஆப்' (App) கணினி வசதியும் சீனாவில் தொடங்கி வைக்கப் பட்டுள்ளது. 29 மாநிலங்களில் இந்த 'ஆப்' வசதி யின்மூலம் 3 லட்சத்து 30 ஆயிரம் கழிப்பறைகளை உபயோகித்துக் கொள்வதற்கு வாய்ப்பு ஏற்பட் டுள்ளது. இந்தக் குறிப்பிட்ட 'ஆப்' வசதி பல காரியங்களுக்கு உபயோகமாக உள்ளது. பூங்காக் கள், பல்கலைக்கழகங்கள், வணிக மையங்கள், துரித உணவு விடுதிகள் ஆகியவற்றின் இருப் பிடங்களை அறிந்து கொள்வதற்கு இந்த 'ஆப்' வசதி பயன்படுகிறது.

இதே வரிசையில்தான் கழிப்பறைகள் எந்த இடத்தில் இருக்கின்றன என்பதையும் இதன்மூலம் அறிந்துகொள்ள முடியும். இத்தகைய ஒரு பின் னணியைச் சீன அரசு செய்துள்ளபோதிலும் இது போதுமானதாக இல்லை. இன்னும் நிறையக் கழிப்பறைகள் தேவை. அதை அறிந்து கொள்வதற்கான 'ஆப்' வசதியும் தேவை.


மா–சே–துங்

சீன கம்யூனிஸ்டுக் கட்சி யின் மாநாட்டில் கலந்து கொண்டபிறகு வெளியில் வந்த சீன அதிபர் அறிவித்த முதல் கொள்கை, "வறுமையி லிருந்து சீன மக்களை விடு விப்பது" என்பதாகும். இதனையொட்டியே சுத்தமான கழிப்பறை வசதிகளை மக் களுக்குத் தருவதையும் ஒரு புத்துணர்வு நட வடிக்கை என அவர் குறிப்பிட்டுள்ளார்.

சென்ற 10 ஆண்டுகளுக்கு முன்பு சீனாவில் கழிப்பறை வசதிகள் மிக மோசமாக இருந்தன. 2006–இல் தொலைக்காட்சி வர்ணனையாளரான ஒரு பெண் 'மெங் குவாங்மெய்' என்பவர், சீன தேசம் முழுவதையும் ஒரு தர்மசங்கடத்திற்கு உள்ளாக்கினார். சீனாவிலுள்ள கழிப்பறைகளின் படுமோசமான நிலைமைகளையும், பல கழிப்பறை களுக்குக் கதவுகளே இல்லை எனவும் அவர் வெளிப்படையாகவே பேசிவிட்டார்.

பின்னர் 2008–இல் பீஜிங்கில் நடந்த ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டியையொட்டி வெளியிடப்பட்ட அறிவிப்பில், பீஜிங் நகரத்தில் சுற்றுலாப்பயணிகளைக் கவரும் வகையில் நான்கு நட்சத்திரத் தகுதியுள்ள 64 கழிப்பறைகளும், மூன்று நட்சத்திரத் தகுதியுள்ள 197 கழிப்பறை களும், 1 நட்சத்திரத் தகுதியுள்ள 118 கழிப்பறை களும் கட்டப்பட உள்ளதாக அந்த அறிவிப்புத் தெரிவித்தது.

ஆனாலும், சுத்தமான கழிப்பறை சீனாவில் வரப்போவதில்லை என்ற ஒருவிதச் சலிப்புணர்வு தான் எல்லோருக்கும் ஏற்பட்டுள்ளது. நான்காண்டுகளுக்குப் பிறகு பீஜிங் நகரத்தில் உயரதிகாரிகள் ஒரு வழிகாட்டு நெறியை அறிவித் தார்கள். அதன்படி ஒவ்வொரு கழிப்பறையிலும் இரண்டே இரண்டு ஈக்களுக்கு மேல் இருக்கக் கூடாது என்று ஒரு விதி வகுத்தார்கள்.

ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டிகள் நடந்த சமயத்தில் கழிப்பறைப்புரட்சி என்பது அதிகாரப் பூர்வமாக அறிவிக்கப்பட்டது. இதனைப் புரட்சி என்று புரிந்து கொள்வதற்குச் சில தகவல்கள் :

சீனாவில் சில கழிப்பறைகள் முன்மாதிரிக் கழிப்பறைகளாகக் காட்சிப்படுத்தப்பட்டன. அந்த

இப்போது 1 முதல் 58 எண் வரை தரம் பிரித்துக் கழிப்பறைகளைக் கட்ட சீனா திட்டமிட்டுள்ளது. அக் கழிப்பறைகளின் உள்ளே காற்றோட்டம், இசைக்கருவி, கழிப்பறை டிஸ்யூக் காகிதம் ஆகியவையும் அடங்கும். எப்படியோ சீன தேசத்திற்கு இந்தியா தூய கழிப்பறையை அமைப்பதற்கு வழிகாட்டியுள்ளது மெச்சத்தக்கது.

தொழில் துறையில் நாம் சீனாவிற்குப் பின்தங்கியிருந்தாலும் கழிப்பறைத் துறையில் சீனா நமக்குப் பின்தங்கியிருக்கிறது என்று திருப்தியடையலாம். ஆனால், ஓர் எச்சரிக்கை. மக்கள் தொகையைக் கட்டுப் படுத்துவதில் சீனா இப்போது வெற்றி பெற்றுவிட்டது. நமது மக்கள் தொகை 124 கோடி. சீனாவில் 140 கோடி. இன்னும் இரண்டு ஆண்டுகளில் நாம் சீனாவை மிஞ்சி விடுவோம். அப்போது சீன மக்களுக்கான கழிப்பறை இந்தியாவிலுள்ள கழிப்பறைகளைவிட அவர்களுக்குப் போதுமானதாக இருக்கும். நமக்கு எப்படி என்பதை நாம்தான் யூகிக்க வேண்டும்.

அறிவிப்புகளின் சிறப்பு என்னவென்றால், அக் கழிப்பறையில் தொலைக்காட்சிப்பெட்டி, காபி, டீ தயாரிக்கும் எந்திரம், ஏடிஎம் மெஷின் வசதி களும் இருக்கும். இது கழிப்பறையா அல்லது வரவேற்பறையா? என்ற குழப்பமே ஏற்படலாம்.

இவற்றுடன் பீஜிங் நகராட்சி 100 கழிப் பறைகளை வைஃபை (கீவீதிவீ) வசதியோடு உருவாக்கியுள்ளது. இவ்வாறு சீன நகரங்களில் கழிப்பறை வசதிகள் நவீனமாக்கப்பட்டாலும், கிராமப்புறங்களில் அப்படி இல்லை. குறிப்பாக சுற்றுலா இடங்களில் சுத்தமான கழிப்பறைகள் அதிகமாக இல்லை.

உதாரணமாக, சீனாவின் திபெத்தில் லாசாவிலிருந்து கின்சா வரை ஏறக்குறைய 12 ஆயிரம் அடி உயரத்திலுள்ள அப்பகுதியில் மிக மோசமான துர்நாற்றம் வீசும் கழிப்பறைகள்தான் இருக்கின்றன. அங்கேயே சில தேநீர்க்கடைகளும் உள்ளன.

சீனாவின் ‘யுனான்’ பகுதியில் சுற்றுலாப் போகிறவர்கள் சாலைகளுக்கு அப்பால் சென்று


பாரதப் பிரதமர்
நரேந்திர மோடி


சீன அதிபர்
ஜீ ஜின்பிங்

திறந்தவெளியையே இதற்காக உபயோகிக் கிறார்கள்.

ஜின்குவா என்ற செய்தி ஸ்தாபனம் தந்த செய்திக்குறிப்பில், சில கழிப்பறைகளில் தானிய மூட்டைகளும், இன்னும் சில கழிப்பறைகளில் பன்றிகளும் உள்ளன என்பதை வெளிப்படுத் தியது.

இந்தப் பின்னணியில் சீனாவின் தேசியச் சுற்றுலா நிர்வாகம் ஒரு திட்டத்தைத் தந்துள்ளது. அக்டோபர் மாதம் நிறைவடைவதற்கு முன்பு சுற்றுலாப் பயணிகளின் மையங்களிலுள்ள 68 ஆயிரம் கழிப்பறைகளைத் தரம் உயர்த்துவது என்பது அத்திட்டத்தின் ஒரு பகுதி. இதேபோல மேலும் 64 ஆயிரம் கழிப்பறைகளைப் புதிதாகக் கட்டுவதற்கு இரண்டாண்டுத் திட்டத்தையும் கூறி யுள்ளது. சென்ற மூன்றாண்டுகளில் கழிப்பறை களைக் கட்டுவதற்காக மட்டுமே ரூ. 1740 கோடி சீனா செலவழித்திருக்கிறது.”

– ‘தி ஹிந்து’ 3.12.2017





# ஓம் சக்தி

ஆருயிர்களுக்கு எல்லாம் – நான்
அன்புசெயல் வேண்டும்.
– வள்ளலார்

மலர் : 35 ஜனவரி 2018 இதழ் : 12

நிறுவனர் : **நா. மகாலிங்கம்**
ஆசிரியர் & வெளியிடுபவர்: **ம. மாணிக்கம்**

அச்சிடுபவர் :
**த. ராஜ்குமார்**
ருக்மணி ஆப்செட் பிரஸ்,
E-32, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
கோவை – 641 021.

இணையாசிரியர் :
**பெ. சிதம்பரநாதன்**

கதை, கவிதைகளில் வரும் பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

படைப்புகளைச் சுருக்கவோ, திருத்தி அமைக்கவோ ஆசிரியருக்கு உரிமை உண்டு.

**தனிப் பிரதி ரூ.15/-**
**ஆண்டு சந்தா ரூ. 265/-**
**(தீபாவளி மலர் உட்பட)**
**ஆயுள் சந்தா ரூ. 2000/-**
(10 ஆண்டுகள்)

சந்தா தொகையை "SAKTHI SUGARS LTD. A/c OMSAKTHI" என்ற பெயரில் D.D.-யாகவோ அல்லது மணியார்டர் மூலமாகவோ அனுப்ப வேண்டிய முகவரி :
**ஆசிரியர், ஓம் சக்தி**
**69–ஏ, ஆரோக்கியசாமி சாலை (மேற்கு),**
**ஆர்.எஸ்.புரம், கோவை – 641 002**
**போன் : 0422–4322471, 0422–4322423**
வெளியிட்டோர் :
**சக்தி சுகர்ஸ் லிமிடெட்.**

E-mail :
omsakthi-editorial@sakthisugars.com


# கொத்தவரங்காய் உசிலி

**தேவையானவை :**

கொத்தவரங்காய் : 1/4 கிலோ, துவரம்பருப்பு : 100 கிராம், காய்ந்த மிளகாய் : 2, பூண்டு 2 பல், இஞ்சி சிறிய அளவு, கடுகு, உளுத்தம் பருப்பு : 1/4 டீஸ்பூன், பெருங்காயம் ஒரு சிட்டிகை, சமையல் சோடா ஒரு சிட்டிகை, உப்பு : தேவையான அளவு, எண்ணெய் தாளிக்க.

**செய்முறை :**

1. துவரம் பருப்பை 1/4 மணி நேரம் ஊற வைக்கவும். பின் இத்துடன் மிளகாய், பூண்டு, இஞ்சி, பெருங்காயம், உப்பு சேர்த்து மிக்ஸியில் கொர கொரப்பாக அரைக்கவும். இதை இட்லித் தட்டில் வேக வைத்து எடுத்து உதிர்த்துக் கொள்ளவும்.
2. கொத்தவரங்காயைப் பொடிப் பொடியாக நறுக்கிக் கொள்ளவும். வாணலியில் சிறிது எண்ணெய் விட்டு கடுகு, உளுத்தம் பருப்பு போட்டுத் தாளித்து கொத்தவரங்காயைச் சேர்த்துச் சமையல் சோடா போட்டு நன்கு வதக்கவும்.
3. பின்பு அடுப்பை சிம்மில் வைத்து இரண்டு டீஸ்பூன் தண்ணீர் தெளித்து உப்பு போட்டு மூடி வைத்து விடவும்.
4. ஐந்து நிமிடம் கழித்துத் திறந்து, வேக வைத்து உதிர்த்த துவரம் பருப்பையும் கொட்டிக் கிளறி இறக்கவும்.

சுவையான 'கொத்தவரங்காய் உசிலி' தயார். இதைச் சாப்பிட்டால் செரிமானம், சிறுநீரகப் பிரச்சினை, வாயுத்தொல்லை நீங்கும். நீரிழிவு நோயாளிகளுக்கு ஏற்றது.

– **ச. லெட்சுமி**, செங்கோட்டை.

# மத்திய மோடி ஆட்சி பற்றி ஒரு வாசகரின் பார்வை!

இந்துத்துவத்தை முன்னெடுத்துச் செல்ல ஆட்சியதிகாரம் அவசியம். அதற்காக என்ன வேண்டுமானாலும் செய்வோம் என்று திட்ட மிட்டுச் செயல்பட்டு வரும் சங்பரிவாரத்தினரால் வீழ்த்தப்பட்டவர்கள் நடுத்தர மக்கள். இவர்களிடம் நேரடியாக இந்துத்வாவைப் பற்றிப் பேசிப் பேசி ஒன்றும் வேலைக்கு ஆகவில்லை என்பதால் கோஷங்களை மாற்றி லஞ்ச லாவண்யம், வருமான வரிக் குறைப்பு, முன்னேற்றம், வளர்ச்சி, சுத்தம், நேர்மை, வல்லரசு போன்ற கோஷங்களை முன் வைத்து வீழ்த்துகிறார்கள்.

முன்னேற்றம், வளர்ச்சி ஆகியவற்றிற்கான தெளிவான திட்டம் எதுவும் இவர்களிடம் கிடை யாது. திட்டக்கமிஷன் கலைக்கப்பட்டது. அந்த இடத்தில் நிதிஆயோக் வந்தது. எந்த முன் னேற்றமும் காண முடியவில்லை.

ஆண்டுக்கு இரண்டு கோடி வேலைவாய்ப்பு வளர்ச்சி என்று வாக்குறுதி கொடுத்துவிட்டு இருக்கும் வேலைவாய்ப்பும் குறைந்து போனது. கார்ப்பரேட் நிறுவனங்களுக்கு ஊழியம் செய்வதற் காகச் சாதரண நடுத்தர மக்களின் உழைப்பைச் சுரண்டி அவர்களிடம் கொண்டு சேர்த்து வரு கின்றது. அதன் சமீபத்திய நடவடிக்கைதான் FRDI (Financial Resolution and Deposit Insurance) மசோதா. இந்தச் சட்டமானது நடுத்தர மக் களின் அடிவயிற்றில் அடிக்கும் மசோதாவாகும்.

பணமதிப்பு நீக்க நடவடிக்கை மூலமாக முதல் அடி கொடுத்தது, அடுத்தது GST. FRDI மசோதா மூன்றாவது பலத்த அடியாகும்.

வங்கிகளின் செயல்பாட்டை கண்காணித்து முறைப்படுத்துவதற்காக இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது என்று அறிவிக்கப்பட்டிருக் கிறது. கார்ப்பரேட் நிறுவனங்களுக்கு கடன் கொடுத்து வசூல் செய்ய முடியாமல் திவால் ஆகிற நிலையில் இருக்கிற வங்கிகளில் டெபாசிட் செய்தவர்களின் பணத்தை நாமம் போட வழிவகுப்பதே இந்த மசோதா.

இம்மசோதாவின்படி FRA (Financial Resolution Authority) என்றொரு அமைப்பு உரு வாக்கப்படும். இதற்கு மட்டற்ற அதிகாரம் வழங்கப்படும். இதன்மூலம் மூழ்கும் நிலையில் உள்ள வங்கிகளுக்கு அவற்றின் செயல்பாட்டை சீராக்குவதற்காக அரசு நிதியுதவியளிக்கும். இது கூட 2008–ஆம் ஆண்டு நெருக்கடியில் அமெரிக்காவில் பின்பற்றப்பட்ட பொழுது கடுமை யான விமர்சனத்திற்குள்ளானது.

Bail-out எனும் கோட்பாடானது வங்கியில் வாடிக்கையாளர் டெபாசிட் செய்த பணத்தை எடுத்து வங்கியை இயக்குவது. இதை முடிவு செய்யும் அதிகாரம் FRA-க்கு உண்டு. வங்கி சரிவர செயல்படவில்லை என்று பிரச்னை வந்தால் டெபாசிட் தாரர்கள் தங்கள் பணத்தில் 20 சதவீதம் அல்லது 30 சதவீதம் என்று ஒரு குறிப்பிட்ட சத வீதத்தை மட்டும் எடுத்துக் கொள்ள அனுமதிக்கப் படும். மீதி டெபாசிட்தொகை வலுக்கட்டாயமாக வங்கியின் பங்குப் பத்திரங்களாக மாற்றப்படும்.

இந்தப் பங்குப் பத்திரங்கள் பங்குச் சந்தை யில் ஊகவணிக நடவடிக்கைக்கு உள்ளாகி எதா வது ஒரு கார்ப்பரேட் நிறுவனம் சல்லிசாக அனைத்து பங்குகளையும் பெற்றுக் கொண்டு வங்கிகளை தனது கட்டுப்பாட்டிற்கு கொண்டுவர ஏதுவாகும் இந்த நடவடிக்கை.

இதனால், கிடைத்த பங்கை அரைவிலைக்கு விற்று ஏதேனும் கிடைத்தால் போதும் என்று நடுத் தரமக்கள் நஷ்டத்தை குறைக்க முயன்று அவர்கள் டெபாட் செய்த முழுத்தொகையும் கிடைக்காமல் போய்விடும் அபாயம் உள்ளது. ஆக மொத்தத்தில் பணத்தை வங்கியில் முதலீடு செய்து கிடைக்கும் வட்டியில் வாழ்க்கையை நடத்த திட்டமிடும் நடுத் தர வர்க்க மக்களை ஓட்டாண்டிகளாக்கும் மசோதா இது.

பண மதிப்பு நீக்க அறிவிப்பு மொத்தமாக தோற்றுப்போய்விட்டது. இதற்கு மோடிதான் பொறுப்பு ஏற்க வேண்டும். ஓராண்டு ஆகியும் இன்னும் நோட்டுகளை எண்ணி முடிக்கவில்லை. எல்லாக் கருப்புப் பணமும் வெள்ளை ஆக்கபட்டு விட்டன.

அதை போலத்தான் GST விஷயமும். எடுத் தேன் கவிழ்த்தேன் என்று அவசரமாக கொண்டு வந்தார்கள். இப்போது தவிப்பது சிறு வணிகர் களும் வியாபாரிகளும்தான்.

**– எம்.பி. சுதந்திரகுமார்**

சிறுகதை

# வானப்பிரஸ்தம்

கே. நாகராஜன்



'பொண்ணை அழைச்சுண்டு வாங்கோ' – வேம்பு சாஸ்திரிகளின் வெண்கலக்குரல் ஒலித்தது.

மாலையும் கழுத்துமாய் உக்கிராண அறையிலிருந்து வெளியே வரவிருந்த கல்யாணப் பெண் தருமு, 'கொஞ்சம் தலை சுற்றுகிறது, மயக்கம் வரும்போல் இருக்கிறது' என்றாள்.

'ஹோமப்புகையினால் இருக்கும். கொஞ்சம் தண்ணீர் குடி, சரியாயிடும்' என்று கூறிய விசாலத்தின்மேல் சாய்ந்துவிட்டாள் தருமு. கண்கள் மூடிக்கொண்டன. பயந்து நடுநடுங்கிப்போன விசாலம் அவளை அப்படியே மெதுவாக அங்கிருந்த கட்டிலில் படுக்கப்போட்டு விட்டு நெஞ்சு படபடக்க வெளியில் வந்து கூட்டத்தில் கலந்திருந்த அவளது அம்மா நாகத்தை ஜாடையால் அழைத்தாள்.

திடுக்கிட்டுப் பதறிப்போன நாகம், 'தருமுவிற்குக் காட்டமான வாசனைப் புகை நெடி ஒத்துக்காதே, அதான் இருக்கும். என்னவாயிருந்தாலும் ஐயாறப்பா, நீதான் காப்பாத்தணும்' என்றபடி ரூமிற்குள் விரைந்தாள்.

''முகூர்த்தத்திற்கு நாழியாறது, சீக்கிரமாப் பொண்ணை அழைச்சுண்டு வாங்கோ'' இரண்டாவது தடவையாக சாஸ்திரிகள் சத்தம் போட்டுக் கூப்பிட்டார்.

நிலையான வேலை ஒன்றும் கிடையாது. உடம்பு வணங்காது. இங்கே அங்கே சின்னச்சின்ன வேலைகள் செய்து, வாரம் ஒரு முறை வீட்டிற்கு வந்து கொண்டிருந்தவர், கடந்த சில காலமாக எங்கோ காணாமல் போய் விட்டிருந்தார்.

சாப்பாட்டுக்கு வழியில்லாத நாகம், தன் வயது வந்த பெண் தருமுவுடன் தன் அண்ணன் சபேசய்யரின் வீட்டிலேயே பத்துப் பன்னிரெண்டு ஆண்டுகளாக இருந்து வருகிறாள். திருமண வயதைத் தாண்டிக் கொண்டிருந்த தருமுவின் கல்யாணம், அவள் அப்பாவின் காரணமாக ஒரு பிரச்சனையாகவே ஆகி விட்டிருந்தது. தருமுவும் பெரிய அழகில் சேர்த்தி இல்லைதான். மாநிறம். படிப்பு பத்தாம் வகுப்புதான். பாட்டுக் கற்றுக் கொண்டிருந்தாள். வீட்டு வேலைகள் நன்றாகச் செய்வாள். விசாலத்தின் வலது கையாக இருந்து கூடமாட வேலை செய்து கொடுப்பாள். நாகமும் தன் பங்கிற்கு அந்தக் குடும்பத்தோடு இணைந்து அதன் ஓர் அங்கமாகவே ஆகியிருந்தாள். இந்த தருமுவிற்குத்தான் இப்போது கல்யாணம்.

கும்பகோணம் பக்கத்துப் பிள்ளையாண்டான் ஒருவன். எல்.ஐ.சி.யில் வேலை. அப்பா, அம்மாவைச் சின்ன வயசிலேயே இழந்திருந்த அவனை,

**"நீங்கள் கொடுக்கும் மதிப்பிற்கு நான் தகுதியானவனா எனத் தெரியவில்லை. ஆனால், ரொம்பவும் சந்தோஷப்படுகிறேன். பாக்கியசாலி என்றுகூட நினைக்கிறேன்."**

வக்கீல் சபேசய்யரின் வீட்டிலேயே கல்யாணத்திற்கு ஏற்பாடாகியிருந்தது. அந்தக்காலத்துத் தஞ்சாவூர் வீடு. அவரது மனைவி விசாலம்.

சபேசய்யரின் வக்கீல் தொழில் திறமையைத் தாண்டி அவரது நேர்மையும், தயாள குணமும் தஞ்சாவூர் முழுவதும் மிகப் பிரசித்தமாக இருந்தது. மனமொத்த இந்தத் தம்பதியர்க்குக் குழந்தைப்பேறு இல்லை.

இந்தச் சபேசய்யரின் தங்கை நாகத்தின் கணவர் மாத்ருபூதத்திற்கு

தூரத்து உறவினர் – மாமா என்று சொல்லிக் கொள்ளலாம் – வளர்த்து ஆளாக்கினார். 32 வயதுவரை இவனது கல்யாணத்தைப் பற்றியே யோசிக்காமல் இவனுடைய சம்பாத்தியத்தை உபயோகப்படுத்திக் கொண்டு தன் காலத்தைச் சௌகரியமாகப் போக்கிக் கொண்டிருந்தார்.

பெண்ணைப் பார்க்காமலேயே கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதித்த, பெரிய மனதுபடைத்த அந்தச் சாதுப் பிள்ளையாண்டான் விசுவநாதன்

தருமுவின் வரவை எதிர்பார்த்து மணமேடையில் உட்கார்ந்திருந்தான். தனக்குத் தெரிந்த வக்கீல் மூலம் சம்பந்தம் பேசி, நல்ல வரதட்சணையை முன் னரே வாங்கிக்கொண்டுவிட்ட அந்த மாமா, தன் மனைவி சகிதம் வந்திருந்தார்.

இந்தச் சூழ்நிலையில்தான் உக்கிராண அறை யின் வாசலில் நான்கைந்து பேராகக்கூடித் தாழ்ந்த குரலில் பேசிக்கொண்டிருந்தார்கள். தருமுவின் மயக் கம் வெகு நேரமாகியும் தெளியவில்லை.

கொஞ்ச நேரத்திற்குள் விஷயம் எல்லாரையும் எட்டியிருந்தது. ''வேண்டுமென்றே விஷயத்தை மறைத்து, இவளை எப்படியாவது உன் தலையில் கட்டிவிட வேண்டும் என்று திட்டமிட்டுச் செய்திருக் கிறார்கள். எழுந்திருடா விசுவநாதா, இவ இல் லேன்னா என்ன குடியா முழுகிப்போச்சு? ஆயிரம்பேர் நான், நீன்னு போட்டி போட்டுண்டு வருவா'' என்று சொல்லிக்கொண்டே மாப்பிள்ளையின் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு வெளி வாசற்படி வரைக்கும் வந்துவிட்டார் அந்தக் கும்பகோணத்து மாமா. மாமியும் தன் பங்குக்கு வாயில் வந்தபடி யெல்லாம் பேசிவிட்டு வாசலுக்கு வந்து விட்டாள்.

''தயவு செய்து போகாதீர்கள். அவளுக்கு ஒன் றும் இல்லை. கார்த்தாலேந்து ஒண்ணுமே சாப் பிடலை. ஹோமப்புகை அவளுக்கு ஒத்துக்கலை. எல்லாமாச் சேந்து தலை சுற்றிடுத்து. இன்னும் பத்தே நிமிஷத்தில் அடுத்த முகூர்த்தம் இருக்கிறது. அதற் குள் எல்லாம் சரியாகி விடும்'' என்று மாப்பிள்ளை வீட்டாரின் காலில் விழாத குறையாய்க் கெஞ்சிக் கேட்டுக் கொண்டிருந்தார் தருமுவின் பெரிய மாமா.

அவரைப் புறங்கையால் நெட்டித் தள்ளிவிட்டு, ''மானம் ரோஷம் கெட்ட ஜனங்கள் இல்லை நாங்கள். பொய், பித்தலாட்டக்காரன் வீட்டில் கை நனைக்கிற அளவுக்குச் சொரணை விட்டுப் போகலை. பேச வந்துட்டான் பெரிசா'' மாப்பிள்ளை வீட்டு மனுஷன் ஒருவர் குரைத்துவிட்டு இறங்கித் தெருவுக்கே வந்து விட்டார். பின்னாடியே கல்யாணத்திற்கு வந்திருந்த மாப்பிள்ளை வீட்டார் அனைவரும் நடக்கத் தொடங் கினர்.

திக்பிரமை பிடித்தவன் போல் நின்றிருந்த விசுவ நாதனைத் தரதரவென்று வெளியே இழுத்துக் கொண்டு செல்லத் தொடங்கினர். போக மனமில்லா மல் தயங்கித் தயங்கித் திரும்பித் திரும்பிப் பார்த்த வாறே போய்க்கொண்டிருந்த அவனால் ஒன்றும் பேச முடியவில்லை.

கடைசியில் கல்யாணம் நின்றேவிட்டது. கலகல வென்று கல்யாணக்களை கட்டியிருந்த வீட்டை நெஞ்சையடைக்கும் சோகம் கவ்வியது. மெதுவாகச் சொந்தக்காரர்கள் ஒவ்வொருவராக நகரத் தொடங்கினார்கள்.

முகூர்த்த நேரம் தப்பிப் பத்து நிமிடங்களுக்குப் பிறகு மெதுவாகக் கண் விழித்தாள் தருமு. தன்மேல் கவிந்திருந்த முகங்களைக் கண்டு திக்கித்துப் போனாள்.

தருமு மெதுவாக எழுந்தாள். அங்கு நடந்த வற்றைக் கேட்டறிந்தாள். மாலையைக் கழற்றிவிட்டு, புதுப்புடவையைக் களைந்து பழைய புடவை ஒன்றைக் கட்டிக்கொண்டு ஒன்றுமே நடக்காததுபோல் அடுத்த வேலை என்ன எனப் பார்க்கத் தொடங்கினாள். அவ ளது உணர்வுகள் எல்லாம் யாருடனும் பகிரப்படாமலே இதயத்தின் ஆழத்தில் சென்று சிறையடைந்தன.

சபேசய்யருக்கு மாரடைப்பே வந்துவிடும் போலிருந்தது. கூடத்துச் சுவரிலேயே சாய்ந்துவிட் டார். நாகம் ஒரு மூலையில் திக்பிரமை பிடித்தது போல் உட்கார்ந்து விட்டாள்.

நாட்கள் நகர்ந்து கொண்டிருந்தன. சபேசய்யர் வீட்டைச் சோகம் முழுவதுமாக ஆக்கிரமித்துக் கொண்டது. உலை வாயை மூடலாம், ஊர் வாயை? தரக்குறைவான விமர்சனங்கள், உண்மைக்குப் புறம் பான கற்பனைக் கதைகள் இவர்களைச்சுற்றி வளைய மிட்டுக் கொண்டிருந்தன.

யாரும் எதுவும் பேசாமல் கனமான சூழலில் ஒரு வாரம் ஓடி மறைந்தது. திடீரென்று ஒருநாள் காலை நாகம் பெட்டி படுக்கையுடன் கூடத்தில் வந்து நின்றாள். மன்னியையும் கூப்பிட்டாள். ''அண்ணா, நாங்க இந்த ஊரைவிட்டே போய்விடுகிறோம். என் னால் உனக்கு ஏகப்பட்ட சிரமம். அதற்கும் மேலே இந்த அவச்சொல் வேறயா? ஏதாவது பண்ணிப் பிழைச்சுக்கிறோம். நல்லவாளுக்குத்தான் நெறையச் சோதனை வரும். தாங்கிக்கிறோம். அந்தப் பஞ்ச நதீஸ்வரன் ஒரு வழி காமிக்காமல் போவானா? நீ நல்லா க்ஷேமமாயிருக்கணும். என்னென்னைக்கும் ஒன்னையும் விசாலத்தையும் நாங்க மறக்கவே மாட் டோம். என்னமோ, தருமுவுக்குத்தான் கொடுப்பினை இல்லை.''

விசாலமும் சபேசய்யரும் நாகத்தின் கையைப் பிடித்துக்கொண்டு ''போக வேண்டாம்'' என்று எவ் வளவோ சொல்லிப் பார்த்தனர். நாகம் கேட்க வில்லை.

தருமு கொல்லைப்புறத்தில் உலர்த்தியிருந்த தன் புடவையை மடித்துக் கைப்பையினுள் சொருகி னாள். பாட்டு நோட்டையும் சில ஸ்தோத்திரப் புத் தகங்களையும் மறக்காது எடுத்து வைத்துக் கொண்டாள். ''தருமு கல்யாணத்து நகைகள் இந்தப் பையில் இருக்கின்றன. அவசியப்படும். இந்தா, ஜாக்கிரதையாக வைத்துக்கொள்'' என்று கண்ணீர் மல்க, தன் நாத்தனாரின் கையைப் பிடித்துக் கொண்டு அழுது விட்டாள் விசாலம்.

''இருக்கட்டும் மன்னி, அது இங்கேயே இருக் கட்டும். எதாயிருந்தாலும் நாங்கள் உங்களிடம்தான் வருவோம். இந்தக் கலியுகத்திலே எனக்குக் கண்

கண்ட தெய்வம் நீங்களும் அண்ணாவுந்தான். எங்களை ஆசிர்வாதம் பண்ணி அனுப்பி வையுங்கோ'' பொங்கி வந்த அழுகையை அடக்கிக் கொண்டாள் நாகம். சபேசய்யரிடம் சொல்லிக்கொண்டு தர்ம சம்வர்த்தினி என்கிற தருமுவை அழைத்துக் கொண்டு திருவையாற்றிற்குப் போய்விட்டாள்.

விசுவநாதன் நல்லவன்தான். இவனது நல்லத் தனம் எங்கேயோ நசுக்கப்பட்டு விட்டதே. தன்னை விட இந்த விவகாரத்தில் பாதிக்கப்பட்டவள் ஒரு தவறும் செய்யாத அந்தக் கல்யாணப் பெண் தருமு தான் என்ற உணர்வு இவனை வாட்டி வதைத்தது. அவள்மேல் பச்சாதாபம் தோன்றியது.

''என்ன இருந்தாலும் நாம்ப இப்படி நிர்த்தாட் சண்யமாக் கல்யாணத்தை நிறுத்திவிட்டு வந்திருக் கக்கூடாது'' – விசுவநாதன்தான் மூன்று நாட்கள் மௌனத்திற்குப் பிறகு தன் மாமாவிடம் கூறினான். ''அவாதான் சொன்னாளே, அடுத்த முகூர்த்தம் அரை மணிக்குள் வந்துவிடும், கொஞ்சம் பொறுத்துக் கோங்கோன்னு. அவளுக்கு ஒன்றுமே இல்லை, சத்தியமாச் சொல்றோம்னு. ரொம்பப் பாவம் மாமா, அந்தப் பெண். பாவம் அவாத்து மனுஷா. ஒரு பொண் ணோட வாழ்க்கையை நாம புத்திகெட்டு அநியாய மாப் பாழாக்கிட்டோம். ஏன் இப்படி ஆக்ரோஷமா, மூர்க்கத்தனமா நடந்துண்டேள்?''

''ஏண்டா விசுவநாதா, தாலிகூடக் கட்டலை. அதுக்கே அந்தப் பொண்ணுக்கு இவ்வளவு பரிஞ் சுண்டு வரியே, கல்யாணம் ஆகியிருந்தா எங்களை யெல்லாம் தூக்கியே எறிஞ்சிருப்பே போலிருக்கே. அப்படி என்னடா கரிசனம் அந்தப் பொண்ணு மேலே?'' – மாமாவை முந்திக்கொண்டு மாமிதான் பேசினாள். விசுவிற்குத் தெரியாமல் வரதட்சணை யாக வாங்கின ரொக்கம் ஐம்பதாயிரம் ஜாக்கிரதை யாக இருக்கான்னு கார்த்தாலேயும், சாயங்காலமும் பீரோவைத் திறந்து பார்த்து விடுவாள் மாமி.

''அதில்லை விசுவநாதா, வந்து...'' என்று ஆரம் பித்த மாமாவை இடைமறித்த மாமி, ''நீங்க ஒண்ணும் பேசாதேள். அவன் பெரிய மனுஷனாயிட்டான். பழைய விசு இல்லை. அம்மா, அப்பா இல்லாத மருமானை நாம்ப வளர்த்ததெல்லாம் மறந்தே போயி டுத்து. இத்தனை வருஷமாச் சாப்பாடு போட்டுண்டு இருக்கிற நம்பளைவிட, அவனுக்குப் பொண் ணாத்துக்காரா முக்கியமாப் போயிட்டா. நீங்க போய் உங்க வேலையைப் பாருங்கோ. இனிமேலாவது வெளுத்ததெல்லாம் பால்ன்னு நம்பிண்டு இருக்கா தீங்கோ'' – மாமி கொட்டித் தள்ளிவிட்டு விசுக் கென்று அடுக்களைக்குள் சென்று விட்டாள்.

தனித்து நின்ற விசு, தன் அறைக்குள் சென்று கட்டிலில் சாய்ந்தவாறு பழைய நினைவுகளில் ஆழ்ந்து போனான்.

சிறிது நேரத்திற்குப் பிறகு ஆழ்ந்த நினைவு களினின்று மீண்ட விசுவின் கண்களில் நீர் ததும்பி யிருந்தது. ஓர் உறுதியான தீர்மானத்திற்கு வந்தான் விசுவநாதன். அடுத்தநாள் ஆபீஸ் வேலை என்று சொல்லிவிட்டுத் தஞ்சாவூருக்குப் புறப்பட்டுச் சென்றான்.

பேருந்திலிருந்து இறங்கி, கீழ வீதியின் முனைக் கடையில் நின்று பூ, பழம் வாங்கிக்கொண்டிருந்தான் விசு.

''நீ, விசுவநாதன்தானே, அந்தக் கும்ப கோணத்து எல்.ஐ.சி. மாப்பிள்ளை, என்ன, அந்தக் கல்யாணப்பொண்ணு இருக்காளா, போயிட்டா ளான்னு பாக்கறதுக்கு வந்தியா? அந்த அளவுக்கு மனிதாபிமானம் இருந்தா, அன்னிக்கு அப்படிப் போயிருக்க மாட்டேளே. காலத்துக்கும் அழியாத ஒரு பொய்யான அபவாதத்தை அந்த உத்தமி தருமு பேரிலே சுமத்திட்டுப்போன நீயெல்லாம் ஒரு மனுஷ ஜன்மமா? ஒங்க வீட்டுப் பெரிய மனுஷாள்தான் புத்தி கெட்டுக் கல்யாணத்தை நிறுத்தினான்னா, படிச்ச ஒனக்கு எங்க போச்சு சுயபுத்தி... இப்ப எதுக்கு இங்க வந்தே?''

ஏதோ சொல்ல வாயெடுத்த விஸ்வநாதனைப் பேசவிடாமல் நெட்டித் தள்ளியவாறே வந்த தருமு வின் பெரிய மாமா, இவனைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளாத குறையாக விரட்டியடித்து விட்டார்.

வாங்கின பழத்தையும், பூவையும் கடையிலேயே விட்டுவிட்டுக் கும்பகோணத்திற்குத் திரும்ப பஸ் ஏறினான். திரும்பி வந்த ஒரு வாரத்திற்குள் வடக்கே வெளியூருக்கு மாற்றல் வாங்கிக்கொண்டு மாமா, மாமியை விட்டுவிட்டுச் சென்று விட்டான்.

**நா**கம் தன் மகள் தருமுவுடன் திருவையாற் றுக்கு வந்து ஐந்தாறு வருடங்கள் ஓடிவிட்டன. முன் பெல்லாம் அடிக்கடி திருவையாற்றுக்கு வந்து போய்க் கொண்டிருந்த விசாலம், சபேசய்யர் தம்பதிகளுக்கும் உடம்பு முடியவில்லை. வந்துபோகும் ஆட்கள் மூலம் தகவல் பரிமாற்றம் நடந்து கொண்டிருந்தது.

வயதின் சுமை ஏறிக்கொண்டே இருந்தது. தனக்கு விவாகம் என்பதைப் பற்றியே தருமு மறந்து போய்விட்டிருந்தாள்.

நாகத்திற்குத் தள்ளாமை வந்துவிட்டது. மக ளின் கல்யாண நிகழ்வுகள் அவளைக் கடுமையாகப் பாதித்ததோடன்றி, தன் காலத்திற்குப்பின் தருமுவின் கதி என்னவாகுமோ என்ற கவலையில் அவளது நடை, உடை பேச்சு எல்லாம் சோர்ந்து போய்விட்டன.

கோவிலுக்கும் தியாகராஜர் சமாதிக்கும் வருப வர்களுக்குச் சமைத்துப் போட்டும், தங்க இடவசதி கொடுத்தும் அவர்கள் ஜீவனம் நடந்து கொண்டி ருந்தது.

காவிரிக்கரையை ஒட்டினாற்போல, தென்னந் தோப்புக்கு நடுவில் ஓட்டு வீடு. பழைய வீட்டின்

இரண்டு மூன்று அறைகளைச் சரி செய்து வசதிகளை ஏற்படுத்தி வைத்திருந்தார்கள். அக்கம் பக்கத்தவர்கள் குடியானவர்கள். மிகவும் பாசமானவர்கள். 'நாகம் அத்தை' என்று ஆசையோடு அழைப்பார்கள். இரண்டு வீடு தள்ளியிருந்த வேலனின் மனைவி லட்சுமியும், தெருக்கோடி வீட்டுப்பெண் சாந்தியும் தருமுவின் தொழிலில் அவளுக்கு உறுதுணையாக இருந்தனர். உற்சவ காலங்களில் ஏகக்கூட்டம். கூலிக்கு ஆள் அமர்த்திச் சமையல் சாப்பாடு நடக்கும். தருமு சமையலின் புகழ் திருவையாற்றைத் தாண்டித் தஞ்சாவூர் வரை எட்டியிருந்தது.

இந்த வருட தியாகராஜ ஆராதனை முடிந்து நாலு நாளாகியும் கூட்டம் குறையவே இல்லை. காவிரி ஸ்நானம், தர்ம சம்வர்த்தினி – பஞ்சநதீஸ்வரன் தரிசனம் மற்றும் தருமுவின் சமையல். கூட்டம் இருந்துகொண்டே இருந்தது.

நாகத்திற்கு முடியவே இல்லை. இழுத்துப் பிடித்துக்கொண்டே இத்தனை நாள் ஓட்டி விட்டாள். அன்றைக்கு மிகவும் அலுப்பாக இருந்தது. கூட்டமும் குறைந்து ஒன்றிரண்டு பேர்தான் இருந்தார்கள்.

"இனிமேல் என்னால் முடியாதும்மா" என்றவாறே நாகம் திண்ணையில் சாய்ந்து உட்கார்ந்தாள். தருமு ஓடி வந்தாள். "என்னம்மா பண்றது ஒனக்கு? இனிமேல் நமக்கு ஓய்வுதான். உற்சவம் எல்லாம் முடிந்தாய் விட்டது. நீ பேசாமல் படுத்துக்கோ. நான் போய் டாக்டரைக் கூட்டிண்டு வரேன்" என்றாள். "அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம். கொஞ்சம் தூங்கினாச் சரியாப் போயிடும். நீ போய்ச் சாப்பிடு." நாகத்தைக் கைத்தாங்கலாக அழைத்துச் சென்று படுக்க வைத்தாள் தருமு.

கவலையோ, நிம்மதியோ அல்லது உடல் அசதியோ ஏதோ காரணம். காலையில் நாகம் எழுந்திருக்கவில்லை. தூக்கத்திலேயே அவள் உயிர் பிரிந்து விட்டிருந்தது. அக்கம்பக்கத்துக் குடியானவ ஜனங்கள்தான் வந்து உதவினார்கள். சபேசய்யர் தள்ளாத வயதிலும் விசாலத்துடன் வந்திருந்து தருமுவுக்கு ஆறுதல் கூறிச் சென்றார்கள். தன்னந்தனி ஆளாய் நின்று விட்டாள் தருமு.

தங்களோடு வந்துவிடும்படி அழைத்த உறவுக்காரர்களுக்கெல்லாம் நன்றி கூறி மறுத்து விட்டாள். வேறு யோசனை எதுவுமின்றி, தன் கையே தனக்கு உதவி என்று தனக்குத் தெரிந்த சமையல் தொழிலையே தொடர்ந்து செய்ய நிச்சயித்து விட்டாள். தேவையான வருமானமும் வந்து கொண்டிருந்தது. நாகம் மறைந்து இரண்டு ஆராதனையும் கடந்து விட்டது.

தருமு அன்றும் வழக்கம்போல் விடியற்காலையிலேயே காவிரியில் குளித்துவிட்டுத் தன்னுடைய சிறிய பூசையை முடித்துக்கொண்டு கோவிலுக்குப் புறப்பட்டு விட்டாள்.

காவிரியில் நீர் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருக்கும் ரம்யமான சூழலையும், தருமுவின் தஞ்சாவூர்ச் சமையலையும் அனுபவிப்பதற்காகவே ஆண்டுதோறும் ஒரு வாரம் இவர்கள் வீட்டிலேயே தங்கியிருக்க வரும் வாடிக்கையாளர்களும் உண்டு.

கோவிலிலிருந்து வீடு திரும்பிய தருமு, தன் வீட்டு வாசலில் ஒரு நடுத்தர வயதுக்காரர் தோளில் தொங்கிய டிராவல்பேக் உடன் நின்று கொண்டிருந்ததைக் கவனித்தாள். பக்கத்து வீட்டுக் குடியானவர்கள் அவரிடம் பேசிக் கொண்டிருந்தனர். "அம்மா, உங்களைத் தேடித்தான் வந்திருக்கார். என்ன வேணும்னு கேட்டுக்கங்கம்மா" பக்கத்து வீட்டுக்காரர் சொல்லிவிட்டுப் போனார்.

"வாங்கோ, உள்ளே வாங்கோ" – உபசாரத்தில் காவிரி மண்ணின் மணம் இருந்தது. தன் முகத்தைக் கூடப் பார்க்காமல் உள்ளே வரச்சொல்லி உபசரித்த தருமுவை, விஸ்வநாதன் எட்டு வருடங்களுக்குப் பிறகு இப்போதுதான் பார்க்கிறான். அதே சாந்தமான முகம். மனதில் ஆழமாகப் பதிந்து விட்டிருந்தது. சென்றோடிய வருடங்கள் இவளை ஒன்றும் பாதிக்கவில்லை.

"உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டவாறே அவனுக்குக் குடிக்கத் தண்ணீர் கொண்டு வந்தாள் தருமு. 'இவளுக்குத் தான் யார் என்று தெரிந்து விட்டதா, தெரியவேயில்லையா?' இவனது மனம் உழலத் தொடங்கியது. எப்படியிருந்தாலும் இப்போதைக்குப் பழையதை ஒன்றும் கிளற வேண்டாம் என உள் மனம் அறிவுறுத்தியது.

"நான் நான்கைந்து நாட்களுக்குத் தங்க இடமும் சாப்பாடும் வேண்டும். கோயில், தியாகையர் சமாதி தரிசனம் செய்ய வேண்டும். ஊரைச் சுற்றிப் பார்க்க வேண்டும். விசாரித்ததில் எல்லாரும் உங்களைத்தான் சொன்னார்கள். உங்களுக்குச் சிரமம்..." என்று சொல்லி நிறுத்தினான். "இதோ இந்த ஹாலை ஒட்டியுள்ள இரண்டாவது ரூமில் நீங்கள் தங்கிக்கொள்ளலாம். சாப்பாடு பதினோரு மணிக்குத் தயாராகிவிடும். இப்போ காப்பி கொண்டு வரேன்." தருமு தலை நிமிராமல் சொல்லிவிட்டு உள்ளே போய்விட்டாள். சேரில் சிலையாய் அமர்ந்திருந்தான் விசுவநாதன்.

அடுக்களையுள் சென்ற தருமுவிற்குக் காரியத்தில் மனம் ஒட்டவில்லை. 'வந்திருக்கும் இவர் யார்? யாரோ தெரிந்த மாதிரி இருக்கு. அடையாளம் சொல்லத் தெரியவில்லை. தூரத்துச் சொந்தமா, தஞ்சாவூரைச் சேர்ந்தவாளா, தியாகராஜ ஆராதனைக்கு வரும் சங்கீத வித்வான் யாராவதா, சரியாகப் பிடிபடவில்லை. நல்லவர் போல்தான் தோன்றுகிறது. நமக்கு ஒன்றும் சிரமம் கிடையாது' என்று மனதைச் சமாதானப்படுத்திக் கொண்டு வேலையில் ஆழ்ந்தாள்.

அந்தக் கிராமத்துச் சூழ்நிலை விசுவநாதனுக்கு மிகவும் பிடித்துப் போய்விட்டது. விடியற்காலை காவிரியில் குளியல். விசுவிற்குச் சுகானுபவமாய் இருந்தது. சுடச்சுடக் கும்பகோணம் டிகிரி காபி. பிறகு ஐயாறப்பன் கோவில். தர்ம சம்வர்த்தினி தரிசனம். தெய்வீகமான சூழ்நிலை. பிறகு தியாக ராஜர் சமாதியின் அமைதி தவழும் சூழலில் சிறிது நேரம் தியானம். திரும்பி வந்தால் ஆவி பறக்கும் டிபன். கிராமத்தைச் சுற்றி ஒரு நடை. மதியம் சுவையான பாரம்பரிய தஞ்சாவூர் சமையல். சிறிது நேரம் ஓய்வு. மாலையில் மறுபடியும் கோவில்.

கோவிலில் சித்திரைத் திருவிழாவுக்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. மூன்று நாட்கள் ஓடி விட்டன.

''எல்லாம் சௌகரியமா இருக்கா?'' என்று ஓரிரு வார்த்தையில் கேட்டு விட்டுச் சென்றுவிடும் தருமு வும் அதிகமாகக் கண்ணில் படவில்லை. அங்கிருந்த உதவியாட்கள் இவனைக் கனிவாகவும் மரியாதையுடனும் கவனித்து உபசரித்தார்கள்.

'காலையில் எழுந்தவுடன் எப்படியாவது தருமு வைப் பார்த்து, தான் யாரென்றும், எதற்காக வந்திருக் கிறேன் என்றும் சொல்லிவிட வேண்டும். பிறகு பகவான் விட்ட வழி' என்று நிச்சயித்துக்கொண்டு விசுவநாதன் உறங்கிவிட்டான்.

குளிக்கும்போதும், சமையல் செய்யும்போதும், சுற்று வேலைகளில் ஈடுபட்டிருக்கும்போதும், கோவிலுக்கு அபிஷேகத் தீர்த்தம் கொண்டுபோய்ச் சேர்க்கும்போதும், பிரகாரத்தைச் சுற்றி வரும்போதும் தருமுவின் மனதில் ஓர் ஓரத்தில் நின்று அரித்துக் கொண்டே இருந்தது – இவர் யார்? தன்னைப்பற்றி அதிகம் சொல்லிக்கொள்ள அவரும் அதிகம் முயற்சிக்கவில்லை, இவளும் கேட்கவில்லை. ஆழ்ந்த மனம், அமைதியான நோக்கு, பதட்டமில்லாப் பேச்சு, அளவான சிரிப்பு, உள்ளொன்றும் புறமொன்றும் வைக்காத பண்பு என்று பார்த்தாலே தெரிந்துவிடும் அளவிற்குப் பணிவு, நல்ல நாகரிகம், நன்கு படித் தவர்க்குண்டான பண்பாடு – தெரிந்தாற்போல் இருக் கிறதே. ஆனாலும் சரியாகத் தெரியவில்லையே...!

தங்கள் 'அக்கா' தருமுவின் நடவடிக்கையில் ஏற்பட்டுள்ள மாறுதல் அவளுக்கு உதவியாய் இருக் கும் லட்சுமி – சாந்தி இருவரின் கவனத்தை ஈர்த்தது. எப்போதும் கலகலப்புடனும் உற்சாகத்துடனும் இருக்கும் இந்த அக்காவிற்கு என்ன ஆயிற்று? இரண்டு மூன்று நாட்களாகத் தன் நினைவே இல்லாமல் ஏதோ யோசனையில் ஆழ்ந்திருப்பதுபோல் அவர்களுக்குத் தோன்றியது. தங்களோடு பகிர்ந்து கொள்ள முடியாத அந்த விஷயம் என்னவென்று கேட்க அவர்கள் துணியவில்லை.

''தருமு, வர வெள்ளிக்கிழமை நந்திதேவருக்குத் திருமழபாடியிலே கல்யாணம். ஏற்பாடெல்லாம் பலமா இருக்கு. நந்தி கல்யாணத்தைத் தரிசிக்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டுமாம். நாம்ப சேர்ந்து போகலாம்'' எதிரில் வந்த சாரதா மாமி சொல்லிவிட்டுப் போனாள்.

தருமுவின் மனதில் ஓடிக்கொண்டிருந்த நந்தி கல்யாணத்தைப் பற்றிய எண்ண ஓட்டத்தில் ஒரு சுழல். ஏனோ திடீரென்று தனது கல்யாணம் – அதுதான் நடைபெறாமல் நின்றுபோன தன் கல்யாண நிகழ்ச்சிகள் மனதில் திரையோடின. மாலை மாற்றி நமஸ்காரம் செய்து, கூறைப்புடவை வாங்கிக் கொண்டது வரையிலான நிகழ்வுகள் இவளுக்குத் தெளிவாக மனதில் வரத்தொடங்கின.

அப்படியே கிணற்றடியில் தோய்க்கிற கல்லின் மேல் உட்கார்ந்து கொண்டாள் தருமு. அப்புறம் என்ன ஆயிற்று? நினைவைக் கசக்கிப் பிழிந்தாள். உக்கிராண அறையில் தனக்கு மயக்கம் வந்தது, பிறகு விழித்துப் பார்த்தால் எங்கும் அமைதி. தணிந்த குரலில் பேச்சுச் சத்தங்கள். போட்டது போட்டபடி கல்யாணவீடு களேபரமாயிருந்தது. மாப் பிள்ளை வீட்டார் போய்விட்டிருந்தார்கள். உருண் டோடிய வருடங்களைத் தாண்டி, காசி யாத்திரையின் போதும், மாலை மாற்றும்போதும் பார்த்த அந்த மாப்பிள்ளையின் முகம் சடாரென்று முன்னே வந்து நின்றது.

மின்னல்போல் தோன்றிய அந்த முகம் – பொறி தட்டியது தருமுவிற்கு. ஒரே நொடியில் அவளுடைய புதிர்களுக்கெல்லாம் விடை கிடைத்துவிட்டது. அவரேதான். சந்தேகமில்லை. சென்றோடிய வருடங் கள் கூட்டிய வயது, அதிகமான மாற்றத்தை உண் டாக்கி விடவில்லை. கவிந்திருந்த கருமேகங்கள் கலைந்து நிர்மலமான ஆகாயம் தோன்றியது போலி ருந்தது தருமுவிற்கு.

''நீங்கள் கும்பகோணத்து மாப்பிள்ளை எல்.ஐ.சி. விசுவநாதன்தானே?''

தனது அறையில் கட்டிலில் சாய்ந்தவாறு புத்தகம் படித்துக் கொண்டிருந்த விசுவிற்குத் தூக்கி வாரிப் போட்டது. பாதி திறந்திருந்த அறை வாசலில் கதவையொட்டி நின்றிருந்த தருமுவின் இந்தக் கேள்வி அவனைத் திகைப்பில் ஆழ்த்தியது.

கட்டிலினின்று சடாரென்று எழுந்து நின்ற அவன், ''ஆமாம், அதே விசுவநாதன்தான். என்னை நான் இன்னாரென்று அறிமுகப்படுத்திக் கொள்ளும் தகுதியைக்கூட இழந்துவிட்ட ஒரு ஜன்மமாக நட மாடிக் கொண்டிருக்கிறேன். நமது வாழ்க்கையில் – மன்னிக்கணும் – என்னோட வாழ்க்கையிலே கல்யா ணத்தன்னிக்கு நடந்ததை 'விதி' மேலே பழியைப் போட்டுட்டுத் தப்பிக்க விரும்பலை. என்னுடைய இரக்கமற்ற மனுஷத்தனம், கையாலாகாத்தனம், ஒரு பெண்ணின் வாழ்வையே நாசமாக்கிய மனிதாபிமான மற்ற ஒரு பேடித்தனம் – இவையெல்லாம் என்னை அணு அணுவாக ஒவ்வொரு நிமிடமும் வதைத்துக் கொண்டிருக்கின்றன. என்றாவது ஒரு நாள் உங்

களை நேரில் பார்த்து மன்னிப்புக் கேட்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்தில்தான், தேடியலைந்து இங்கு வந்து சேர்ந்திருக்கிறேன்.

இங்கு வந்தபிறகு இந்த அமைதியான, தெய்வீக மான சூழ்நிலையில் நிம்மதியாக வாழ்ந்து கொண்டி ருக்கும் உங்களது வாழ்க்கையின் கசப்பான நிகழ்வு களை ஏன் நினைவுபடுத்த வேண்டும் என்று தோன்றி விட்டது. அதனால் வந்த வழியே, பேசாமல் திரும்பிச் சென்றுவிட வேண்டும் என்றுதான் நான் நிச்சயித் திருந்தேன். இன்று நீங்கள் என்னை அடையாளம் கண்டுவிட்டீர்கள். என்னை நீங்கள் மன்னிப்பீர் களா?'' விசுவநாதன் கண்களில் கண்ணீர் பெருக் கெடுத்து ஓடியது. கைகள் கூப்பியபடி இருந்தன. கல்லாய்ச் சமைந்து நின்ற தருமு, தன் கண்களில் வழிந்திருந்த கண்ணீரைப் புடவைத் தலைப்பால் துடைத்துக் கொண்டாள்.

''நடந்தது நடந்துவிட்டது. நடக்க வேண்டியது தான் நடக்கவில்லை. எனக்குக் கடவுள் விதித்தது அதுதான். இதில் யாரைச் சொல்லியும் குற்றமில்லை'' நெஞ்சம் நெகிழ, நாத்தழுதழுக்க தருமு கூறினாள். உடனேயே தன்னைச் சமாளித்துக்கொண்டு சுயநிலைக்குத் திரும்பியவாறே, ''ரொம்ப நேரமாகி விட்டது. சாப்பிட வாருங்கள்'' என்று கூறிவிட்டுச் சென்றுவிட்டாள். அன்றைய பொழுது மௌன மாகவே கழிந்துவிட்டது.

இரவு முழுவதும் இவனும் தூங்கவில்லை. அவளுக்கும் தூக்கம் வரவில்லை. வெகுநேர யோச னைக்குப்பிறகு இவன் தூக்கத்தில் ஆழ்ந்தான். அங்கே அவளும் சற்றே கண்ணயர்ந்தாள்.

வழக்கம்போல் காலைக் காப்பியை முடித்துக் கொண்டு கோயிலுக்குப் புறப்பட்டான் விசு. ''கோயி லுக்குத்தானே, நானும் வர்றேன்'' என்றபடி காவிரித் தண்ணீரைக் குடத்தில் சுமந்தவாறே தருமுவும் சேர்ந்து கொண்டாள். சிறிது நேர மௌனத்திற்குப் பிறகு விசுவநாதன்தான் பேச்சைத் தொடங்கினான். கல்யாணத்திற்குப் பிறகு இரண்டு நாட்கள் கழித்து இவர்களைச் சந்திக்க வந்ததையும், இவளது மாமா வழிமறித்துத் திருப்பி அனுப்பிவிட்டதையும், பின்னர் தான் திருமணமே செய்து கொள்ளாமல் வாலன்டரி ரிடையர்மென்ட் வாங்கிக்கொண்டு ஊர் ஊராகச் சுற்றி அலைந்து தருமு இருக்கும் இடத்தை விசாரித் துக்கொண்டு வந்திருப்பதாகவும் சொன்னான். அதற்குள் கோவில் வந்து விட்டது. ''உங்கள் மனம் விசாரப்படும்படி நான் ஏதாவது பேசியிருந்தால் என்னை...'' என்றவனைத் தடுத்து, ''அதெல்லாம் ஒன்றுமில்லை. உரிமையுடன் மனம் விட்டுப்பேசி நீங் கள் உங்கள் பாரத்தை இறக்கி வைத்துவிட்டீர்கள்'' என்றாள். சிறிதுநேர அமைதிக்குப்பிறகு சின்னப் புன்னகையுடன் ''நான் வர்றேன்'' என்று சொல்லி விட்டுத் தருமு சென்றுவிட்டாள்.

தருமுவின் மனம் நிலைகொள்ளவில்லை. 'இவர் இதையெல்லாம் என்னிடம் ஏன் கூற வேண் டும்? தனது குற்ற உணர்வுக்குப் பரிகாரமாக என்னிடம் மன்னிப்பைக் கோரும் இவரது மனதுதான் எவ்வளவு நேர்மையானது, மென்மையானது. தன் இயலாமையினால் நேர்ந்த ஓர் அசம்பாவிதத்திற்குத் தன்னையே வருத்திக்கொள்ளும் இவரது மனம்தான் எத்தனை தூய்மையானது. பெண்மையை உயர்வாகப் போற்றும் கண்ணியம் தவறாத இவரது பண்பு...' தனக்கே தெரியாமல் தன் மனம் இவரால் ஈர்க்கப்படு வதை உணர்ந்தாள் தருமு. அவளையுமறியாமல் அவ ளுக்குள் பயம் கலந்த ஒரு சந்தோஷம் துளிர்விடத் தொடங்கி விட்டது.

ஐயாறப்பன் சன்னதியில் உட்கார்ந்திருந்த விசுவநாதன் யோசனையில் ஆழ்ந்திருந்தான். 'தன் னால் ஓர் இம்மியளவு கஷ்டம்கூட தருமுவுக்கு வந்து விடக்கூடாது. அவளது நிச்சலமான இந்த வாழ்க்கை யில் என்னைப் பற்றியெல்லாம் கூறி ஒரு சுழற்சியை உண்டாக்கி விட்டேனோ? அவளது நிம்மதியைக் குலைத்து விட்டேனோ? அப்படியென்றால் நான் உட னேயே இங்கிருந்து சென்று விடுவதுதான் நல்லது. என்னால் அவள் பட்ட கஷ்டமெல்லாம் போதும். ஒரு வேளை அவள் என்னை மனதார மன்னித்துவிட்டால் மீதமுள்ள நாட்களை அவளுக்கு உதவியாக இங்கேயே கழித்து விடலாமா? தருமுதான் இதை நிச்சயிக்க வேண்டும். இதை எப்படி அவளிடம் சொல்லுவது, அவள் மனதை எப்படி அறிவது?'

''சார், சன்னதிகளை மூடியாகிவிட்டது. நீங்கள்...'' கோவில் பணியாள் குரலைக்கேட்டுச் சுய நினைவுக்கு வந்த விசுவநாதன் மெதுவாக எழுந்து வீட்டை நோக்கி நடக்கத் தொடங்கினான்.

சமையல் செய்து கொண்டிருந்த தருமுவின் மனம் நிலை கொள்ளாமல் தவித்தது. திருமண வயது உணர்ச்சிகளையெல்லாம் தாண்டிய நிலையில் இருக் கும் தனக்கு இப்போது உண்டாகும் மனக் கிளர்ச்சியை என்னவென்று சொல்வது? தனிமை அவளை வருத்தியதில்லை. அதற்கு அவள் நேரம் கொடுத்ததே இல்லை. ஆனால், இப்போது தனக்கு ஒரு துணை. பண்புடன் தன்னை மதிக்கும் ஒரு ஜீவன், எந்தவிதமான எதிர்பார்ப்பும் இல்லாத ஓர் ஆத்மா – எல்லாம் ஒருசேர அமைந்த இந்த விசுவ நாதன். இவரோடு இப்படியே இருந்துவிட்டால் என்ன? உடல் உணர்வுகளுக்கெல்லாம் அப்பால் ஓர் ஆத்மீயமான நேசத்தை இவர் அளிப்பார் என்று அவ ளுக்குத் திடமான நம்பிக்கை உண்டாகி இருந்தது. இன்று இவரிடம் தன் மனதைத் திறந்து சொல்லி விடுவது என்று நிச்சயித்தாள் தருமு.

அரை மணி நேரத்திற்குள் தங்கள் 'அக்கா' வின் செயல்பாட்டில் ஏற்பட்ட மாறுதலைக் கண்டு லட்சுமியும் சாந்தியும் ஆச்சரியப்பட்டுப் போனார்கள். நடையில் ஒரு துள்ளல். உடை அலங்காரத்தில் இது வரை கண்டிராத ஒரு விசேஷ கவனம். டக்கென்று மலர்ந்து விட்ட தாமரைமுகம். நிச்சயம் நல்லது ஒன்று நடக்கப்போகிறது என்று அவர்களுக்குத் தோன் றியது.



“நேரமாச்சு, சாப்பிட வாங்கோ” தருமுவின் குரல் கேட்டு வந்த விசு, அங்கே சமையலறையை ஒட்டிச் சின்ன ரூமில் தரையில் இலைகள் விரித்திருந்ததைக் கண்டு ஆச்சரியப்பட்டுப் போனான். இரண்டு இலைகள். புதுப்புடவை சரசரப்பு. மெல்லிய கொலுசுச்சத்தம், அறை முழுதும் மணக்கும் கதம்ப மணம். திகைப்பில் ஆழ்ந்த விசுவிற்குப் பேசத் தோன்றவில்லை. இலைகளில் பரிமாறிவிட்டுக் கதவோரமாக நின்றிருந்தாள் தருமு.

“முதலில் பாயசம் சாப்பிடுங்கள்.”

“இன்னிக்கு என்ன விசேஷம்?”

“இருக்கிறது விசேஷம்... அப்புறம்தான் தெரியும்.”

தருமுவின் குரலில் இருந்த குதூகலம் அவளது மனம் சந்தோஷத்தால் நிரம்பி வழிகிறது என்பதை எடுத்துக்காட்டியது.

ஆமாம், இந்த இலை...?”

“ஏன், எனக்குத்தான். இதோ நானும் வந்து சேர்ந்து கொள்கிறேன்.”

“நீங்கள் கொடுக்கும் மதிப்பிற்கு நான் தகுதியானவனா எனத் தெரியவில்லை. ஆனால், ரொம்பவும் சந்தோஷப்படுகிறேன். பாக்கியசாலி என்றுகூட நினைக்கிறேன்.”

“நான் ஒன்று சொல்லட்டுமா? கடந்த காலத்தை எண்ணி வருத்தப்படாதீர்கள். நீங்கள் இனிமேல் இங்கேயே இருந்து விடுங்கள் என்னோடு, எனக்காக. இதை நான் உரிமையோடு உங்களிடம் கேட்க முடியும் என்று நினைக்கிறேன். சரிதானே?” தருமு நறுக்குத் தெறித்ததுபோல் ரத்தினச் சுருக்கமாக, மின்னல் வேகத்தில் தனது எண்ணத்தைச் சொல்லி விட்டாள். சாப்பிட்ட கை என்பதைக்கூட மறந்து உணர்ச்சி பொங்க அவள் கையைப் பற்றிக் கொண்டான். அவனது சம்மதம் அவன் முகத்தில் பொங்கி வழிந்தது.

“நாளைக்கு நாம்ப திருமழபாடிக்குப் போகிறோம். அங்கே ஐயாறப்பன் முன்னிலையில் நந்திதேவருக்குக் கல்யாணம். அதைத்தவிர இன்னொரு முக்கியமான வேலையும் இருக்கு. காலையில் சீக்கிரமே கிளம்பணும்” தருமுதான் கூறினாள்.

அடுத்தநாள் திருமழப்பாடி கோவிலில் ஏகக் கூட்டம். சுற்றியுள்ள ஏழெட்டுக் கிராமங்களும் திரண்டு வந்திருந்தன. மேளதாள இன்னிசையோடு வேத மந்திரங்கள் முழங்க நந்திதேவர் திருமாங்கல்ய தாரணத்திற்குத் தயாராக இருந்தபோது, தருமு தன்னருகே இருந்த விசுவின் கையில் ஒரு திருமாங்கல்யத்தைக் கொடுத்தாள். “நந்திதேவர் கிருஹஸ்தாஸ்ரமத்தைத் தொடங்குவோம்”.

தருமு கூறிய சொற்கள் விசுவின் காதுகளில் தேனாகப் பாய்ந்தன. வேத கோஷங்கள் முழங்க, நாதஸ்வர இன்னிசையோடு அவன் தருமுவிற்குத் திருமாங்கல்யம் அணிவித்தான். வெட்கம் கலந்த சந்தோஷத்தோடு தருமு தலை நிமிர்ந்து விசுவைப் பார்த்தாள். சுற்றியிருந்த கூட்டத்தைப் பொருட்படுத்தாது விசுவும் அவளை மெதுவாக அணைத்துக் கொண்டான்.

●

கட்டுரை

குழந்தைகள் நிராகரிக்கப்படுவதும் முதியோர் கைவிடப்படுவதும் நிகழக்கூடாத குரூர சம்பவங்கள். எதார்த்த வாழ்க்கையில் அவை நடந்துவிடக்கூடாது என்பதற்கான எச்சரிக்கையைச் செய்தவர் வள்ளுவப் பேராசான் ஆவார். அதனால் தான் 'நன்றி' – 'உதவி' என்ற இரு சொற்களை கலைச்சொல் நுட்பத்தில்



கொள்வது எக்காலத்திற்கும் குறளைப் பொருத்தப்பாடுள்ளதாகச் செய்யும்.

இதேபோல, 'மகனுக்கு' என்று வள்ளுவர் சொன்னதை 'மகளுக்கும்' என்று கூடுதலாக்கிக் கொள்வதும் வள்ளுவருக்குப் பெருமை செய்வது தான்.

**"தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து / முந்தி யிருப்பச் செயல்"** என்கிற

# தொட்டில் குழந்தைத் திட்டமும் முதியோர் பாதுகாப்புச் சட்டமும்

இரு குறள்களில் அவர் கையாண்டுள்ளார்.

நன்றி – உதவி என்பவற்றை நாம் பொதுத் தளத்திற்கு நகர்த்திக் கொண்டு வந்துவிட்டதால், அவை பிறந்த வீட்டின் பீடினை இழந்து நிற்கின்றன.

நன்றி என்பதைத் தாகத்திற்குத் தண்ணீர் கொடுத்தவனுக்கும்கூடச் சொல்கிறோம். அலுவலகங்களின் விசாரணைப் பிரிவில் உதவி செய்வதற்காகவே நியமிக்கப்பட்டவர்கள் உண்டு. அவர்களுக்கும் நாம் நன்றிதான் சொல்கிறோம். நன்றி என்பதை வள்ளுவர் இவ்வாறு இளைத்துப் போன அர்த்தத்தில் கையாளவில்லை.

தந்தை – மகன் உறவாக நன்றியை அவர் தகவமைத்துள்ளார். தந்தை தனது பிள்ளையைச் சான்றோனாகுமாறு வளர்க்க வேண்டும் என்பதில் தந்தைக்கு எவ்வித விதிவிலக்கும் அவர் தரவில்லை.

பிள்ளைக்குரிய பின்னணியைத் தயார் செய்து தரவேண்டியது தந்தையின் கடமை. இப்படித்தான் வள்ளுவர் காலத்துச் சமுதாயம் வினையாற்றி வந்துள்ளது. தந்தை என்று வள்ளுவர் வரித்துள்ளதைத் தாய்க்கும் விரித்துச் சொற்களில் உள்ள தந்தையுடன் தாயையும் சேர்த்துப் பெற்றோர் எனலாம். மகனையோ, மகளையோ நன்கு திட்டமிட்டு வளர்த்தால்தான், அவர்களின் எதிர்கால வாழ்வு நல்வாழ்வாக அமையும். பிள்ளை வளர்ப்பு என்பது பிள்ளைகளின் சுயசிந்தனைக்கான கல்வியையும், நன்னடத்தைக்கான ஒழுக்கத்தையும் ஆரோக்கியத்திற்கான உணவையும், ஊட்டி வளர்ப்பதுதான்.

இக்கடமையைத்தான் 'தந்தை மகற்காற்றும் நன்றி' என்கிறார். தந்தைக்கான இக்கடமை மகனுக்கு மட்டுமாகப் பேசப்பட்டது அக்காலத்திய மரபு. ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வள்ளுவர் பெய்துள்ள 'நன்றி' எனும் சொல், காலம் செல்லச்செல்ல மெலிந்து போய்விட்டது.

ஓர் ஊரைக் கடந்து வரும்போது 'நன்றி மீண்டும் வருக!' என எழுதப்பட்டுள்ளதைக் காண்கிறோம். பிறந்த நாள் வாழ்த்துக்கு நன்றி என்கிறார்கள்.

ஆனால், வள்ளுவர் இதுபோன்று அன்றாடச் சந்தர்ப்பங்களுக்கான சாதாரண வார்த்தையாக 'நன்றி'யைக் கையாளவில்லை. மகனை உருவாக்குவதற்குத் தந்தையானவர் மேற்கொள்ளும் முயற்சியை வள்ளுவர் கடுந்தவமாகவே

கண்டிருக்கிறார். தந்தை தமது மகனை ஆளுமையுள்ளவனாகத் தயாரிக்கத் தவறிவிட்டால், அப்பிள்ளை தறுதலையாகி விடலாம். இதனைக் கருதியே உரையாசிரியர்கள் நன்றி என்ற வள்ளுவரின் சொல் நீர்த்துப் போனதை உணர்ந்து, அதனைப் புடம்போட்டு அதன் அசலைக் கண்டறிந்துள்ளார்கள்.

'நன்றி' என்ற சொல்லுக்குப் பரிமேலழகர் 'நன்மை' செய்வது என்கிறார். முனைவர் மு.வ. 'நல்லுதவி' என்கிறார். தமிழறிஞர் வ.சுப. மாணிக்கனார் 'கடமை' என்கிறார். வ.உ.சி.–யும் 'கடமை' என்கிறார். தேவநேயப் பாவாணர் 'நன்மை' என்கிறார்

நன்மை, நல்லுதவி, கடமை என்பவற்றில் 'கடமை' என்றால் அதன் கனம் சற்றே கூடுதலாகிறது. காரணம், தந்தையினுடைய முக்கியப் பொறுப்பை அது சுட்டிக் காட்டுகிறது. அப்படிச் சுட்டிக்காட்டினால் தான், பிள்ளைகளின் முன்னேற்றத்திற்குப் தாய் தந்தையர் பொறுப் பாளியாவார்கள். இல்லையெனில் பொறுப்பற்றவர் களாகி விடுவார்கள்.

இக்குறளில் உள்ள 'அவையத்து முந்தியிருப்பச் செயல்' என்பது மகனை முதன்மைப்படுத்துவதற்காகத் தந்தை செய்யும் தீவிர முயற்சியானது உயர்வு நவிற்சியாக உள்ளது. வள்ளுவர் குறிப்பிடுகிற 'அவையம்' அறிவுடையார் சபைதான்.

ஒவ்வொரு தந்தையுமே தன் பிள்ளையை அந்த அறிவுடையார் அவையில் முதலாமவனாகச் செய்யவே ஆசைப்படுவர். எல்லாத் தந்தைகளும் அப்படிச் செய்வாரானால், எல்லா மகன்களுமே முதலானவர்களாகவே விளங்குவர். பண்புடையார் கூட்டத்தினரில் தங்கள் பிள்ளைகளை இடம் செய்யும் உயர்வுதான்.

'நன்றி' என்பதன் மூலம், பிள்ளை வளர்ப்பைக் கட்டளையாகவே தந்தைமார்களுக்கு வள்ளுவர் பிறப்பித்திருக்கிறார். வகுப்பில் ஆசிரியர்கள் தருகிற கல்வி முறையைவிட, வீட்டில் பெற்றோர்கள் செய்யும் வளர்ப்பு முறையே சமூக நேயத்தை வளர்க்கக்கூடியது.

நன்றி என்ற சொல்லை வள்ளுவர் வேறு சில சூழ்நிலைகளிலும் கையாண்டுள்ளதைத் திருக்குறளில் பரவலாக – குறிப்பாக 'செய்நன்றியறிதல்' – அதிகாரத்தில் காணலாம்.



வள்ளுவப் பேராசான் சொல்லுகின்ற ‘செய் நன்றி’, தந்தை மகனுக்குச் செய்கிற நன்றியல்ல. தெரிந்தவர்கள் மத்தியில் பரிமாறிக் கொள்கிற பொது உதவி அது. அந்த உதவியை மறப்பவர் களைச் “செய்நன்றி கொன்றவர்” என்றும், அவருக்கு உய்வில்லை என்றும் சபித்திருக்கிறார்.

மூன்றாம் நபர் செய்த உதவியை மறந்து விடுபவரையே சபிக்கிற வள்ளுவர், தந்தை செய்த உதவியை மறந்து விடுகிற மகனைச் சபிக்காமல் விடுவாரா? அதனால்தான், “நன்றி மறப்பது நன்றன்று” என்றும் கூறியுள்ளார்.

இதேபோல இன்னொரு குறள்,

**“மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன் தந்தை / என்நோற்றான் கொல் எனும் சொல்”**

இக்குறளில் உள்ள ‘உதவி’ என்பது இக் காலத்திய உதவியாக இருக்க முடியாது. பெற்றோ ருக்குப் பிள்ளைகள் செய்ய வேண்டிய உதவி என்பது மூன்றாம் நபர் செய்யும் உதவி அல்ல. இதனைக் கடமை என்றால் இதன் கனம் கூடு கிறது. அந்த உதவியைக் “கைம்மாறு” என்றால் பிள்ளைகள் திருப்பிச் செலுத்தக் கடமைப்பட்டவர் ஆகிறார்கள்.

முதுமைக் காலத்தில் பெற்றோர்களுக்கு நிறைய உதவிகள் அவசியம். பணம் செலுத்தியும் இவ்வுதவிகளைப் பெற முடியும். அதில் அர்ப் பணிப்பில்லை.

அது வேலைக்காரர்களால் சம்பளத்துக்காகச் செய்யும் உதவி. அதன் வாணிபத் தன்மை கவனத்திற்குரியது. இந்த உதவிகளைச் செய்பவர் எவரும், சம்பந்தப்பட்ட வயோதிகரிடமிருந்து எந்தப் பலனையும் பெற்றவர்கள் அல்ல.

இவர்களின் உதவி இரண்டாம் தரமானது. அப்படியானால், அசலான உதவியை, தள்ளாத காலத்தில் பிள்ளைகள்தான் தந்தைக்குத் தர முடியும். காரணம், தந்தையால்தான் அந்த மகன் உருவாக்கப்பட்டவன். வள்ளுவரின் ‘உதவி’ என்ற சொல் தேய்மானமாகியுள்ளதை உணர்த்த உரை யாசிரியர்கள் அதனைக் ‘கைம்மாறு’ என்று காட்டி யுள்ளது சிறப்பானது.

இக்கைம்மாறைப் பிள்ளைகள் செய்யத் தவறுவார்களானால், அப்பெற்றோர்கள் ஆதரவற்ற வர்களாவர். பரிதாபத்திற்குரியவராவர்.

பிள்ளைகள்மீது பெற்றோர் வைக்கிற பாசம் இயல்பானது. ஆனால், பிள்ளைகளின் பாசம் அப்படிப்பட்டது அல்ல. தங்களின் சொந்தப் பிள்ளைகளின்மீது அதிகப்பாசம் இருக்கும். அதே பாசம் அவர்களின் பெற்றோர்களின்மீது இருக் குமா என்பது சந்தேகம்தான். பெற்றோர்களைப் பிள்ளைகள் அலட்சியப்படுத்துவதற்கான உளவியல் காரணம் இதுதான்.

பெற்றோருக்கு இக்கைம்மாறுகளைப் பிசகாமல் செய்கிற நல்ல பிள்ளைகளை “இப் பிள்ளையைப் பெறுவதற்கு இவனுடைய பெற்றோர் என்ன புண்ணியம் செய்தனரோ என்றே எல் லோரும் வியப்பார்கள். கைவிடப்பட்ட பெற்றோர் களைப் பார்த்து, “இவர்கள் என்ன பாவம் செய் தார்களோ” என்றுதான் கூறுவார்கள்.

வள்ளுவர் கையாண்டுள்ள ‘உதவி’ என்ற சொல்லுக்குக் ‘கைம்மாறு’ என்று முதலில் உரை கண்டவர் பரிமேலழகர். மு.வ.வும் ‘கைம்மாறு’ என்கிறார். தேவநேயப்பாவணரும் ‘கைம்மாறு’ என்றே கூறுகிறார். வ.சுப. மாணிக்கனாரும், வ.உ.சி.யும் கைம்மாறுக்கு மாற்று நாணயமாகக் ‘கடமை’ என்கின்றனர்.

இந்த இரு குறள்களில் தந்தை – மகன் உறவை, நன்றி – உதவி என்ற இரு சொற்களின் வழியாக வள்ளுவர் அடர்த்திப் படுத்திக் காட்டி யுள்ளதைத் தற்காலத்துக்குத் தகுந்தாற்போலக் கையாள்வதற்கு, அவற்றை மேலும் விபரப் படுத்திக் கொள்வது தவறாகாது. இதேபோல தந்தை – மகன் என்பதைத் தாய் – மகள் என விரிவாக்கிக் கொள்வதும் வள்ளுவ நெறிக்கு விரோதமாகாது.

“முந்தியிருப்பச் செயல்” என்கிற தொடரை யும் “எந்நோற்றான் கொல்” என்கிற தொடரையும் உயர்வு நவிற்சியாக உணர்வோமானால், அக் குறள்களுக்குள் ஆழ்ந்திருக்கும் கவிஉளத்தையும் அனுபவிக்கலாம்.

ஒரு பாவமும் அறியாத பச்சை மண்ணைப் பெற்ற தாயே குப்பைத் தொட்டியிலோ, பொது இடத்திலோ வீசிவிட்டுச் சென்றதால்தான் நிரா கரிக்கப்பட்ட அக்குழந்தைகளை வளர்க்கத் தொட் டில் குழந்தைத் திட்டத்தை அரசு அமல்

படுத்தியது.

அச்சிசு வீசப்படுவதற்கு அதைத் தாங்கிப்பெற்ற தாய் மட்டும் காரணமல்ல, அக்குழந்தைக்கான தந்தை, அந்தத் தாயையே நிராகரித்திருக்கலாம். இந்தக் கொடூரச் சம்பவங்களைக் கண்டு மனிதநேயமிக்க குரல்கள் எழுந்ததால் தான் அரசு இதற்காகவே இத்திட்டத்தைத் தீட்டிச் செயல்படுத்துகிறது.

இத்தகைய ஊதாரி மனிதர்கள் உலவுகிற ஒரு சமுதாயத்தில், வள்ளுவப் பேராசான் எண்ணியதைப்போல, தந்தை மகனுக்கு ஆற்றும் நன்றி கடைப்பிடிக்கப்படுவதாக எப்படி நம்ப முடியும்?



தோள்மீதும் மார்மீதும் சுமந்து வளர்த்த தாய் தந்தையை அவர்களின் மகனே சரிவரக் கவனிக்காமல் அனாதை இல்லத்திற்கு அனுப்புவது அன்றாடச் சம்பவம்.

தள்ளாத காலத்தில் அம்முதியோர்களுக்கு ஏற்பட்ட இந்தத் துயரத்தைத் தீர்ப்பதற்குக் கடமைப்பட்ட பிள்ளைகள், அவர்களின் சொத்துக்களை அபகரித்துக் கொண்ட புகார்களும் உள்ளன.

முதிய வயதில் பெற்றோர்களை இப்படிக் கைவிடக்கூடிய பாசமற்ற பிள்ளைகள்மீது, அப்பெற்றோர்கள் காவல் நிலையத்தில் புகார் தருவதற்கும், நீதிமன்றத்தில் வழக்குத் தொடுப்பதற்கும் சட்டம் இப்போது சாதகமாக உள்ளது. இச்சட்டம் ஒன்றே போதும், "மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி"யின் அவலட்சணத்தை நாம் அறிந்து கொள்வதற்கு.

நன்றி – உதவி என்ற சொற்கள் வள்ளுவர் காலத்து அர்த்த அடர்த்தியை இழந்து விட்டதற்கு, வள்ளுவரல்ல காரணம். வளர்ப்பு முறைதான் காரணம். அதனால்தான் தொட்டில் குழந்தைத் திட்டமும் முதியோர் பாதுகாப்புச் சட்டங்களும் உருவாகியுள்ளன என்பதை உண்மையென உணர வேண்டும்.

**– ந.நி**




கோவை காமாட்சிபுரி ஆதீனத்தின் நுழைவாயில் ராஜகோபுரம்.

# கோவை காமாட்சிபுரியில் 51 சக்தி பீடத் திருக்கோவில்

## மகா கும்பாபிஷேகம்

கோவை காமாட்சிபுரி ஆதீனம் குருமுதல்வர் ஞானகுரு சிவலிங்கேஸ்வர சுவாமிகள். அவரது 35 ஆண்டுக்கால விடாமுயற்சியால் கோவை – திருச்சி சாலையில் காமாட்சிபுரி என்ற கிராமத்தில் இன்று உலகமே வியந்து போற்றிப் பாராட்டும் 51 சக்தி பீடங்களாகக் கோபுரம் முதல் மண்டபங்கள் வரை அனைத்தும் கருங்கற்களால் திருப்பணி செய்யப்பட்டுள்ளன.

51 அம்மன்களுக்குப் புதிய உருவத் திருமேனிகளின் மகாகும்பாபிடேகம் 1.12.2017 வெள்ளிக்கிழமையன்று காலை 9 மணி முதல் 10.30 மணிக்குள் மிகச்சிறப்பாகத் திருமலைக்கோடி சக்தி அம்மா அவர்கள் தலைமையில் நடைபெற்றது.



தமிழகம் மற்றும் வெளிமாநிலங்களிலிருந்து 108 மடாதிபதிகள் கலந்து கொண்டு சிறப்பித்தனர். அம்மன் முன்பாகத் தாமரைப் பீடத்தில் 51 மகாமேரு எந்திரங்கள் 51 சாதுப் பெருமக்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டன.

24.11.2017 முதல் 1.12.2017 வரை பல்வேறு நிகழ்ச்சிகள் நடைபெற்றன. 29–ஆம் தேதி மாபெரும் சமய வழிபாட்டுப் பேரணியும், 30–ஆம் தேதி ஞான குரு அருளிய 20 நூல்கள் வெளியீட்டு விழாவும் அன்னதானமும் சிறப்பாக நடைபெற்றன.

– ந.நி.



'அம்மா' அவர்களுக்கு ஆதீன வளாகத்திலுள்ள 51 சக்தி பீடங்களைச் சுற்றிக் காண்பிக்க அழைத்துச்சென்ற காட்சி.



அருள்திரு சக்தி அம்மா, சாக்தஸ்ரீ சிவலிங்கேஸ்வர சுவாமிகள் ஆகியோருடன் மெய்யன்பர்கள்.



51 சக்தி பீடங்களின் மகா கும்பாபிஷேகத்தைத் தொடங்கி வைக்க வந்த திருமலைக்கோடி அருள்திரு சக்தி அம்மா அவர்களை வரவேற்றுச் சிறப்பித்த காமாட்சிபுரி ஆதீனம் ஞானகுரு சாக்தஸ்ரீ சிவலிங்கேஸ்வர சுவாமிகள்.

மேடையில் என்.பி.டி. முன்னாள் மாணவர் சங்கத் தலைவர் பாலசுப்பிரமணியம், சக்தி சுகர்ஸ் செயல் தலைவர் டாக்டர் ம. மாணிக்கம், தொழிலதிபர் டாக்டர். ஏ.வி. வரதராஜன், டாக்டர் பி.கே. கிருஷ்ணராஜ் வாணவராயர், டாக்டர் க. குழந்தைவேல் ஆகியோர்.

# கோவையில் அருட்செல்வர் நினைவுச் சொற்பொழிவு விழா!

அருட்செல்வரால் தொடங்கப்பட்ட நாச்சிமுத்து பாலிடெக்னிக் கல்லூரியின் முன்னாள் மாணவர்கள் பலர் பெரும் தொழிலதிபர்களாக உயர்ந்துள்ளனர். அவர்கள் 'நாச்சிமுத்து பாலிடெக்னிக் முன்னாள் மாணவர்கள் சங்கம்' அமைத்துச் செயல்பட்டு வருகின்றனர்.

இந்தச் சங்கத்தின் மூலமாக இப்போது பயிலும் மாணவர்களுக்குக் கல்வி உதவித் தொகையாக ரூ. 1 கோடி அளிக்க முன்வந்து, அதில் முதல் தவணையாக ரூ. 60 லட்சத்தை அளித்துள்ளனர். இதிலிருந்து இக்கல்லூரியில் பயின்ற மாணவர்கள் அடைந்துள்ள உயர் நிலையையும், அதற்கு அடித்தளமிட்ட கல்லூரியின் கல்வித்தரத்தையும் நாம் உணரலாம்.

இந்த முன்னாள் மாணவர் சங்கத்தின் சார்பாக 'அருட்செல்வர் நினைவுச் சொற்பொழிவு' விழா, சென்ற 26.11.2017 அன்று மாலை கோவை பி.எஸ்.ஜி. தொழில்நுட்பக் கல்லூரி அரங்கில் நடைபெற்றது.

கோவை பாரதிய வித்யாபவன் தலைவர் டாக்டர் பி.கே. கிருஷ்ணராஜ் வாணவராயர் தலைமையுரையாற்றினார். சக்தி சுகர்ஸ் செயல் தலைவர் டாக்டர் ம. மாணிக்கம் அவர்கள் முன்னிலையுரையாற்றினார்.

கோவை அவிநாசிலிங்கம் பல்கலைக் கழகத்தின் முன்னாள் வேந்தர் டாக்டர் க. குழந்தைவேல் அவர்கள், அருட்செல்வரின் கல்விப் பணிகள் பற்றியும், கல்விச் சிந்தனைகளைப் பற்றியும் சிறப்பாக எடுத்துரைத்தார்.

தொழிலதிபர் டாக்டர் ஏ.வி. வரதராஜன் அவர்கள், அருட்செல்வரின் தொழில் சிந்தனைகள் பற்றியும் தொழில் துறையில் அவருக்கிருந்த தொலைநோக்குப் பார்வை பற்றியும் சிறப்புரையாற்றினார்.

பேராசிரியர் முனைவர் ஐ.கே. சுப்பிரமணியம் அவர்கள், அருட்செல்வரின் ஆன்மிகப் பணிகள் பற்றியும், இளைய சமுதாயத்திற்கு ஆன்மிகத்தின் தேவை பற்றியும் அருட்செல்வரின் சீரிய எண்ணங்களைப் பற்றிச் சிறப்பாக விளக்கினார்.

இக்கல்லூரியின் முன்னாள் மாணவர் திரு. பாலசுப்பிரமணியம் அவர்கள் சிறந்த தொழிலதிபராக உருவாகித் தொழிற்கல்வி பயிலும் மாணவர்களுக்கு சிறந்த முன்னுதாரணமாக விளங்கி வருகிறார். அவர் முன்னாள் மாணவர் சங்கத்தின் தலைவராக இருந்து செயல்படுவதால், அருட்செல்வர் நினைவுச் சொற்பொழிவு நிகழ்ச்சியைச் சென்னைக்கு அடுத்து, கோவையிலும் சிறப்பாகச் செய்திருந்தார்.

– ந.நி.